# ரிஜிஸ்தர் அறிவிப்பு.



இதனால் சகலமான அச்சுக்கூடத் ததிபர்களுக்கும், புஸ்தக வியாபாரிகளுக்கும், இன்னும் மற்றுமுள்ள மகான்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்த யோக ஞான சாஸ்திரத் திரட்டு என்னு மிப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கிற சாஸ்திரங்களின முடிவிற் கண்டிருக்கிற ஒவ்வொரு மகான்களிடத்திலும் ஓலை ஏட்டுப் பிரதிகளைச் சகல சுதந்தரத்துடன் பெற்று, என் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலையேட்டுச் சாஸ்திரங்களையுஞ் சேர்த்து, இந்நூலுக்குப் போதுமான திரவியத்தைச் செலவு செய்து என்னால் கெவர்ண்மெண்ட் சட்டப்படி, ரிஜிஸ்தர் செய்திருப்பதால், இச் சாஸ்திரங்களைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடாதென்பதை இதன்மூலமாய்த் தெரிவித்துக்கொண்டேன்.

இப்படிக்கு,

இ. ராம. குருசாமிக்கோன்,

புதுமண்டபம் புத்தகஷாப், மதுரை.

கடவுள் துணை.

# முகவுரை.

உலகின்கண் சர்வேஸ்வரனால் உற்பத்தியாக்கப்பட்ட பலவுயிர்களினும், சுவேதஜம்-அண்டஜம்-உற்பீஜம்-சராயுஜமாகிய நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்கு லட்சம் ஜீவராசிகளிற் சிரேஷ்டமானது இம்மானிடப் பிறவியேயாம்; இதில் ஜெனிக்கும் சிசுக்கள்-பாலர்-குமாரர்-எவ்வனர்-விருத்தர்களாகிய ஆண் பெண்ணினங்களுக்குரிய சகல சுக துக்கங்களையும், தர்மார்த்த காம மோக்ஷ மர்மங்களையும், இகபர சாதனங்கட்குரிய இயல்பினையும், எண்ணிலாப் பிறவித் துன்பங்களையும், இஷ்ட காமியார்த்த இன்ப ரசங்களையும் எடுத்துக் கூறிய நூல்கள் பலவாயினும், அவற்றினை இனிது விளங்கக் கூறுவன: அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவாயுள்ள சின்மய சொரூப நிலையைப் பெற்ற தேவ, ரிஷி, முனி, சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய யோக ஞான சாஸ்திரங்களேயாம்.

இவ்வித சாஸ்திரங்களை வெளிவிடாது நமது முன்னோர்கள் தொன்றுதொட்டு ஓலை ஏடுகளிலெழுதி, வீடுகளில் காலை மாலை பூசையில் வைத்துப் பூசித்து வாசித்து வருவது யாவருக்குந் தெரிந்த விஷயமே. அப்படிப்பட்ட அரிய சாஸ்திரங்கள் நமது நண்பர் இ. ராம. குருசாமிக்கோனார் மூதாதைகள் கையாண்டுவந்த ஓலை ஏட்டுப் பிரதிகள் பலவாம், அவற்றுட் சிலவற்றையும், கனம் ந. ராம. கணபதியாபிள்ளை யவர்களிடத்திலும், என்னிடத்திலும் கைவசமா யிருந்த ஓலைச் சுவடிகளையும் ஒருங்கே திரட்டிப் பார்க்கையில், பதினெண் சித்தர்கள் பாடல்களிற் சில இருந்தும் சில இல்லாதிருக்கவே அதையுஞ் சேர்த்து அச்சிடக் கருதி "சொல்லும் பொருளுஞ் சுவையுங் கனியும், எல்லும் ஒளியும் இருப்பது போல, என்பாற் பிரியா தெழில் நட்பதனை, அன்பாற் கொண்ட அருமை நண்பர்" இ. ராம. குருசாமிக்கோனாரிடம் வெளியிட, அவரு மதற்கிணங்கி பல தேயங்களிற் சென்று சில ஏடுகளைச் சேகரித்துக்கொண்டு வந்தனர். அச்சமயம் தெய்வகடாக்ஷத்தால் திருப்பழனியின்கண் வசிக்கும் ஸ்ரீ கைலாச போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ கைலாச தெண்டாயுபாணி ரிஷீஸ்

வர சுவாமியவர்கள் தமது ஆச்சிரமத்திற் கையாண்டுவந்த பலசாஸ்திரங்களடங்கிய ஏட்டுச் சுவடிகளை வரப்பிரசாதத்துடன் கொடுத்து, அச்சிடும்படி உதவி புரிந்தனர்கள்.

எல்லாச் சுவடிகளையும் காயிதத்தில் எடுத்தெழுதிப் பார்க்கையில் அதிற் சில சாஸ்திரங்களில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு செய்யுட்களில் இரண்டுவரியும் மூன்றுவரியுமாகஇருந்ததுடன், சிலபாகங்களில் எதுகை மோனைக ளேதுமில்லா திருந்தன. அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டி, இப்புஸ்தகத்தில் அச்சிட்டிருக்கும் ஒவ்வொரு சாஸ்திரங்களின் முடிவிற் கண்டிருக்கிற நமது ஆத்மநண்பர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒரு பிரதிக்கு நாலு ஓலையேட்டுப் பிரதிகளைப் பெற்று அவற்றுள் வரைந்துள்ள விகிதப்பிரகாரம், அனேக மகான்களின் உதவியைக்கொண்டு என் சிற்றறிவுக் கெட்டியவாறு சீர்திருத்தஞ் செய்ததுமன்றி, இதற்கு தேவரிஷி முனிசித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய "யோக ஞான சாஸ்திரத் திரட்டு" எனத் திருநாமஞ் சூட்டிப் பன்னிரண்டு பாகங்களாக அச்சிட்டிருக்கின்றனன்.

இச்சாஸ்திரங்களை யெல்லாந் திரட்டி ஒன்றுசேர்த்து அச்சிடுவதற்காகப் பொருட் செலவும், தேகப் பிரயாசையும் எடுத்துக்கொண்டு சதா துணைக்கருவியாயிருந்த மதுரை புதுமண்டபம் புஸ்தக வியாபாரியும், ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸ் சொந்தக்காரருமாகிய நமது நேயர் இ. ராம. குருசாமிக் கோனாரவர்களது நன்றியும், தாலபத்திர சாஸ்திரச் சுவடிகளுதவிய ஏனைய நண்பர்களது நன்றியும் யான் என்றும் மறக்கித்தக்கனவன்று.

இவ்விதம் பன்னிரண்டு பாகமாய் அச்சிட்டிருக்கிற இவ்வரிய பெரிய சாஸ்திரங்கள் ஒரு புஸ்தகத்திலிருப்பது மற்றொரு புஸ்தகத்திலில்லாதிருப்பதால், பன்னிரண்டு வாலியத்தையும் பார்ப்ப தவசியம். ஆகையால் ஒவ்வொருவரும் இதனை வாங்கிக் கையாண்டு வருவீர்களென நம்புகின்றனன்.

இங்ஙனம்,
த. குப்புசாமி நாயுடு,
மதுரை



உ கணபதி துணை.

# ஏழாவது புஸ்தகம்.

## தேவ ரிஷி முனி சித்தர்கள் திருவாய் மலர்ந்தருளிய
## யோக ஞான சாஸ்திரத் திரட்டின்

அட்டவணை.

குமாரகுருபரன்றுணை.

## தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்
திருவாய்மலர்ந்தருளிய

# யோக ஞான சாஸ்திரத் திரட்டின்
## இவ்வேழாம் பாகத்தில் சொல்லியிருக்கிற
# முக்கியவிஷயங்கள்.

ஐயா! இந்த ஏழாம் பாகத்தில் சட்டைமுனிவர், இராமதேவர், ஈஸ்வரன், ஈஸ்வரி, அல்லமாப்பிரபு, அகப்பேய்ச்சித்தர், விளையாட்டுச் சித்தர், பிடிநாக்கீசர், காசிபமுனிவர், பதஞ்சலியார், கோரக்கநாதர், சுப்பிரமணியர் முதலிய மகரிஷிகளால் அருளிச் செய்யப்பெற்ற முப்பத்திரண்டு சாஸ்திரங்களில் அடங்கிய முக்கிய விஷயங்களை இதனடியில் காணலாம். அவையாவன:—

முதலாவது: சட்டைமுனிவர் ஞானவிளக்கம் ஐம்பத்தொன்றில், வேதாந்தம் சித்தாந்தம் பராசத்தி தெரிசனம் மவுனரசக்குளிகை மவுன தீட்சை, நிராமய விபரங்களையும், வாசி வசப்படும் விபரங்களையும், சூரணம் நடுவணை நாட்டம் தயிலமுறை அடிநடு முடி விபரங்களையும், சத்திபூசை காமப்பால் கானற்பால் நாற்பத்திமுக்கோண சக்கரம் பூஜாவிதி சித்தி விபரங்களையும்;

2-வது: சட்டைமுனி தீட்சை கற்பம் ஒன்பதில், கற்பமுறை குருமுறை தசதீட்சை நாசிநுனி நாட்ட விபரங்களையும்;

3-வது: சட்டைமுனி சூதகற்பம் ஏழில், சூதசூரண கற்பமுறை விபரங்களையும், பத்தியபாகம் கைபாகம் செய்பாகத்துக்குரிய விபரங்களையும்;

4-வது: சட்டைமுனி நிருவிகற்ப சமாதி பன்னிரண்டில், திருவாசி சமாதி தியான லட்சண விபரங்களையும், ஞான கற்பமுறை சூதக்கட்டுமுறை சோதிப்பா லருந்துமுறைகளையும், கெவுனம் பாயுமுறை முதலிய விபரங்களையும்;

5-வது: சட்டைமுனி பரிபூரணம் பன்னிரண்டில், முச்சந்தி செல்லும்வழி மூலம்பார்க்கும் வழி, நந்தி கணேசன் சத்திகளெட்டின் விபரங்களையும், மதியமுத யோக ஞானசித்தி வாசிமூலம் காயசித்தி குண்டலி சத்தி முதலிய விபரங்களையும்;

6-வது: வேதாந்த சூத்திரம் எட்டில், வேதாந்த முடிவும், சோதிதெரிசன நாட்டம் அஷ்டபதி பிராணுய விபரம், அஷ்டமாசித்து

வகைகளையும், மூலமந்திரம் செந்தூரமுறை பரகெதிக்குரிய மார்க்க முதலிய விபரங்களையும்;

7-வது: சட்டைமுனி நிகண்டு சூத்திரம் ஐம்பத்துமூன்றில், குருமுடிக்கும் பாகம சுண்ணம் நவகோண அட்சர விபரங்களையும்;

8-வது: சட்டைமுனி ஆதியந்த ஞானம் இரண்டில், அண்ட பிண்ட மொன்றென்றும் அண்டர்கோன்பதம்முதலிய விபரங்களையும்;

9-வது: சட்டைமுனி குரு சூஸ்திரம் இருபதில் முப்பூவினுல் குருமுடிக்கும் முறையும் அக்குருவினுல் வேதைசித்தியும் யோகஞான சித்தியும் கற்பகோடி காலம்வரை வாழும்வகை விபரங்களையும்;

10-வது: சட்டைமுனி சூஸ்திரம் ஆறில் அஷ்டாக்ஷரம் சரியை கிரியை யோகம் ஞானசித்தி விபரங்களையும் ரவி மதி விபரங்களையும் சிவயோகசித்தி விபரங்களையும்;

11-வது: சட்டைமுனி வாதசூத்திரம் இருபத்தைந்தில் லிங்க மெழுகு வேதை விபரங்களையும், குரு முடிக்கும்பாக விபரங்களையும்;

12-வது: சட்டைமுனி தண்டக பட்சணி எண்பத்தொன்றில், பராசத்திபூசை, திரிமூர்த்தி ஸ்தானம், சிவயோக பூசை, மதியமுத மார்க்கம், தில்லை திருநடன சித்தி, பஞ்சகர்த்தாள் குருநந்தி சித்தி, அஷ்டகர்மசித்தி, அண்டபிண்டம் கெவுனமணி குளிகை, திலதவகை, நிருவிகற்ப சமாதி, அஷ்டாங்க யோக விபரங்களையும்;

13-வது: சட்டைமுனிவர் வாலைரச கற்பம் பதினறில் சூதகற் பமுறையும், வாலைரசகற்பம் செய்யவேண்டிய விதியையும் அவை சாப் பிடக்கூடிய முறையையும், அதினுல் தீரும் வியாதிகளையும், பத்தியபா கங்களையும்,

14-வது: இராமதேவர் தண்டக பட்சணி நூற்றியொன்பதில், சவுக்கார குருமுறை, மைமுறை, செந்தூரம், தயிலவகை விபரங்களை யும்; சிவதீட்சை, சத்திதீட்சை, அஷ்டமாசித்து விபரங்களையும், சிவ யோக ஞான நிஷ்டை, சகல சித்திக்கும் விபரங்களையும்,

15-வது: பரைஞான கேசரி நூற்றியொன்றில், கேசரி சித்தி விபரங்களையும், சிவஞான யோகசித்தி, ரவி மதி சுடர்சித்தி, தேகசி த்தி, ரேசக பூரக கும்பக பூசைசித்தி, குரு உபதேச மார்க்கம், செய நீர், குருவேதை, அஷ்டகர்மவோம விபரங்களையும், கற்பசித்தி, காய சித்தி, ரசமணி விபரங்களையும், வாசியைக் கட்டி கெவுனம்பாயும் வழி

யையும், சஞ்சாரசமாதி சித்தியும், நேத்திர சிந்தாமணிக்குளிகை விபரங்களையும்;

16-வது: ஈஸ்வரன் வாக்கிய சூஸ்திரம் அறுபத்திமூன்றில், சகல கலைக்கியானம், நந்திதேவருக் குபதேசம், மவுன அட்சரம், பராசத்தி, சதாசிவ தெரிசனம், மூலமுதலாறுதார தேவதை சித்தி விபரங்களையும்;

17-வது: ஈஸ்வரி வாக்கியம் பதினொன்றில், நவக்கிரக சக்கரம் அதன் அட்சரங்களின் பூஜாவிதிமுதலிய விபரங்களையும், சததிசித்தி கருமவிபரங்களையும்,

18-வது: சிவபெருமான் குருநாடி பதினாறில், குருநாடி நுட்பங்களையும், அந்தந்தநாடியின் தொழில்களையும்.

19-வது, சிவபெருமான் மெய்ஞ்ஞானநாடி முப்பதில், நாடிகளின் விபரங்களையும்,

20-வது: அல்லமாப்பிரபு நாடிசாஸ்திரம் பனிரெண்டில், நாடிகள் முக்கியமாய்த் தெரிந்துக்கொள்ள வேண்டிய விஷயங்களையும் அதன்குறிப்புகளையும்;

21-வது: அகப்பேய் சித்தர் பூரணஞானம்பதினைந்தில்,ஏகநிராமயம், சோதி பூரண மெய்ஞ்ஞானம், வாசி சிவயோகம், இடகலைபிங்கலை சுழிமுனை மார்க்கம், பஞ்சாட்சர விபரங்களையும், பரிசம் எட்டின் விபரங்களையும், நடுவணை ஞான விபரங்களையும், கலைமாறுத விபரங்களையும்,

22-வது: அகப்பேய் சித்தர் பாடல் தொண்ணூறில், பராபர விந்துநாத மகிமை, தராதல முற்பத்தி, பஞ்சபூதம் தசநாடி விபரங்களையும், தத்துவத்தின் விபரங்களையும், அட்சரம், சோதிசொரூபதெரிசனம்முத்தி, முத்திமோட்ச விபரங்களையும்;

23-வது: விளையாட்டுச் சித்தர் ஞான சூத்திரம் பதினெட்டில், அண்டபிண்டம், சத்திசிவம், பரமாத்மா, பூரணமுத்தி, மோட்சநிலை, ஏகபராபரவஸ்து, வாசி சுழிமுனையில்செல்லு மார்க்க விபரங்களையும், மெய்ஞ்ஞான யோகம், மூதண்ட கிஷாயம், லேகியம், குண்டலிசத்தி, பூரணமதியமுத மார்க்கம், முதலிய விபரங்களையும்;

24-வது: விளையாட்டுச் சித்தர் பாடல் முப்பத்திரண்டில், ஆதி, சத்திசிவம், சோதிசொரூப விபரங்களையும், பிரபஞ்சத்துள் இடம்

பொருள் ஏவல் இவை முதலியது பொய்ப்பொருள் விளையாட்டென்றும், மெய்ஞ்ஞான மொன்றே மெய்ப்பொருள் என்றும், அதற்குரிய விபரங்களையும்; தெளிவாய்ச் சொல்லப்பெற் றிருக்கின்றன.

25-வது: விளையாட்டுச் சித்தர் பாடல் பதினேழில், வாதக்குரு விபரங்களையும், சுண்ணம் முடிக்கும் விபரங்களையும் அதன் குட்சங்களையும்;

26-வது: பிடிநாக்கீசர் வைத்திய சூஸ்திரம்பதினொன்கில், தேகம் பலப்படும் விபரங்களையும், காயசித்தி, யோகசித்தி விபரங்களையும்;

27-வது: காசிபமுனி ஞானம் இருபதில், யோகசாதனை, கற்பமுறை ஞானமுதலிய விபரங்களையும்,

28-வது: பதஞ்சலியார் சூஸ்திரம் பதினாறில், வாதத்தின்வழியையும் அதன் குருவையும், முடிக்கும் முறைகளையும்;

29-வது: சட்டைமுனி வாத சூஸ்திரம் இருநூறில், சவுக்காரம் குருமுடிக்கும் பாகம், சுண்ணமுறை, செந்தூர முறை, செயநீர் வேதை முறை, காயசித்தி முறைக்குரிய விபரங்களையும், வாசி வசப்படும் விபரங்களையும், பிராணாய விபரங்களையும், சஞ்சார சமாதி விபரங்களையும், சொரூபமணிக் குளிகை, காந்தக் கிண்ணம், கற்பமுறை, முதலிய விபரங்களையும்;

30-வது: கணபதியோகம் பத்தில், கதிர் மதி சுழிமுனையின் காட்சியையும், அடிமுடி காணும் பிரமநிஷ்டை விபரங்களையும்,

31-வது: சுப்பிரமணியர் ஞானதீட்சை பதினாறில், தசதீட்சை செய்யும் விபரங்களையும், பதினாறு கலையின் தோற்றங்களையும்;

32-வது: சுப்பிரமணியர் நாடி முப்பத்திரண்டில், நாடிகளின் குறிப்புகளையும், அதன் பேதாபேதங்களையும்

33-வது: இராமதேவர் சூஸ்திரம் பத்தில வகாரங்களையும் சொல்லும்

இதற்குமுன் ஏற்பட்டிருக்கிற ஆறும்பாகம்கடைசியில், ஏழாம் பாக விஷயங்களிற் கூறியிருப்பதில் மூன்று சாஸ்திரங்களுக்குமட்டும் சிற்சில பாட்டுகளில் வரிகள் குறைந்தமையால், அதைப் பின்னிட்டு அச்சிடும் பாகங்களில் சேர்த்துக் கொள்வதாய் நிறுத்தி, அதற்காக இத்துடன் பத்து சாஸ்திரம் கூடச்சேர்த்து, அச்சிட்டிருக்கிறதென்றறியவும்;

---

இ. ராம. குருசாமிக்கோன்

பரமபதிதுணை.

# தேவ, ரிஷி, முனி, சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

## வைத்திய வாத யோக

# ஞான சாஸ்திரத் திரட்டு.

"ஏழாம்பாகம்"

## சட்டைமுனிவர் ஞானவிளக்கம் ருக.

காப்பு.

ஆதியிலே மறைபொருளைச் சுருக்கமாக
　　ஆனந்த அற்புதமாய் நூலிற்சொல்லச்
சோதிமய மானபொரு ளாதியந்தம்
　　சொன்னவே தாந்தஞ்சித் தாந்தம்ரெண்டும்
நீதியுடன் சட்டைமுனி நூலேசொல்லும்
　　நிச்சயமாய்ப் பதினெட்டுப் பேரும்மெய்க்கப்
பேதியா தொருமனதா யிருந்தருட்சம்
　　போறிவே பூரணமா முதலாங்காப்பே.

நூல்.

அன்றுமுத லரிசுழியாய் வெளியுமானள்
　　அம்மம்மா வென்றுசொல்லச் சும்மாபோமோ
அன்றுமுத லாறுதல மொன்றாய்க்கண்டேன்
　　அவளிருந்த ரீங்கார முப்பரிக்கை
அன்றுமுத லட்சயமாய் நின்றதேவி
　　அரிஓம்க மாவென்ற சிவாயரூபி
அன்றுமுத லெனையீன்று வீன்றபோதே
　　அம்மாளைச் சும்மாநான் விட்டிடேனே.

விட்டிடே னென்றமொழி வினைஅல்ல
வேதாந்தச் சிரோமணித்தாய் மெய்க்கக்கேளு
விட்டிடே னதோமுகத்தில் வட்டமேறி
மேலேறிக் கிழாகி முப்பாழ்தாண்டி
விட்டிடேன் விட்டசரம் நாவிற்பூணை
வெட்டவெளி தனிலொருமா வெளியிலேறி
விட்டிடேன் விட்டகுறை விதியாலந்த
வேதாந்தப் பூரணத்திற் புக்கினேனே.

புக்கினே னறிவாலே அறிவைக்கண்டு
பூரணத்தா யாடுகிற காலிற்பூண்டு
சிக்கினேன் கால்தலையாய் நின்றகாலிற்
சிவசிவா தலைகாலாய் மவுனங்கொண்டு
சொக்கினேன் களையான சுகத்தைச்சொல்லச்
சொல்லேது சொல்லுதற்கு வாயோ இல்லை
கக்கிஷமோ கக்கிஷந்தா னில்லையாரு
கனவெளியாம் ஒளியான கருவைப்பாரே.

கருக்குருவாய் முடிந்தகுரு நிழலைப்பற்றிக்
கண்டுகொண்டாற் பார்மீது கோடிக்கொன்று
திருப்புனலில் மூழ்கியெழு கிரியைச்சுற்றிச்
சிவமான தெரிசனையைப் பெற்றோர்கோடி
விருப்பமுடன் சிவயோகத் திருந்துஞானம்
மேலான பதம்பெற்றோ ரனேகங்கோடி
மருப்பாகக் கவனரச குளிகைசெய்து
வாயடக்கஞ் செய்துவெளி யேறினாரே.

ஏறினா ரனேகமடா மலைகடோறும்
இருந்திட்டார் மவுனரசக் குளிகையாலே
ஆறினார் தீட்சைமன தற்றேபெற்று
அவனிதனி லிங்கமதாய் முளைத்தோர்கோடி
தேறினார் தெளிந்தபின்பு முறைதப்பாகச்
செய்ததினால் மனமிழந்து செத்தோர்கோடி
மாறிவரும் பூரணத்துட் கலந்துகொண்டு
மாசற்ற நிராமயமா யிருந்திட்டாரே.

## சட்டைமுனிவர் ஞானவிளக்கம் ௫௧.

இருந்திட்டா ருலகசமு சாரவாழ்க்கை
இணங்காம லிணங்கியே பூரணத்தை
வருந்திட்டார் லட்சயத்தைத் தொட்டேநின்று
மவுனநிலை யறிந்துகுரு நிழலைப்பற்றி
இருந்திட்டார் நினைத்தபடி மனதைமூட்டி
இவ்வளவென் றறிந்துயிரு வினையுந்தள்ளி
இருந்திட்டார் மூவேழு முறையைப்பார்த்து
எட்டெட்டு மாடினார் கோடிதானே.

கோடியிலே யொருவரிப் படியேயானோர்
கூறுதற்கு எத்தனையோ லெக்கோயில்லை
ஆடினா ராட்டம்பூ ரணத்தைக்கொண்டு
ஆகுமன மல்லோவிப் படியுமாச்சு
வாடிமன மலையாதே பூர்வமாக
மவுனத்தால் விட்டகுறை வந்தாலெய்தும்
ஓடிவரும் நீருகி லளப்பார்காலை
உருகாம லூழிவெளி யேறுவாரும்.

ஏறுதற்கு மனமுரைத்து வெகுளியற்று
எட்டிரண்டைக் கண்டறிந்து மாயையற்று
வாறுதற்கு இருபுரவி மதியாதித்தன்
வாசியென்ற குதிரையது நாற்காற்சிவன்
ஏறுதற்குச் சினமுடன் கடிவாளம்பார்
ஏதலையா முனதுடைய விதிதானையா
கூறுதற்குச் சட்டைமுனி நானேசொல்வேன்
குறிப்பறிந்த பிள்ளைகளே கூர்ந்துபாரும்.

பாருறுதி நடுவணையே யெட்டதாகும்
பகர்ந்தசொல்லைக் கண்டறிநீ அதுவேரண்டாம்
ஓருறுதி மனதுகடி வாளம்பூட்டி
உற்றுப்பார் பத்துக்கல் லணையுமாச்சு
சீருறுதி வாசியின்மே லேறிவாகை
திருப்படா யெட்டெட்டு வெளியாம்வீதி
ஆருறுதி யிதையறிவை அறிவாய்பிள்ளாய்
அறிவான பிள்ளைகளே அறிந்துபாரும்.

அறிந்தறிவை அறிந்தவெளி தன்னிலேறி
அகண்டபரி பூரணமாய்ச் சன்னிகொண்டேன்
அறிந்தமறை பொருளான கருக்களென்ற
ஆச்சரிய மின்னமிதை விரித்தன்றாய்த்.
தெரிந்தமட்டு மௌனமுடைய குருவேயியா
செப்புவீர் கிரியையென்ற காட்டமெல்லாம்
மாந்தனிர்கள் செடிபூடு கருவின்மூலி
மறைபொருளின் கருவையெல்லாஞ் சொல்லுவீரே. (10)

சொல்லுவீர் நாதாந்தப் பொருளேநாதா
சொரூபசித்தி முத்திபெற்ற கருணைமூர்த்தி
வல்லபமாய்த் தொண்ணூறோ டாறுசட்டை
வாங்கியதைக் கழற்றிவிட்ட முனியேயென்னைச்
சொல்லவமாய்ப் போகாமற் கருணைவைத்துச்
சொல்லுவீர் சூட்சத்தின் கருவையெல்லாம்
நல்லறிவே கைலாச வர்க்கமான
நடுவணையின் நாட்டமெல்லாம் நவின்றிடீரே. (11)

நவின்றசற் குருபரனே யென்றுகேட்டாய்
நன்றாகு மௌனமுடைய பிள்ளாய்கேளு
நவின்றமறை பொருளான வேதநூல்தான்
நான்முகனுக் கரியனிக்க அறிவிருந்து
நவின்றசாஸ் திரபுரா ணங்களெல்லாம்
நான்காணக் கொங்கணர்தான் சொன்னார் நூலில்
நவின்றனன்பார் கருக்குருவாய் மறைப்புவித்தை
நடுவணைநாட் டங்கள்கரு மூலிதானே. (12)

மூலிதிரு மூலரவர் பேரன்சொன்ன
முப்பொருளாங் கடைக்காண்ட மைந்நூறுக்குள்
சோலியது இல்லாத பூசைசொன்னார்
சொற்பேத மில்லாத கருவையெல்லாம்
மூலியது கால்தலையா யேறச்சொன்னார்
முத்தியென்ற முத்திக்கோர் மூலஞ்சொன்னார்
நாலிருக்கால் முக்காலின் பொருளைச்சொன்னார்
நாற்பதுந்தா னறுபதுமே வழலைதானே. (13)

வழுவையது நிட்சைமுதற் கருவுஞ்சொன்னோர்
　　வையகத்தோ ரறியார்கள் வியன்சொன்ன
பழமையது மெய்ச்சருக்க மைம்பத்தொன்றும்
　　பழம்பொருளா மறைபொருளு மதிலேதொன்றும்
இளமைமுது மொழிகலைக்கி யானுக்காம்
　　இருநூற்றிற் சகலகலைக் கியானமெல்லாம்
களபகுய மாதுசிறு பிள்ளைவாலை
　　கண்ணொளிக்குட் டோன்றுமது கன்னிப்பாரே. (14)

தயிலம்.

தன்னைத்தா னறிவதுமெய்ச் சருக்கந்தன்னிற்
　　சந்தேக மொன்றுமிலை மறைப்புவித்தை
தன்னைத்தா னறிந்துஅதி லுள்ளதெல்லாம்
　　தவறாமல் நூல்பார்த்து முறைதப்பாமல்
தன்னைத்தான் சேர்த்துகரு மையினோடே
　　தலைமண்டை யோடேனே மாவின்மூலி
தன்னைத்தா னெடுத்துரசஞ் சுருக்குத்தாக்கித்
　　தசைநாதங் கைமுறையாய்ச் சுருக்குத்தாக்கே. (15)

தாக்கியபின் ரவிமுகத்தி லெட்டுநாளும்
　　சாதகமா யாறவைத்து நவநாட்கேளு
போக்கெனவே கினையாதே புத்துத்தேனைப்
　　பூரணமாய்க் கலந்தாட்டிக் கலத்திலப்பி
மார்க்கமாய் ரவிமுகத்திற் சாரவைத்தால்
　　மைந்தனே தயிலமது இறங்கும்பாரு
நோக்கியதை மெய்ச்சருக்க மையிற்சேரு
　　நூல்முறையை யறிந்ததுறை முறையாய்ச்செய்யே. (16)

செய்முறைக ளனைத்தவறு திதனைச்சொன்னோம்
　　தீர்க்கமடா மறைபொருளாய் நின்றமூலம்
பொய்யுரைகள் சொல்லவில்லை தப்போவில்லை
　　போகர்பிள்ளை கருவூரா ரவர்க்கேசித்தி
வைமுறையாய் வைத்தமையைச் சிமிழில்வைத்து
　　மாதாவின் பாதமதில் வைத்துப்போற்று
உய்யும்வகை மெய்ச்சுருக்கந் தன்னைச்சொன்ன
　　உற்பனத்தை மவுனத்தாற் றியானம்பண்ணே. (17)

பண்ணுவது சாமமொன்றே மூரைநாடிக்குட்
பற்றிப்பா ரம்மம்மா ஊமையூமை
அண்ணுமுத லெண்ணுமிது ஆதியந்தம்
அரிக்குமுத லானவெழுத் தாகும்பாரு
கண்ணுமது மனக்கண்ணாற் பதிந்துபாரு
கருவாகும் உருவாகும் குருவுமாகும்
எண்ணுமவ ளழியாத ஆத்தாளுமை
யேழறைக்கு எம்மாளு மேழைதானே. (18)

ஏழையவள் தானேழை நாளுமேழை
எனையறிந்தேன் என்னைத்தாய் தியானம்பண்ண
நாளையல்ல பின்னையல்ல லக்ஷணத்திற்கேளு
நவிலாத வூமையெழுத் துனக்கேசித்தி
வேளையிது பாருனக்கு ஆத்தாள்பாதம்
விருதுபெற அர்ச்சித்துத் தியானம்பண்ணு
காளைதனி லேறிவரு மீசன்சத்தி
கைகண்ட சத்திதரு மையுமாச்சே. (19)

மையினுட அருமைவெகு பெருமைமெத்த
வாதுசொல்லி விளையாட அச்சமில்லை
கையுமெய்யாய்ப் பார்த்துவிடு உலகத்தோர்கள்
கசடான திருடரைத்தான் சண்ணியேறு
தையலுமை மாதுசிறு பிள்ளைவாலை
தானரிய நிசமிதுதான் தப்போஇல்லை
ஐயமில்லை பயமுமில்லை புருவமையத்
தணிவிரலாற் பணவெடைதான் திலதம்போடே. (20)

போடுவது திலதமடா மூலர்மைந்தர்
போகர்கரு வூராரைத் தியானம்பண்ணு
நாடுநக ரதனிலுள்ள ஜீவசெந்து
நாதாக்கள் சித்தருக்குந் தோணுதையா
ஏடுதனி லெழுதினதோர் பாடலென்று
எண்ணாதே ஒருநாளுந் தப்போஇல்லை
தேடினபேர் பொருள்கோடி தனமீந்தாலும்
செப்பாதே யிக்கருவை யுலகத்தோர்க்கே. (21)

உலகமதிற் பிரபஞ்ச மாயைதள்ள
ஒருவரால் முடியாது கடினமெத்தப்
பலகலைகள் வேதமொடு சாஸ்திரங்கள்
பலதொழில்க ளேதேது கற்றாலுந்தான்
நலமிடர்கள் வருவதையுந் தள்ளப்போமோ
நாதாந்த நடுவணையைக் காண்பதுண்டோ
குலமறியச் சுக்கிலத்தைக் கலந்துகொள்ளக்
குருமுனிவர் திருவடியைப் பூணுவேனே. (22)

பூண்டுகொள்ளக் குலங்காட்டுங் குறியைக்காட்டும்
பூரணநூல் தனையறியப் புத்திகாட்டும்
ஆண்டுகொள்ளும் பூரணந்தான் தனக்குத்தானே
ஆதியடி முடிகாட்டு மறிவைக்காட்டும்
வேண்டுவது விளக்கெரியத் தூண்டுகோலாய்
வேதாந்த நூற்பொருளைத் தூண்டச்சொன்னேன்
மாண்டிறந்து போகாதே மைந்தாகேளு
மனமிறந்த மகிமையதால் முத்தியாச்சே. (23)

ஆச்சென்று சொன்னதைநீ அறிவதெப்போ
தடிமுடிவும் நடுவணையைப் பெறுவதென்றோ
மாச்சலென்ன வொருமூச்சா யென்னைப்பாரு
மம்மாவோ யின்னுபா ரென்னைத்தானே
தீச்சுட்ட புண்ணுலா றும்பாரு
தீராது யென்நாவாற் சுட்டபுண்ணு
ஆச்சென்று சட்டைமுனி சொன்னபேச்சை
அறிந்துபா ருன்னையறிந் தென்னைத்தானே. (24)

தானேநீ யிடசூட்சங் காலைக்கண்டாற்
றவறாது எத்தொழிலுஞ் செய்வாய்பாரு
நானேதான் சொன்னேன்கேள் சத்யமாக
நற்கால முனக்குவரு மித்தைப்பாரு
தேனேசொல் லென்பேச்சை யிகழவேண்டாம்
சித்தித்த பொருள்சொன்னே னருளைச்சொன்னேன்
கானலைநீ ராமெனவே ஓடிநீயும்
கால்தளர்ந்து வீழாதே கருவைப்பாரே. (25)

பாரேநீ கதிரோனை மறைக்குமேகம்
பகலவனை மறைத்ததுபோ லுனக்குமாயை
பாரேநீ மனக்கண்ணா லறிவைத்தானே
பகையான மாயையற அருவிலேறு
பாரேநீ அறிவுக்கோர் சாவுமில்லை
பண்டுள்ள வேதமொழி யிந்தநூலைப்
பாரேநீ பராபரந்தான் வெளியுமாச்சு
பரவெளியில் மாயையெல்லா மற்றுப்போச்சே. (26)

அற்றுப்போச் சுற்றுப்பா ருற்றசெய்தி
அமுதமடா சஞ்சீவி யதிகஞ்சொல்வேன்
உற்றுக்கேள் மயிரிழைபோ லாளிநாளம்
ஓடியது மூலவேர்க் கிழங்காமங்காய்ப்
பற்றிப்பார் கிழங்கதனை யெடுத்துக்கொண்டு
பரிதிமுக மூலரவைத்துத் தூளேசெய்து
நற்றிப்யார் குமரிகற்பத் தமுதேயூட்டி
நாலுநா ளுலரவைத்து மறுநாட்கேளே. (27)

சஞ்சீவி கற்பம்.

கேளடா வமுரிதனைத் தேற்றான்வித்தால்
கிருபைபெறத் தேய்த்ததனைத் தெளியவாங்கிக்
கேளடா அரைப்படிதான் வஸ்துவாங்கு
கெட்டியாய்ப் படியொன்றி லதனைப்போடு
கேளடா மூன்றுநா ளிருந்தாற்சேநீர்
கொர்ச்சிதங்கொண் டாறுநாட் கொள்ளும்போது
கேளடா மூலமுத லாறுதாரம்
கெதியான தலமாறு மொன்றாய்ப்போச்சே. (28)

போச்சடா வியாதியெல்லா மொழிந்துபோச்சு
பூரணத்தோ டறிவேறில் லகிரியாச்சு
பேச்சடா யின்னுமந்தப் பொடியைநீயும்
பிசகாதே ரவிமுகத்தி லுலரவைத்து
மூச்சடா அடக்கிவெரு கடியேகொள்ள
மூக்காலும் வசியமது சித்தியாச்சு
பேச்சடா பிரபஞ்சக் கடலைத்தாண்டிப்
பேரறிவே தோணியதா யதன்மேலேறே. (29)

ஏதுமற தொழிவில்லை கடலைக்கண்ட
எட்டாத அறிவுகொண்டு எட்டுந்தோணி
சீறுறுதி நாலும்பேர் கூடிப்பேசித்
தீர்ந்தமொழி அமுதசஞ் சீவியென்றும்
கூறறிவாய்க் கொள்ளும்போ தறிவேதோன்றிக்
கொண்டேறிக் கோடியிலே யொருவனையா
ஏதுவது யெப்பொழுது அறிவாய்பிள்ளாய்
எப்படியோ உனக்குக்கே விதிதான்பாரே.

விதியயன்மால் ருத்திரனும் மகேசன்றானும்
விண்ணொளியிற் சதாசிவனு மைந்துபேரும்
பதியுனது பதியறியா மகத்துள்வாழும்
பதியறிய எனதுடைய நூலேசொல்லும்
கதிபெறவு முனதுடைய விதியுந்தோன்றக்
காட்டுமிது மெய்ப்பொருளைக் கண்டுபாரு
மதிபுருவ மையமது குருவைக்காண
மனதறிந்த வுண்மையிது தன்னைப்பாரே.

உண்மையிந்தப் படிசொன்னே னுனக்கேயுண்மை
உறுதிபெற அறிவாலே கருதிப்பாரு
உண்மையிந்த நூலுனக்குக் குருவுமாகும்
உற்பனமா யுற்பனமா யுள்ளன்பாக
உண்மையிது உற்றுப்பா ருறுதிசொன்னேன்
உத்தமனே சஞ்சீவி மருந்துசொன்னேன்
உண்மையிது போறிவா யுகந்துகொள்ள
உனதுவிதி எப்படியோ உற்றுப்பாரே.

உற்றுப்பார் சஞ்சீவி மருந்துகொள்ள
ஓடாது விட்டகுறை வந்தாலுண்டாம்
ஓற்றுப்பார் உடலுயிராய் நின்றமார்க்கம்
உடல்கிடக்க வுயிர்போனாற் சவந்தானென்பார்
பற்றிப்பார் நான்சொன்ன நூலிலுள்ள
பயனறிந்து கொண்டவனே அவனேசித்தன்
சித்திப்பார் மனதறிந்த நூலாயிந்தத்
திடமான சஞ்சீவி தின்றுபாரே.

இன்றுபார் பூரணமாய்க் கொள்ளும்போதே
தீர்க்கமடா கயிலாசத் தேகந்தேகம்
அன்றுநீ செனித்தவுடல் விந்துநாதம்
அனுகதமாய்ப் போகாம லறிந்துகொள்வாய்
மன்றுமுத லாகாச மூலவர்க்கம்
மனதறிந்த கயிலாச வர்க்கம்ரெண்டும்
இன்றுபார் சட்டைமுனி நானேசொன்னேன்
இகழாத சஞ்சீவி முறையாகும்மே. (34)

ஆமிந்தச் சிரசஞ்சு பஞ்சபூத
மானதொன்றாய் நடுவணையி லேறிக்கண்டோம்
போமந்தக் காண்டமுடன் நிகண்டைநன்றாய்ப்
பொருளாயி ரத்திருநூ றதனிற்சொன்னோம்
ஓமந்தப் பூரணத்தின் பேரைச்சொன்னோம்
உன்புத்தி பற்றாதோ பிள்ளாய்பிள்ளாய்
நாமிந்தப் படியுரைத்தோம் விவரமாக
நலமறிந்து கைமுறையாய்ப் பார்நீதானே. (35)

தானேநீ நிகண்டைநன்றாய்ப் புத்தியாலே
தானறிவாய் பார்கருக்க ளெல்லாந்தோன்றும்
நானேநீ யானதினால் நிகண்டைப்பாரு
நன்னூலாய்ச் சொன்னதிந்த நூலைப்பாரு
மானேதான் பூரணத்துக் குள்ளேநாட்டு
மனதறிய முக்காலு முனக்கேசொன்னேன்
தேனேசொல் மொழியான இன்னூல்தன்னிற்
சித்தாதி மூலமெல்லாந் தோணும்பாரே. (36)

தோணுமது சத்தியடி முடியின்மையம்
தொண்ணூற்றொ டாறுமே பொருளொன்றாகத்
தோணுமது ஆண்பெண்ணாய்ப் பெண்ணுமாணாய்த்
தொந்தமென வந்தகுரு மூலந்தோணும்
பூணுவது முப்பொருளாம் பூரணத்தைப்
போதகமா யறிந்துகொள்ளப் புத்திசொன்னோம்
ஆணவமாம் மும்மலத்தை யறுக்குமூலி
யானதிந்த நூல்பாரு மைம்பத்தொன்றே. (37)

ஒன்றான பொருள்தோணக் கருவைச்சொன்னேன்
உற்பனமாய்க் கண்டறிந்து கொண்டாயானால்
நன்றான சிவயோகி நீயேபிள்ளாய்
நாம்சொன்னோம் பதினெட்டுப் பேருஞ்சொன்னார்
மன்றான வுலகத்தோ ரறியமாட்டார்
மனதுறைந்து அறிவறிந்து கொள்ளமாட்டார்
அன்றான தின்றுமுதற் பதினெண்பேரும்
ஆனதொன்றாய் நின்றபொரு ளறிவித்தோமே. (௩௮)

அறிவறிவாய் அறிந்துகொள்ள மாட்டாயானால்
ஐயனே யானுனக்கு யென்னசொல்வேன்
குறியறிய இன்னமொரு அதிதவித்தை
கூறுகிறே னிதையறிவாய்க் கூர்ந்துகேளு
தரியலர்கள் பொடிபடவுந் திசைகளெட்டும்
தான்வெல்ல மறவேந்த ரரசுசெய்யப்
பிரியமுடன் ராசரீகஞ் செய்வோன்தன்மம்
பிரபலமாம் அவன்கையி லிருந்தவாளே. (39)

சரஸ்வதி விஜயதசமி பூஜை.

வாளதுக்கோர் கன்னியுட மாதந்தன்னில்
மாவிஜய தசமிதனிற் பூஜைசெய்து
வாளதுக்கோர் நவராத்ரி தன்னிலன்பாய்
மாசத்தி விஜயமா தேவிதேவி
வாளதுகைக் கொண்டமா தங்கிசூலி
வல்லணங்கு வீரியொண் டோளிநீலி
கோளறுக்கும் ரணகாளி யகோரருத்ரி
கூறெட்டி ரண்டான குமரிதானே. (40)

குமரிவெகு திரிசூலி கபாலிநீலி
குரும்பர்கரு வறுத்தமகா குரும்பிவம்பி
விமலைசம ராடுசத்து ராதிதன்னை
வெற்றிபெறச் சத்தித்த சத்திபூஜை
சமரசமாய்ப் பிரதமையின் முதலாமாதி
சங்கற்ப நவமிமுதற் றசமிமட்டும்
குமாரகுரு பராதேவி வேலேயென்று
கூறியவா ளதனைவலக் கையால்வாங்கே. (41)

வாங்கியந்த மந்திரவாள் திசையிலிந்திரன்
வசியமுதற் றிசையெட்டும் விசைகென்று
ஓங்கியதை யிந்திரன்றன் திசையிற்சேரு
ஓம்பர வசியஜெக வசியமாகப்
பூங்கமல மாதுநீ வாவாவென்று
பூரணமாம் விஜயமா தேவிசக்தி
மாங்கமழும் வாசமுப சாரத்தோடு
மந்திரவாள் தனைவைத்துப் பூஜைசெய்ய. (42)

பூஜைசித்தி சத்திக்கும் பிரியமாகப்
பூரணமாம் அட்டகும்ப மெட்டுத்திக்கும்
ஆசைவைத்து அன்புடனே கும்பம்வைக்க
அடியரிசி யொருபடிதான் பரப்பிமேலே
காசலையாம் பிரணவத்தை யெழுதக்கேளு
கனககும்பம் வைத்ததற்குப் பட்டுவஸ்திரம்
வாசமைய மெனப்பூண்டு களஞ்சிதங்கம்
வாமத்தோ டாவின்பால் இளநீராமே. (43)

ஆமப்பா தங்கம்போட் டதன்மேலாகும்
அப்பனே மாந்தளிருந் தேங்காய்வைத்து
ஓமப்பா பரிமளமாஞ் சுகந்தபுட்பம்
உடன்சாத்திப் பால்பழமும் பலகாரங்கள்
தாமப்பா வாமமொடு சத்திவைத்துச்
சகலவுப சாரமுடன் அன்னம்வைத்துக்
காமப்பால் கானத்பால் அறிந்துகொண்டு
கைமுறையாய்ப் பூசைசெய்ய வகையைக்கேளே. (44)

கேளடா வர்க்கவகை சமையலெல்லாம்
கெட்டியாய்க் கும்பவலப் பாகம்வைத்துக்
கேளடா கும்பமெல்லா மொன்றுபோலே
இருமைவரா ஆக்ராண மென்னச்செய்வாய்
கேளடா சாம்பிராணி தூபதீபம்
கிரிமாவோ டட்டசத்தி அகிமாவென்று
கேளடா வெற்றிலையே அர்ச்சனைக்குக்
கெதிகொண்டு அர்ச்சிக்கச் சித்தியாமே. (45)

சித்திக்கும் வெற்றிலைதா னூற்றேயெட்டிற்
சிறக்கவே படிபாதி சுண்ணாம்பூசி
சித்திக்கும் பாரைம்பத் தொன்றும்பாக்கைச்
சீவியே படிபாதி பிரம்பாய்ச்செய்து
வத்திக்குஞ் சுண்ணம்லா இலையாம்பாக்கை
வாவெனவே நடுவெழுத்தை மவுனங்கொண்டு
புத்திக்கு ஞானதிமந்த்ர வாளிற்றாளிற்
போற்றிவலப் பாகத்தர்ச் சனையேசெய்யே. (46)

செய்யடா சுண்ணமிட்ட யிலையும்பாக்கைச்
சித்திக்க பொருட்சுருளு மிடப்பாகத்தே
செய்யடா அர்ச்சனையே செய்துபாரு
தீர்க்கமடா அட்டதிக்குஞ் செயமாம்வெற்றி
பொய்யடா சொல்லவில்லை ஐயாகேளு
புத்தியில்லாப் பிள்ளையென்று லெண்ணசெய்வேன்
வையடா வுலகமெல்லா மொருவனாள்வான்
வாச்சுதடா பூசைகன்னி மாசந்தானே. (47)

தானென்ற கன்னிமா தேவிசத்தி
தனக்குமவ ளம்மம்மா சத்திபூசை
நானன்றாய்ச் சொன்னதைநீ யறிந்துபாரு
நான்மறையின் பொருளறியத் தியானம்பண்ணத்
தேனென்ற நடுவணையை மவுனங்கொள்ளச்
செப்பினே னுட்பொருளை யறிந்துகொள்வாய்
ஊனென்ற சடமெடுத்தா லித்தப்பூசை
உற்பனத்தை யறிந்துகொள்ள முத்திதானே. (48)

முத்திதருஞ் சித்திதருஞ் சத்திபூசை
முக்யமுடன் முடிந்தபின்பு சொல்லக்கேளு
வத்தனைக்கும் பத்தின்முப் பொருளாய்நின்ற
வாமமது பாவிளநீர் தங்கமான
பத்தியுடன் முப்பொருளா மென்றுநீயும்
பதியுடனே வுட்கொண்டார் பெற்றபேறு
சத்தியமே தானவனு முண்மைசொன்னேன்
தங்கமெட்டுக் களஞ்சியைத்தான் தகடுசெய்யே. (49)

### நாற்பத்து மூக்கோணம்.

செய்திடுவாய் கொங்கணர்தன் கடைக்காண்டத்திற்
  செப்பினதோர் நாற்பத்து முக்கோணத்தை
உய்திடவே சொன்னதெல்லாம் பிசகாமற்றான்
  உற்பனமாய்க் கைமுறையா யெழுதிக்கொண்டு
நையறிவா யுன்றுவிற் றங்கம்பூரி
  நாற்பான்முக் கோணநீங் கென்றுமே சவி
தையல்சிறு பிள்ளையென்ற வாலைதேவி
  க்ஷணத்திலே பிரசன்ன மாவாள்தானே. (50)

ஆவாள்பார் மந்திரவா ளவளேயானுள்
  அறந்தழைக்கப் புவனமெல்லாம் ஆளச்சொல்வாள்
நீவாழ்வா யென்றன்று அகத்தில்வாழ்வாள்
  நிச்சயமாய்ச் சத்தியமாய்ச் சொன்னேன்சொன்னேன்
நாவாலே நீயுரைத்த தெல்லாஞ்சித்தி
  நாதாந்த நடுவணையின் தியானத்தாலே
நீவாவென் றுரைத்தமறைப் பொருளின்மார்க்கம்
  நேசமைம்பத் தொன்றுனுன் முற்றுமுற்றே. (51)

ஐம்பத் தோரக்ஷரமு மிதற்குள்ளாச்சு
  அப்பனே ஓங்கார மிதற்குள்ளாச்சு
தென்புடனே சிவஞான மிதற்குள்ளாச்சு
  சிவசிவஓம் மந்த்ரமெல்லா மிதற்குள்ளாச்சு
பண்புடனே சிவபூசை யிதற்குள்ளாச்சு
  பளிச்சென்ற ஜோதிமய மிதற்குள்ளாச்சு
முன்சொன்ன பூசைவிதி யிதற்குள்ளாச்சு
  மூலமுத லாதார மிதற்குள்முற்றே. (52)

சட்டைமுனி ஞானவிளக்கம்

முற்றிற்று.



மதுரை பாத்திரக்கடை வியாபாரம், ந. ராம. கணபதியாபிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

90-வது

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# தீட்சை கற்பம் - ௱.



பராபரத்தி லுதித்ததொரு சட்டைநாதர்
பண்பாகத் தசதீட்சை மார்க்கஞ்சொல்வார்
தராதரத்தில் மெய்ஞ்ஞான யோகிக்கெல்லாந்
தாண்டவமே ஆடுதற்கு வகையேதப்பா
நிராதரத்தில் யானுரைத்த வகையேதென்றால்
நிட்சயமாய்ச் சுந்தரமே நன்றாய்க்கேளு
அராதரத்தில் ஊவென்றும் ஆவென்றுந்தான்
அன்பாக யெட்டுரெண்டும் பத்துமாச்சே. (1)

ஆச்சப்பா சுந்தரமே யெழுத்தைப்பாரு
அடிமூன்று ஊரெண்டு அஞ்சுமாச்சு
பேச்சப்பா யிதுவஞ்சும் பிருதிவுக்குள்
பேரான பிண்டமதில் வளர்ந்தஜோதி
ஏச்சப்பா வெளியிலொன்று வுயிர்தானப்பா
யிதமாகக் காலாறு கறுப்பியாகும்
ஓச்சப்பா கட்டியநா லெழுத்தைப்பாரு
உயிரான குருவென்று மதற்குப்பேரே. (2)

பேரான உட்கருவும் வெளிக்கருவுங்கூட்டிப்
பேதித்தே காயமது ஓராண்டுக்குள்
வாரான செஞ்சடையோர்க் கொக்குமொக்கும்
வச்ரமிட்டக் காயமது தங்கமாகும்
நீரான தேகமக மேருக்கொப்பாம்
நீண்டதொரு ஈசனங்கே வார்த்தைசொல்வார்
ஆரான சுந்தரமே யிதுவேதீட்சை
அடக்கமப்பா வெளிக்குள்ளே சொல்லாரன்றே. (3)

அன்றேதான் சொல்லிவிட்ட சித்தர்க்கெல்லாம்
அன்பாக யிதுவென்றே தீட்சையப்பா
என்றேதா னுலகத்தில் மனுடர்க்கெல்லாம்
யிதுவொளித்து வெவ்வேறு பாடல்சொன்னார்
ஒன்றேதான் பிள்ளையுண்டு கோடிக்குள்ளே
உனைப்போலே சுந்தரமே யில்லையப்பா
நன்றேதான் தேறிக்கொள் பால்பழம்போல்
நன்மணியே பாகம்போல் தீட்சைகாணே. (4)

காணவே முந்தியுண்ணும் வகையேதப்பா
காட்டில்வளர் கொட்டையென்றே அதற்குநாமம்
வீணப்பா பஞ்சமுக ருத்ரனென்று
வெள்ளையெலி யாலென்று அதற்குநாமம்
தோணப்பா யிதனுடைய பாலைவாங்கிச்
சுகமாகக் காசளவு கொண்டுதேறு
ஆணப்பா யிதனையோ ராண்டுகொண்டு
அடங்காத தசதீட்சை பூட்டிச்செல்லே. (5)

செல்லப்பா பத்தியம்பால் பழமுமாகும்
சிறக்கவொரு நெய்புஞ்சர்க் கரைதேனாகும்
வெல்லப்பா தேவிவிந்து சுத்தியாகும்
மெய்ஞ்ஞான சுத்திக்குப் பொடிதான்கேளு
அல்லசா திக்காய்பத் திரிகிராம்பு
அதனோடு மிளகுசீ ரகமுமாகும்
வல்லோர்கள் நெய்விட்டு வறுத்துக்கொண்டு
மாயீசன் விந்துவுடன் மகிழ்ந்துபோற்றே. (6)

போற்றெனவே சுந்தரமே யுனக்குச்சொன்னேன்
புவிமீதில் தசதீட்சை மார்க்கமெல்லாம்
ஆற்றெனவே திருமூலர் போகநாதர்
அருள்பெற்ற கொங்கணவர் காளமேகர்
நீற்றெனவே கருவூரா ரகஸ்த்யரோடு
நிசமான இடைக்காடர் புண்ணாக்கீசர்
ஏற்றெனவே சித்தாதி யனந்தங்கோடி
யெனைப்போலே யெவர்சொல்வா ரேத்திப்பாரே. (7)

## சூஸ்திரம்.

பாருநீ விழியிரண்டும் பகர்ந்தோர் காசிநுனி
சேருநீ யொன்றாய்ச் சினைத்துட னோக்கியே
நாருநீ சிவாவென்று தாக்கியே போற்றினால்
வாரிநீர் போல வருஷிக்கு மமுதமே. (8)

அமுதமே காய மடங்காத பாலுவார்
திமிர்த சஞ்சீவி செகமறி வேதையாம்
குயிர்தவே தேகம் கோடியோர் காணாம்
மயிர்தவே மீச வீழ்சடை மொக்குமே. (9)

சட்டைமுனிவர் தீட்சை க

முற்றிற்று.





ஸ்ரீ வில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாய்யபுரம் சங்கரலிங்கப் பிடகர் குமாரன் அழகுமுத்துப் பண்டிதரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடப்பட்டது.



உ

குருதேவ துணை.

91 - வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# சூதகற்ப சூத்திரம் எ.



ஆமப்பா சூதகற்ப மார்க்கமொன்று
அறைகிறேன் சுந்தரமே நன்றாய்க்கேளு
வேமப்பா விடத்தோலின் மூலமுந்தான்
வேறாக வெட்டியதை மேற்றோல்போக்கிக்
காமப்பா நிழலதனி லுலர்த்திக்கொண்டு
கைமுறையா யிடித்துச்சூ ரணமேசெய்து
தாமப்பா நாலுபலச் சூரணத்தில்
தனிச்சூத பற்பமது பலமும்நாலே. (1)

நாலப்பா ரெண்டுமொன்றாய்க் கூட்டிக்கொண்டு
நலமான கல்வமதி லிட்டபின்பு
சாலப்பா மல்லிகைப்பூச் சாற்றினாலே
சருவியதோ ரெண்சாம மரைத்துருட்டிச்
சீலப்பா தேனதிலே தோய்த்துவைத்துச்
சிறப்பாகப் பேதியெல்லாஞ் சிதரத்தள்ளிச்
சேலப்பா நேரமது செப்பக்கேளு
தினமொன்றுக் கொருநேரம் சேர்த்துக்கொள்ளே. (2)

கொள்ளடா காயமது இருப்புத்தூணும்
குறியடா காயசித்தி சுருக்குமெத்த
அள்ளடா இப்படிமண் டலந்தான்கொள்ள
அப்பனே காயசித்தி அருளுமுண்டாம்
விள்ளடா இச்சாபத் தியத்தைக்காரு
வெருளாதே மண்டலத்தில் வாசமேறி
உள்ளடா காயமது பேதியாகும்
உத்தமனே இச்சூத கற்பம்பாரே. (3)

பாரப்பா ரத்தபித்த மெட்டும்போகும்
பண்பான குட்டமது பறந்துபோகும்
சேரப்பா பித்தவகை நாற்பான்போகும்
சேர்பட்ட பெருநோவு நீங்கிப்போகும்
வாரப்பா காமாலை பாண்டுரோகம்
வாதமுட னெண்பதுநால் வகையுந்தீரும்
சாரப்பா சகலவித ரோகமெல்லாம்
தானேகும் இம்மருந்தைச் சாப்பிட்டோரே. (4)

ஏறியதோர் சூலைவகை பதினெட்டும்
இம்மேகம் சன்னிவகை பதின்மூன்று
மீறியதோ ரையந்தொண் ணூற்றியாறும்
மிக்கவுட லேசார்ந்த வாய்வுதானே
தேறியதோர் கிருமியுடன் சயமேபோகும்
கருப்பான மேகமெல்லாம் போகும்போகும்
ஆறியதோ ரிம்மருந்தைக் கொண்டாயானால்
அட்டமா சித்திபது ஆகுங்காணே. (5)

காணப்பா ரத்தபித்த மெட்டும்போகக்
கைமுறையாய்க் கொளுந்தியுட சாத்திரிற்கொள்ளு
தோணப்பா பதினெட்டுக் குஷ்டம்போகத்
தொல்புவியா மாவிலங்கு சாத்திரிற்கொள்ளு
மாணப்பா பித்தவகை நாற்பதுக்கும்
மகத்தான சர்க்கரை நீரகத்திற்கொள்ளு
வேணப்பா பாண்டுகா மாலைவீக்கம்
வீரண்ட வாதவகை கொச்சிச்சாறே. (6)

சாறெனவே சூலைவகை முருங்கைச்சாறு
சார்ந்தொரு வாய்வுக்குச் சுக்குநீராம்
ஏறெனவே சேத்துமத்துக் கறந்தையாகும்
இருமலுக்குத் தேனுந்திப் பிலியுமாகும்
சோறெனவே சயத்துக்குக் கற்கண்டாகும்
சுகமாகும் சர்க்கரைதான் குன்மத்துக்குப்
பேறெனவே இம்முறைதா னறிந்தாயானால்
புகழாகக் காயசித்தி யாகும்பாரே. (7)

சட்டைமுனிவர் சூதகற்ப சூத்திரம் எ
முற்றிற்று.





உ

குமரன் துணை.

௰௩ - வது

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# சமாதி ௰௨.

சட்டநால் வீதி சதிரப் பலகையில்
ஒட்டிருந் தடைக்கு மொருவழி யதனைத்
இட்டமுப் பொருளைத் தீர்ந்த அசவை
கட்டுரைத் தறுசுவை கழித்துநீ பாரே. (1)

பாரினி லுந்தி பகர்கின்ற வாயுவைத்
தாரணி யுதித்துத் தனஞ்செய னதுவாம்
வாருணி ஆக்கினை மண்டபம் புக்கிடும்
சேருநீ மூக்கடி சிறந்துயிற் பாயுமே. (2)

பாயுமே உள்ளெட்டுப் பறக்கும்வெளி நாலு
காயுமே நாலு கலந்துட லூறிட
வாயுமே ஒன்றாய் மனமு மழுக்கறும்
சாயுமே பொன்னிறஞ் சமாதியது வாமே. (3)

அதுவெனுஞ் சமாதி அமைத்திடும் நந்தி
மதுவெனு மப்பலம் வளர்த்திடுந் தளவாய்
இதுவெனும் பறவை யியிடு மப்பலம்
முதுவெனுங் கருப்பு முப்பொருள் தாக்கே. (4)

தாக்கிடும் பாத்திரந் தனிக்காந்தச் சந்தும்
நோக்கிடும் பெட்டியும் மூடியுள் நுகர்ந்திடு
வாக்கிடு மதினுளே வளம்பெற யிறிடு
ஆக்கிடு மூடி அதுகுறிப் பாமே. (5)

குறிப்பாம் முழுக்குழி கூறுடன் செய்து
நெறிப்பான பற்பம் நேர்பாதி யிட்டிடு

வெறிப்பான தகனுள் மேவிடு வையம்
உறிப்பா னிருசா னுசரம் பிடித்திடே. (6)

உசரமே யேத்தி யுயர்சிவ சத்தியம்
வசரமே யேற்றி வரவேளு முக்கடு
நிசரமே உன்னி நிலைபெறுவ மையம்
கெசரமே நோக்கிக் கொடிபடிந்த சமாதியே, (7)

கெடிபட மண்டலங் கிளர்த்திடப் பாருசீ
அடிபடுந் தபில யப்பொருள் சோதி
முடிபட ஆண்டு முனிவரக் கொண்டிடு
தடிபட வுலகெழுந் தானவ னுமே. (8)

தானவ னுனாதற் சதாசிவ ரூபன்
ஏனவ னுக எடுத்திடுங் காயம்
வானவ னுயிர் மாருதக் கட்டுறனும்
மூனவன் காயம் மொழியபொன் னாகுமே. (9)

ஆகுமே கெவுணம் அடர்ந்தோடும் வாசியின்
தாகுமே வெண்டுடல் தானது பறவையாம்
ஏகுமே யோகி யீசனு மவனும்
போகுமே சடையாள் பொருந்தின விடமே. (10)

பொருந்தின விடமே பொரியதைக் கட்டும்
சரிந்தின விடமே சாயுட்சிய போகம்
எரிந்தின முக்குண மெதிரிடு மொன்றாய்
வரித்தது காயம் வளர்கோடி காலமே. (11)

காலமே அல்லாற் கவனங் கொடுபோம்
ஆலயத் துள்ளே அம்பலங் காணலாம்
வாலையைப் போல வளர்த்திடுந் தேகம்
ஓலமிட் டாடி யுருப்படுங் காயமே. (12)

சட்டைமுனிவர் சமாதி ௰௨

முற்றிற்று.



உ

பராபரந் துணை.

93 - வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# பரிபூரணம் ௱உ.



வகுந்திடவே ஒருத்தனுட மகிமைகேளு
மகத்தான பூரணமாம் அதீதக்கொம்பில்
பகுந்துநாற் சரீரமுதல் ஞானமெட்டும்
பாங்கான சங்கிலியை அதிலேபூட்டி
மகிழ்ந்துதெய்வ சதாசிவனே பலகையாக
மகத்தாம்நால் வேதம்நாற் காலாய்ப்பூட்டித்
தொகுந்ததின்மேல் மனோன்மணித்தா யிருந்தவூசல்
சுற்றினாள் ஜெகசாலஞ் சுத்தினாளே. (1)

சுத்திரது யெங்கென்றால் மூன்றாம்வீதி
சுகமாக நான்பார்த்தேன் நீயும்பாரு
அத்திரது முந்திமுந்தி யங்கேதாண்டு
அடியிலே பனிச்சென்ற மட்டும்பாரு
பத்திரது முந்திமுந்தி மூலமூலம்
பலித்துதென்றா லாறுமனை பகல்போற்காணும்
எத்திரது போல்பார்த்தா லேதுமில்லை
ஏழைமதி போகாதே யிருக்கிப்பாரே. (2)

இருக்கையிலே குப்பென்று நந்திகாணில்
இசைந்திரண்டு கோணத்தின் கணேசன்சித்தி
உருக்கையிலே தண்டிடுவாய் குட்டிக்கொண்டு
உற்றுப்பார் சத்தியெட்டு மொன்றாய்க்காணும்
அருக்கையில்லாப் பேய்மனது மாயைதானும்
ஆணுவத்தின் காமியத்தை யடைவேமூட்டு
மருக்கையிலே மனமானால் மைந்தர்தானும்
மாயைவந்து மேலிட்டால் மண்ணாய்ப்போமே. (3)

சிறப்பான சிவயோக மென்றுபேரு
சிறந்திட்ட குண்டலித்தா னென்றுபேரு
நிறப்பான வாசியென்று மதற்குப்பேரு
நேரான சுழியோக மென்றுபேரு
சிறப்பான வாசியென்று மதற்குப்பேரு
சேர்ந்துணர்ந்த அசபையென்று மதற்கேபேரு
உறப்பாக விதைப்பார்த்தால் ஞானசித்தி
உத்தமனே காயசித்தி புணர்ந்துபாரே. (4)

பேசிடவே காலம்வந்து சேர்ந்ததானால்
போரான மூலத்தைப் பேணிச்சொல்வார்
ஆசிடவே வங்கென்று அங்கேநூறி
அப்பனே சிங்கென்று மூலங்கும்பி
கூசிடவே ரேசகந்தான் வெளிகண்டாலுங்
குமுரியுள்ளே ரேசித்துக் கட்டுகட்டு
வேசிடவே ரேசித்தா லொன்றுமில்லை
வேளைகண்டு பிடகலையில் விரைந்துகூடே. (5)

கூடுவது மெக்காலு மெப்போவென்று
சொல்கின்று அலையாதே கூறக்கேளு
நீடுவது அன்னமறை தண்ணீர்கால்தான்
நிலைத்துண்ணு மொருபொழுது நீதானப்பா
ஊடுவதி யிடத்தியங்கி லப்பாலூறு
உற்றுரைத்து மனமொன்று பூணிப்பாரு
தேடுவது வேறில்லை மூலஞ்சித்தி
சிவன்சத்தி யிரண்டுமொன்றாய்ச் சேர்ந்தகூறே. (6)

கூறுவார் கேட்டதெல்லாங் கொடுப்பாரீசன்
குணங்கெட்ட மனமாகிற் கூடச்செய்வார்
ஆறுவா ரெத்தனைதான் பாவஞ்செய்து
அஞ்செழுத்தை முனையொக்க வனைத்துவாங்கு
தேறுவாய் சிவகாமி புத்திசொல்வாள்
செகமெல்லா மவளன்றோ தெளிந்துபாரு
மாறுவாய் பின்னொன்றுந் தெய்வமில்லை
மனமவள்தான் போதமவள் மக்காள்பாரே. (7)

பாரிருவர் சேர்ந்தவிடம் நிராகாரந்தான்
பனிச்சென்ற விடமெல்லாம் மாயையாமை
சேரிருவர் வெட்டவெளி யப்பனப்பன்
சித்தித்துத் திரண்டதுதான் சேர்ந்துதாண்டி
ஊரிருவர் தாமங்கே யொன்றாய்ப் போச்சு
ஓகோகோ உருவுமில்லை யருவுமில்லை
ஆரிருவ ரென்றக்கா லசைவையப்பா
அதுநின்ற காலுக்குள் ளடங்கிரண்டே.

ரெண்டாகி நின்றதப்பா வாசிதானும்
சேர்ந்தவுட னொன்றாச்சு அதுவும்போச்சு
பண்டாகப் பழகிறதுக் கிதுவே மார்க்கம்
பார்க்கையிலே கற்பமுண்டு பாருபாரு
தண்டான சுழிமுனையாம் ஞானயோகம்
சார்ந்தவர்க்கு ஆசான யோகமாகும்
நண்டான வகாரத்தை யுள்ளேபூரி
நலம்பெறவே சிகாரத்தைக் கும்பித்தோங்கே.

ஓங்கையிலே நினைவாக வோங்குவோங்கு
மொருகடிகை யிருகடிகை நின்றதானல்
வாங்கையிலே பனிச்சென்று மட்டும்பாரு
மயங்கியதிற் புகட்டிலொரு வருஷநாளாம்
பாங்கையிலே யிதுவுரைத்தா லாகும்பாரு
படிப்படியாய் நிமிசத்திற் பாங்காய்க்காணுந்
தேங்கையிலே குளிர்ந்தமதி வெள்ளஞ்சிந்துந்
தேகமுமே பொன்னிறம்போற் றீர்க்கந்தானே.

நிலைத்திட்ட காயசித்தி யோகசித்தி
நேரான ஞானசித்தி மூன்றுமாகும்
குலைத்திட்டால் மாயசித்தி வந்துமூடும்
குலைஞ்சுருவாய்ப் பிறவியிலே கூடமாட்டாய்
அலைத்திடுமே மனமதுவு மண்டொட்டாது
அதினாலே மனந்தெளிந்து பூசைசொன்னேன்
கலைத்திட்ட மாகிநின்ற ஆயிபாதம்
கைமுறையாய்ப் பூசித்துச் செய்திடாயே.

### பஞ்சாட்சரம்.

நமச்சி வயமென்று நாடோறும் போற்ற
அமைந்த வெழுத்தஞ்சி னடவே—உமைத்திருவே
உன்னெழுத்தும் நின்னெழுத்தும் ஒக்க வுலகனைத்தும்
மன்னெழுத்தும் நின்ற மயம். (12)

சட்டைமுனிவர் பரிபூரணம் ௱௨,

முற்றிற்று.





ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் திருவேங்கடத் தேவரவர்கள் குமாரர் போத்திலிங்கத் தேவரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

கடவுள் துணை.

94 - வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# வேதாந்த சூத்திரம் அ.



ஆதியெனுங் கயிலாச ஆயிபாதம்
அழகாக வெனையீன்ற ஐயர்பாதம்
சோதியெனுந் தென்பொதிகை ஆசான்பாதந்
தொழுதிறைஞ்சி வேதாந்த சூத்திரஞ்சொல்வேன்
ஊதியே உம்மென்றும் அம்மென்றூணி
ஓதிடவே சாபமெல்லா மோடிப்போகும்
சாதினையாய் வகாரமொடு சிகாரங்கூட்டிச்
சார்ந்திடவே யக்ஷலட்சம் வசியமாமே. (1)

ஆமிந்த வகைசெய்து சூதத்துக்கு
அதிலொன்று நவசாரங் கெவுரிகால்தான்
ஓமிந்தக் கெந்தியிடை சூதமாகும்
உத்தமனே துருசுமிந்த யிடையேபோடு
தேமிந்த யிடையப்பா அமரிவிட்டுத்
திரமாக ஒருசாம மாட்டியேதான்
தாமிந்த ஓரொருவிற் புடத்தைத்திரு
சட்டமுடன் முருக்கம்பூப் போலாம்பாரே. (2)

பாரப்பா ஓங்காரங் கொண்டுமூலம்
பத்திநின்ற ஐங்கோண வாசல்தானுங்
காரப்பா றீங்கார முன்னேயிட்டுக்
கைமுறையாய் வாசிதனைக் கருதிப்பூணு
சீரப்பா சாதித்தால் நெத்திநாட்டந்
திரமான வங்ஙுசிங்கு ரெண்டுந்தோணும்
ஆரப்பா யிவ்வளவு மறிந்துசெய்ய
ஆசான்தான் தொழுதிறஞ்சி ஆட்டுவீரே. (3)

ஆட்டான கெந்தியிறுத் குகைபோலெய்து
அப்பனே பொற்றலையின் சாற்றூலாட்டி
பூட்டான சூதங்க ளிடையேயிட்டுப்
புகழான வீரமுங்க ளிடையேபோடு
தேட்டான ரீங்காரக் கெவிபுக்கட்டி
செகஜாலம் ரெண்டெழுத்தாற் கழிபிலேட்டுக்
காட்டான மூன்றெழுத்திற் புடமேபோடு
கதிரவன்போற் செந்தூரங் கனல்கொள்ளாதே. (4)

கொள்ளப்பா வேதையுப்பு காலத்தோன்று
கூட்டான திறவுகோல் முன்னேவேணும்
தள்ளப்பா சண்டாளர் தன்னைச்சேராதே
தகர்வனம்போல் மாயைசெய்து திருடப்போவான்
உள்ளபடி சொல்லிவிட்டே னறிந்துகொண்டு
உத்தமர்க ளானவர்க்கு உரைத்தேன்பாரு
கள்ளப்பா கள்ளருக்கின் றூலபோதே
கருத்தறியா மூடருக்குங் காட்டொண்ணாதே. (5)

காட்டான குருபதத்தை யடுத்துக்காரு
கனகமலர் கேட்டதெல்லாங் கனிந்துநேறும்
பூட்டான அங்கென்று இரையைக்கேளு
பொருந்தியதோ ரிரண்டெழுத்தை ஆட்டக்கேளு
தேட்டான மூன்றெழுத்தை ஆட்டக்கேளு
செகஜாலத் தாய்பதத்தைத் தினமும்போற்று
மாட்டான அஷ்டபதி பிராணயாமம்
பாங்கான வனிகற்கு ரூபியாமே. (6)

ஆமப்பா அஷ்டமா சித்துக்கேளு
அழகான அகாரமது முன்னேநாட்டி
தேமப்பா யெட்டெழுத்து உயிருங்கூட்டித்
தியானிக்க யோகனந்தான் தெளிந்துபாரு
நாமப்பா இதையறிந்து செய்தோமாகில்
நலமுடனே சித்தியது கிடைக்குமப்பா
ப்பா இதுநாலே யெட்டெட்டாகுஞ்
தகமா யறுபத்து நாலுமாச்சே. (7)

ஆச்சிந்த வகையாலே சித்தர்செய்தார்
ஆதியெனும் பார்வதித்தா யருளேபுத்தி
ஒச்சப்பா தாயினுட வித்தையெல்லாம்
உயர்வான குருவருளாற் கண்டுதேறு
பேச்சற்ற குருவருளை வாங்கிக்கொண்டால்
பிலமான பரகெதிக்கு இடமேயாவாய்
பாசமற்ற குருபதத்தில் நினைவுவைத்தால்
பாங்காக மனதுவைத்துப் பகருவாரே.

சட்டைமுனிவர் வேதாந்த சூத்திரம் ௩

முற்றிற்று.





ஸ்ரீ வில்லிபுத்தூரைச்சேர்ந்த மகமதுசாயபுபுரம் திருவேங்கடத் தேவரவர்கள் குமாரர் போத்திலிங்கத் தேவரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சியிடலானது.



உ

கணபதி துணை.

ஸ்ரீ [illegible] நம:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# நிகண்டு சூத்திரம் ருங.

சோதியெனு மகண்டவெளி குருவேஐயா
    சொற்பெரிய கயிலாச மலையேஞானக்
காதியெனுங் கடவுளே வாதமார்க்கங்
    கழறுதே யென்றுரைத்தா லார்தான்காண்பார்
வாதியெனுஞ் சுந்தரம்பேர் கொண்டவையா
    வரிசையுட னவாச்சார வழலைமார்க்கம்
நீதியெனச் சொல்லுகிறேன் நினைவாய்க்கேளு
    நிகண்டுபனி ரண்டுசதம் நிலைத்திட்டோர்க்கே. (1)

நிலைத்திட்ட நிகண்டுக்குச் சொச்சசூத்திரம்
    நேர்பாக வேகருவுங் குருவுந்தோண
மலைத்திட்டே னென்றுதே மூப்பூமார்க்கம்
    வகைபெறவே சொல்லுகிறேன் மனதுகூர்ந்து
கலைத்திட்டார் மூவிரு நூறுநிட்சை
    கருவென்று கிழித்திட்டா ரென்றுசொல்லி
உலைத்திட்டுப் போகாதே நிகண்டுசொச்சம்
    உறுதியாய்ச் சொல்லுகிறே னுண்மைதானே. (2)

சிவத்தின்பெயர்.

பூதல னாதம் புகழ்கின்ற சத்தி
மாதவி டாய்திற மாகிய சுண்ணம்
சோதியின் மூலச் சொரூபம் பச்சையாம்
வேதியாங் காரம் விளங்குங் கதிரிலே. (3)

கதிரவன் வண்ணான் கங்கைக் கிளிஞ்சியாம்
உதிரம் பிறந்ததே ஓங்கார வாசகன்

மதியுடன் சேர்ந்து மருவிக் கலந்தவன்
சதியா யிணங்கிச் சாந்தனு மாமே. (4)

சாந்தனே யாகுஞ் சீனங் கலைந்தபின்
சாந்தமாம் விண்மேறு னதற்குள நாதனும்
வேந்தனே பிர்மா விசாரத்தை யுண்டவன்
மாந்தக் குருவின் வருங்காலி காலனே. (5)

காலென்று மேகக் கனைவன் விகாரியாம்
பால்சுத்த வெள்ளை சிவமான பூரணன்
வாலைப் பிராயப் பெண்ணைக் கருதுவான்
சாலவுஞ் சத்தியின் றன்பெயர் கேட்டிடே. (6)

சத்தியின் பெயர்.

போரான பூரணன் பாலிற் பிறந்தவள்
காரான சத்தி மனோன்மணியாங் காரி
சீரான பெண்ணாள் திருநாமஞ் செப்பப்
பேராஞ் சுரோணிதம் பேசிடுஞ் சாரியே. (7)

சாரியி தென்றும் தனிகல்லுப் பென்றும்
வாரியி லுப்புடன் மாமதி கூடனும்
சேரவே காலாய்ச் சென்றுவட் டிப்பெறும்
மீரிடப் பிறக்கும் வழலையி லுப்பே. (8)

வழலையி லுப்பும் மாநில வுப்பும்
வழலைச் சரக்கு மாமதி யுப்பும்
நிழலைக் கடந்தே நேருரைத் திட்டேன்
கனவில்லை சொன்னேன் கைகண்ட வாதமே. (9)

வாதம் பிறக்கும் பாரையுப் பாலே
நாதம் பிறக்கும் நல்லகல் லுப்பால்
போதம் பிறக்கும் பூரணத் தொன்றால்
வேதம் பிறக்கும் வெடியுப்புச் சூடனே. (10)

சூடனும் முத்துச் சிப்பிசுண் ணஞ்சேர்
நாடியி ணக்கனில் நற்சீனஞ் சேத்திட
வீடும் விளக்கும் வேந்தனு மாய்விடும்
சோடச மார்க்கத் துறையறி வோர்க்கே. (11)

சூரியான பூரணமாய் விந்துநாதக்
கொள்கையாம் முப்பூவிற் பொருளுண்டாகி
பிறியாம லொன்றாகிச் சடலமாகிப்
பெருமையோர்க் குரைத்தாரப் பிலக்குமாகில்
நெறியான வாதமொடு யோகத்திட்டம்
நிலைதவறி நெஞ்சுழன்ற வஞ்சருக்கும்
அறியாத பேர்களுக்கும் காரமேதோ
மகத்தான வழலைசெய்ய முறையைக்கேளே. (12)

வேறு.

கேளான யுழமரி கெடியாய்ப்பதி னாறு
வாளான பூசாம் வழங்குபடி யெட்டிடு
கூளான கற்சுண்ணாங் கொட்டிபடி ரெண்டு
நாளான கல்லுப்பு நாட்டிபடி யொன்றே. (13)

ஒன்றாய்த் தெளிய உறவாகக் காச்சிடு
நன்றாய்க் குளம்புப் பருவத்தில் நீகேள்
சென்றே யடிமுடிக் குள்ளே யிணங்கனக்
கொன்றே யெடுத்துக் குளம்பிடு மெண்ணெய்க்கே. (14)

எண்ணெய் அரைப்படி யிணங்க னரைப்படி
ஒன்றாய்க் கலக்கி யுள்ளிடு மெண்ணெய்க்கு
கன்னிய வீர பூரமும் வெள்ளையும்
தின்றான சினமுந் தான்வகைக் கொன்றே. (15)

வகையிதங் காசிடை மாட்டிடுமெண்ணெய்க்குள்
தகையாமற் சொன்னேன் சத்திய மாயிது
அதிகமாம் வழலை யப்பனே வாத்திடு
சுகமாய்ப்பத் தோடே தோன்றிடு முண்டையே. (16)

உண்டை விளாங்காய் போலே யுருட்டிடு
கண்டேனே கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம்
விண்டே யுரைத்தார் மேவிக் கலந்துபார்
சண்டாளா நந்தீசர் சாற்றினார் சத்தியம். (17)

சத்துவர்ச் சாரந் தான்புக லக்கேள்
முத்தியாய்ச் செய்த முதல்தீட்சை பூநீர்

பத்தியொரு நூறும் பத்தா மிணங்களும்
சித்திய சூடனும் சிறக்கின்ற கல்லுப்பே.

கல்லுப்பு தானுங் கடற்பாரை யுப்புடன்
மூல்லங்கி முத்துச் சிப்பியின் சுண்ணமும்
செல்லவே பத்து சிறக்கஉவர்ச் சாரம்
வல்லவர் காண்பார் மற்றோ ரறிவரோ.

அறியார்கற் சுண்ணம் ஆதிக் கிளிஞ்சிதான்
பிறியாத உண்மை பெலப்பட்ட சுண்ணங்கேள்
தறியாங் கிளிஞ்சி தான்பலம் பத்துக்கு
வெறியா முவர்ப்பூ வீரமும் பூரமே.

பூரத் துடனே புகழ்சினங் கல்லுப்பு
கார மிணங்கன் கடுஞ்சாரந் துத்தமும்
தாரந் துருசுடன் தான்வகைக் கொன்றுடன்
சேரக் களஞ்சியாய்ச் சேர்த்திடு மண்டமே.

அண்டத்துச் சுண்ண மதுடத்துக் களஞ்சிதான்
சுண்டவே யெருக்கம்பா லதற்குளே வெண்கரு
கொண்டே யரைத்துக் கூறுங் கிளிஞ்சிக்குக்
கண்டேனே பூசிக் கனபுடம் போட்டிடே. (22)

பாச்சுங் கிளிஞ்சிச் சுண்ணம் பலித்தது
வாச்சு துவர்ச்சாரம் வழலை சவுக்காரம்
பேச்சினி யேது பிதைப்புக் கருக்குரு
வாச்சுதே சுந்தரா வாதிமுப் பூவுக்கே. (23)

முப்பூவிற் றீட்சை முப்பத்தி ரண்டுஞ்
செப்பமாய்க் கைமுறை செப்பினார் கொங்கணர்
தப்பிலா வண்மை சாற்றினோர் கண்டிடு
மெய்ப்பான விந்து நாதத்தி லேறியே. (24)

நாதமும் பூவையாய் நாதத்தி னுலரி
வாதங் கடுங்காரச் செயநீர் வகையுரை
சாதனை முப்பத் திரண்டு சரக்கால்
வேதைகள் கண்டது மெய்யுற்ற வாதமே. (25)

வாதமென்ற கருவதனை வெண்ணெய் மார்க்கம்
மகத்தான உவர்ச்சாரம் முப்பூதிட்சை
கோதறவே குருவாகச் சொன்னேனப்பா
குளிகைசெய்யுஞ் சித்தரெல்லா மினைத்துமேயக்கப்
போதமுள்ள கொங்கணவர் கடைக்காண்ட சூத்திரம்
போதித்தார் முப்பூவின் தீட்சையெல்லாம்
சாதிக்கப் பதினெண்பேர் சூத்திரம்பாரு
தடையறவே சுந்தரமே தாக்கிக்காணே. (26)

காணவே யண்டங் கருவொடு சுண்ணங்கள்
பூணவே முட்டைக்கு மேற்பூசிப் பூசிடத்
தோணவே காந்தஞ் சூடன் துரிசியும்
பாணி யினாங்கன் படிகிவிங் குப்பே. (27)

இந்துப் புருவிப்புப் போடுகல் லுப்பு
சுந்தர மேகேள் தாத்தமும் வீரமும்
சிந்தித்த பூவொடு காரமுஞ் சாரமும்
சந்தேகந் தீரச் சாத்துங் களஞ்சியே. (28)

களஞ்சிய தொன்று வகையொன்றுக் கப்பா
பளஞ்சிய சாரு பாலித் தறைத்திடு
முளாபெரு முட்டை யிருபதுமேற் பூசு
வளம்பெறக் காஞ்சபின் மாட்டாய் கவசமே. (29)

கவச முவர்ப்பூ கற்சுண்ணமெட் டொன்று
அவசர மாராம லண்டத்தின்மேற் கட்டி
சிவபூசை செய்து திடமாய் முழப்புடம்
நவருண மண்டம் நற்சுண்ண மாமே. (30)

ஆமேயிச் சுண்ணம் அடக்குங் கிளிஞ்சிலை
நாமே யடக்கமாய் நாட்டினேன் சுந்தரா
பூமேல் விளைந்த உவர்ப்பூவைக் கொல்லவே
வீமே பாறைதம் விந்துக்கு ளேறியே. (31)

யேயிட்டுக் கொல்லும் எடுத்தசரக் கெல்லாம்
கூரிட்டு வைக்குங் குணத்தைத யறிந்திடு

மாரிட்டுச் செயநீர் பாராய் வழலைதான்
பேரிட்டு நந்தி பேசின வாறே. (32)

வாறான அண்டத்தின் நீரினிற் பாதி
கூறு யிணங்கன் கூட்டே பழச்சாறில்
யேறவே பார்த்து விடுவாய் புடத்தினில்
தேறிட்டு வட்டா யுருகித் தெளிவதே. (33)

உலத்திய வில்லை யிடுமது குக்கிடம்
உலத்திய சுண்ணத் துடன்புடம் போடு
கலத்திய அண்டாங் கடுஞ்சுண்ண மாமிது
பெலத்திடும் வெண்கரு விட்டங் கரைத்திடே. (34)

அரைத்திடும் வில்லை யடவான குக்குடம்
விரைத்திடு மண்டந் தான்பத்துப் புடம்போடு
துரைக்குரு வாகுஞ்சொர் ணத்தைநீ ராக்கும்
தரைக்கு ளடங்கா தண்டத்தின் சுண்ணமே. (35)

சுண்ணத்தி னாலே சுவருஞ் சிளிஞ்சிதான்
சுண்ணங்கள் போரய்ந்து துரையாம் வழலைக்குச்
சுண்ணமிதை விட்டாற் கற்சுண்ண மேதேதா
சுண்ணக் குருவிது துறந்துவிட் டேனே. (36)

துறந்தேனே வாசி சூக்ஷத்தைச் சொல்லக்கேள்
பிறந்துவி டாதே யியம்பினேன் சுந்தரா
மறந்துவி டாதே மகத்தான குண்டலி
சிறந்தவுங் காரியாம செப்பினேன் மூலமே. (37)

மூலக் கிணற்றில் மூர்க்கமாம் றீங்காரம்
சாலத் திரிகோணந் தன்மேல் மகாரமாம்
ஞாலைபிடத்தே வளங்கு முகாரந்தான்
கோலத்தின் பிங்கலை கொள்ளை யகாரமே. (38)

அகாரமுக் கோணத்தில் குண்டலி ஆத்தாள்தான்
றீகாரத்தின் மேலே யிருக்கின்ற வல்லபை
விகாரத்தி னாலே விபசாரி யானவள்
சகாரப் பரமாட்டிந் தப்பா திருந்தாளே. 39)

இருந்தான்முக் கோண மியலவுங்கோ ணத்தில்
இருந்தான்அறு கோணத்துமே சடாக்ஷரி
இருந்தான் மவுனி லெக்ஷய த்துளே
இருந்தான் பராபரை யெங்குந் நின்றனே. (40)

நின்றிடு மாதியு மந்தமு முதலாய்
நின்றிடும் லெக்ஷய லேட்சயம் வைத்து
நின்றிடு லெக்ஷயந் தன்னில் நிறைந்திடு
தொன்றிடு மாறு தாரமுந் தோணுமே. (41)

தோணுமே குண்டலி யோகச் சுழிமுனை
காணுமே காட்டினாற் கணபதி யாச்சு
பூணுமே வல்லபை பொக்கிசந் திறந்தது
ஆணுவம் போச்சுது அதிகாரி யாச்சே. (42)

நீயாச்சு சுந்தர நிலைத்திடுயோ கத்தை
தாயாச்சு வல்லபை தானுங் கணேசனும்
மாயா விகாரி மாண்டுதே மாயைதான்
தோயாத சித்தந் துலையா மனத்தால். (43)

மனதாலே லட்சயம் மாட்டினால் வாசியாம்
மனதாலே லட்சயம் மாட்டினால் யோகமாம்
மனதாலே லட்சயம் மாட்டினால் ஞானமாம்
மனதாலே லட்சயம் மாட்டினால் பூசையே. (44)

பூசிப்ப தாரை புகழான நந்தியை
பூசிப்ப தாரை புகழான சத்தியை
பூசிப்ப தாரை பொன்னம் பலத்தானை
பூசிப்ப தாரை போற்றுங் கணேசனே. (45)

கணேசன்று தூதும் கேவல லெட்சயம்
பணசலம் வாராமற் பரைமட்டுங் கொண்டேது
மணமான நாற்பத்து முக்கோண சக்கரம்
குணமா யறிந்திடு கூறும்பரை யாமே. (46)

பரையும் பரனும் பாவிக்கும் லெட்சயம்
தரையான தாக்கினை வெல்லுஞ் சதிர்தேகம்

வரைகொண்ட போது வளரும் பொறியாலே
கரைகண்ட லெக்ஷயங் காட்டு மவத்தையே. (47)

அவத்தையின் சூக்ஷம் போலுமா ராய்ந்திடு
சிவத்தை யறிந்து சிவாக்கினை செய்திடு
தவத்தை யறியார் சடலத்தை சூக்ஷிக்க
சிவத்தைபோ லாக்கார் தேகம்விட் டாரே. (48)

வீரான பூசனை விளங்கு குருவென்பார்
கூரேனுங் காணார் கூறினேம் சொச்சத்தில்
தேரவே சொன்னேன் சித்தர்மனங் கூறப்
போதினாலே பெலக்கும் மவுனமே. (49)

மவுனத்தின் மூலம் வாசியின் மூலமும்
மவுனத்தின் பஞ்ச பூதத்தின் மூலமும்
மவுனத்தின் சக்கர லெக்ஷப மூலமும்
மவுனத்தின் சத்தி பூசையும் மார்க்கமே. (50)

மார்க்கமாம் ரோம ரிஷிமச்ச மாமுனி
தீர்க்கமாங் குருமுனி செப்பினா ரீதெலாம்
பார்க்கத் தெரிசனம் பத்தியும் முத்தியும்
சேர்க்கவே பாரு தேவர்நூ லாகுமே. (51)

ஆமப்பா சுந்தரமே அய்யாகேளு
அண்டத்தின் சுண்ணமுடன் வாசிமூலம்
நாமப்பா நிகண்டுபனி ரண்டுநூறு
நாட்டினேன் சூத்திரம்போற் சுருக்கிப்பாடி
வாமப்பா யிருகாண்டம் வாதத்துக்கு
வளமான சூத்ரமிரு நூறுசொன்னேன்
நூலப்பா சூத்திரமும் நிகண்டுசொச்சம்
சூத்திரமும் பார்த்தவர்க்கு முத்திதானே. (52)

சட்டைமுனிவர் நிகண்டுசூத்திரம் ௫௱.

முற்றிற்று



உ

பரமபதி துணை.

96 - வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# ஆதியந்த ஞானம் உ

வெட்டினார் மவுனியல்லோ விந்துபாம்பை
    வேதாந்த அந்தமென்ற வாளினாலே
தட்டினார் மாயைதனைச் சன்னிக்கீழ
    சச்சிதா னந்தவெள்ளச் சார்வினாலே
ஓட்டினார் ஓட்டினார் நிற்குணமயமே
    உத்தமனே அதுவல்லோ ஞானவீதி
தெட்டினார் தெட்டினார் சகலமெல்லாஞ்
    செகஜால வித்தையென்று தெளிந்திட்டாரே. (1)

அண்டமும் பிண்டமொன்றே
    யறிந்துதான் பார்க்கும் போது
எண்டிசை பறப்புக் கப்பால்
    யிருந்திடும் பொருளு மொன்றே
கண்டோர் ஞானிமார்கள்
    கருத்தினில் விளவு மொன்றே
அண்டர்கோ னமர ரெல்லாம்
    அடைந்திடும் பதமு மொன்றே. (2)

சட்டைமுனிவர் ஆதியந்த ஞானம் உ,

முற்றிற்று.



ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் திருவேங்கடத் தேவரவர்கள் குமாரர், போத்திலிங்கத்தேவரவர்களிடமிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பரமபதி துணை.

97-வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# குருசூஸ்திரம் ௨௰.

அப்பான உப்பு ஆதி கணபதி
தப்பாமற் பாதந் தானது போற்றி
செப்பாத ரகசியஞ் செப்பினேன் சுந்தரா
மூப்பான உப்பு மூலமுங் காப்பே. (1)

முப்பூவி னாலே முடிக்கலாம் வாதம்
முப்பூவி னாலே முடிக்கலாம் யோகம்
முப்பூவி னாலே முடிக்கலாம் ஞானம்
முப்பூவை விட்டால் முடியாது பாரே. (2)

பாருநீ சமுத்திர நீரது தன்னை
பாருநீ மேகம் பருகியி ருந்து
பாருநீ ககன மார்க்கத்தி லேகி
பாருநீ வாய்வால் பகுத்திட உப்பே. (3)

உப்பு வெடித்து ஒடிந்து பிடியது
அப்புவின் ரூபம் அதுதானே யக்கினி
செப்பிய பூமியில் சேர நுழைந்து
அப்பது விந்து அண்டம தாச்சே. (4)

அண்டம தான அக்கினி உப்பை
கண்டறி யார்கள் காசினி மூடர்
பிண்ட மதனிற் பிறந்தது காணார்
சண்டனைச் சேர்வார் சாஸ்திரம் பார்த்தே. (5)

சாஸ்திரம் பார்த்தே சாரச்செய் வழலையை
சூஸ்திரம் பார்த்தால் சுளிவாய் முடிந்திடும்

தோத்திரஞ் செய்து தொடுத்த அண்டத்தை
சூஸ்திரம் போலே சொல்லாது நாமே. (6)

நாசித னாலே கோடாமல் வாசியை
வாசிது வான வழலையாங் கட்டி
சேலிதை விட்டால் செயிக்கா தூசாகி
பாலிலே நெய்யைப் பிரித்ததைப் பாரே. (7)

பிரித்தது உப்பு ரவிமதி யக்கி
பிரித்ததே யிலடையின் வழிபது வச்சு
குறித்தே முப்பூ சாக்கிறது மூன்றும்
விரித்தது பாரு வேண்டிய நாடுமே. (8)

ஆடுமே யுப்பா லழியாது காயம்
ஆடுமே வாசி யசையாமல் நிற்கும்
ஆடுமே யோகம் ஆதியுப் பாலே
ஆடுமே யோகம் அப்போது சித்தியே. (9)

சித்தி வெளியது சேர்த்து மேபர்ரே
சித்தி வழிபெறச் செய்திடு வழலையை
சித்தி வெளிபெறச் செய்யினாச் சுண்ணம்
சித்தி வெளிபெறச் செய்ததே கற்பமே. (10)

கற்பத்தை யுண்டாற் காயம் அழியாது
கற்பத்தி னாலே காணலாம் கைலையை
கற்பத்தி னாலே காணலாஞ் சோதியை
கற்பத்தி னாலே காலையுங் கட்டிடே. (11)

கட்டிடச் சித்தியாங் காயப் பரிட்சையை
கட்டிடு கத்தியை நடுவில் வீசினால்
ஓட்டிடு கத்தி யொன்பதுண் டாகும்
முட்டிடு காயத்தில் முள்ளுங் கிழியாதே. (12)

கிழியாது மேனி கெட்டிச் சிலைபோலே
அழியாது காயம் அண்ட மொடுங்கினும்
வழியாது வாசி வானுள்ள மட்டும்
அழியாது யோகியின் அழகிட்ட காயமே. (13)

காயத்தி னுள்ளே காணலாங் கதிர்மதி
காயத்தி னுள்ளே காணலாஞ் சுடரை
காயத்தி னுள்ளே காணலா முப்பூ
காயமே பூமி தானது வாச்சே. (14)

தானது வான தான பூமியில்
தானது வான தன்மை யறிந்திலார்
ஞானது தனக்குள் தானுண்டு வென்று
போனது காயம் புலனறி யாரே. (15)

அறியாது மூடர் ஆல வனத்தை
பரியாது சப்பரம் பாரிதை விட்டால்
தெரியாது சோதி திடமில்லாக் காயம்
குறியாது முத்தி கூடாது அற்பரே. (16)

அற்பமா மூட ரறியாமல் யோகம்
சொற்பமா யெண்ணிச் செய்தே மரித்தார்
கற்பமில் லாட்டால் காணுமோ ஞானம்
அற்பர்செய் யோகம் அழிம்பது பாரே. (17)

பார்த்தே சிலநூல் பாடினதைக் கற்று
காத்தே யடைத்து கனயோகி யென்று
சேர்த்தே சிஷரைச் செய்துப தேசம்
கூத்திது வாகுங் கூடாது முத்தியே. (18)

முத்தியுஞ் சித்தியும் முதல்கருத் தீட்சையும்
சித்தியாய்ப் பாடிய சிறந்த இறுநூறை
வித்தியாச மாக விருதாவில் மூலர்
புத்தியில் லாமற் கிழித்தாரே நூலே. (19)

கிழிபட்ட நூலின் கெடிபெற்ற சூஸ்திரம்
விழிபட யிருப்பதும் வாய்த்தவர் சித்தராம்
கழிபட்ட மூடர்க்குக் காணுமோ அமுதம்
வழிபடப் பாரார்க்கு வாயாது ஞானமே. (20)

ஞானமும் யோகமும் நலமான வாதமும்
பானமு முண்டாம் பரமான உப்பினால்
ஞானமுஞ் சித்தி நவிலாதே சுந்தரா
மீனமே மேசமா யிருபது முற்றே. (21)

சட்டை முனிவர் குருசூஸ்திரம் ௨௰.

முற்றிற்று.



உ

குருவே துணை.

98 - வது:

சட்டை முனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# மதியமுத சூத்திரம் சா.

தானென்ற மனமேது தியானமேது
சரியையொடு ஞானமுதல் வாதமேது
மானென்ற விழிமடவார் மயக்கமேது
மைந்தர்பெண்டீர் சுற்றமென்ற வகைதானேது
கோனென்ற உபதேச வித்தையேது
குருவேது கைகாட்டுங் கொள்கையேது
ஊனென்ற உடம்பேது உயிர்தானேது
ஒன்றுமில்லா வெறும்பாழி லொடுக்கந்தானே. (1)

ஒடுக்கமடா வோங்காரக் கம்பமாச்சு
ஓகோகோ அகாரமங்கே பிறந்ததாச்சு
அடக்கமில்லார்க் கொன்றுமில்லை யாத்தாள்சொன்னாள்
அப்பனே உங்களுக்கு யானுஞ்சொன்னேன்
படபடக்க வொண்ணாது பதத்தில்நின்று
பாரடா நிற்பானைப் பருவமாக
உடற்கருக்கு முயிர்பெருக்கும் வழிபுக்காறும்
உத்தமனே யோகத்தி லுரைத்துமுட்டே. (2)

உறத்துடனே மந்திரத்தைச் சொல்லக்கேளு
உற்பனமாம் அகாரமொடு மகாரத்தாட்டு
இறத்துடனே உகாரமது மூன்றுஞ்சொன்னால்
சிக்குமடா சிவயோகஞ் செப்பக்கேளு
முறைகுறைகள் வாராம லுச்சியோடு
மூலமு தண்டகினை வோடுமூட்டி
அறைக்கரை திர் அ-இ-உ-எ-ஐ யென்று
அப்பனே ஓங்கார மூலத்தானே. (3)

ஊணுநீ அவ்வெனவும் அக்கெனவும் அரீயும்
உத்தமனே சித்தரிக்குத் திருச்சுழியுமொட்டு
வேணபடி யோகமெய்தும் ஞானமெய்தும்
வித்தையெல்லா முந்தன்வச மாய்வசிக்கும்
தானுமா லியன்றானுந் தேடியோடுஞ்
சற்குருவு முன்வசமே சாருவார்கள்
ஆணியதுக் குறையெல்லாந் திறந்துசொன்னோம்
அப்பனே சரிகைவிட்டுக் கிரிகையேறே. (4)

ஏறவென்றால் கிரிகையெளி தல்லக்கேளு
இயல்பாகச் சரிகையிலே உறத்துமேற்போய்
ஆறுதலத் துக்கருவி காணமாறும்
அப்பனே யிடையொடுபின் கலையும்பாரு
வேறுவினை வாராம லுடலைப்பேணு
வேதாந்தக் குருபதத்தில் விரைந்துநில்லு
தேறிடுவாய் காலாக்கினி சிவத்தைநன்றாய்
சித்திசெய்து தீட்சையைநீ திடத்திற்றள்ளே. (5)

தள்ளியே நடையிட்டு அங்கென்றாணித்
தரித்திடத்தில் மனதைவைத்துச் சார்பில்நில்லு
மெள்ளமெள்ள அங்கென்று நடுவில்வைநீ
வேதாந்தச் சிங்கெனவே யுள்ளேயேத்து
வள்ளலே அமுதமங்கே அருவிபாயும்
வசமாக முன்னேத்தி யிருத்திரேசி
தெள்ளமுதப் பாலுண்டா லாயுசுண்டு
சிவயோகஞ் சித்திக்குந் திறமிதாமே. (6)

சட்டைமுனிவர் சூத்திரம் ௯.

முற்றிற்று.



ஸ்ரீ வில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் சங்கரலிங்கப் பிடகர் குமாரன் அழகுமுத்துப் பண்டிதரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடப்பட்டது.



உ

குருவே துணை.

99 - வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# சூத்திரம் உரு



விருத்தம்.

ஆகம புராண வேதம் அறிவுடன் சாஸ்தி ரங்கள்
ஏகமும் பொருளொன் றாகி எவ்வுயி ரனைத்துந் தானாய்
மோகமா யாண்பெண் ணாகி முடிவிலே வெளியு மான
தேகமு நிறைந்த பூரணஞ் சிவகுரு கந்த னாமே. (1)

வேறு.

ஆமப்பா ரெண்டுலட்சம் தைம்பதினாயிரமும்
அதைக்குறுக்கி யிருபத்தையா யிரமுஞ்சொன்னேன்
தாமப்பா அதைக்குறுக்கி ரெண்டாயிரத்தைநூற்
சகலசித்துப் பொருளெல்லா மிருனூத்தைம்பதிலே
ஏமப்பா வேதைரச வாதஞானம்
இருபத்தைந் தாமிதனை யிருந்துபாரு
ஓமப்பா அதைக்குறுக்கி ரெண்டதாக்குள்
உரைத்திட்டேன் பூரணத்தை யூணிப்பாரே. (2)

பாருநீ யிடைபிங்கலை சுழிமுனையின்மையம்
பதறாமல் மனக்கண்ணை யதிலேயூணிக்
காருநீ குருபதத்தை யடுத்துக்காத்தால்
கருணையுடன் யிடமிவட மென்றுசொல்வார்
ஆரும்நீ யறியாத யிடத்தைப்பார்க்கில்
அப்பனே ஒளிவெளியாய் வெளியிற்சேரும்
சேருநீ வெளிதனிலே சேர்ந்தாயானால்
செகமெல்லாம் நீயாகுந் தெளிந்துகண்டே. (3)

கண்டுபார் பூரணத்திற் கருவுதன்னைக்
கலந்துமனம் நெகிழாம லிருத்திப்பாரு
உண்டுபா ரமுதத்தை யிரக்கியுண்டால்
உத்தமனே தேகமது கற்றாணாகும்
விண்டுபார் நாசிநுனி மையமீதில்
வீற்றிருப்பாள் வாலையடா புரியஷ்டத்துள்
பண்டுபா ராதியந்தம் நிறைந்தசோதி
பாலனெனுங் குமரனைநீ வணங்குவாயே.

வணங்கினாற் சகலசித்துங் கைக்குள்ளாச்சு
மைந்தனே அமுதமது சிந்துஞ்சிந்தும்
இணங்கினால் நீயவனு மொன்றேயாகும்
மென்மகனே நினைத்ததெல்லாங் கூடும்பாரு
புணங்கினால் மனம்நினைக்கக் கூடாதப்பா
புத்தியது அறிவுக்குட் புகுந்ததானால்
அணங்கினா லாத்மாவும் ஒன்றாய்ப்போகும்
அப்பனே அதிசயத்தை யறைகிறேனே.

அறைகிறேன் ரசவாதஞ் செய்யச்சொல்லி
அருளினார் பதினெண்பேர் நூல்கடோறும்
அறைகிறேன் சற்குருதா னெனக்குச்சொன்ன
அந்தரங்கக் கருவதனை வெளியாய்ச்சொல்வேன்
அறைகிறேன் வழலையென்ற சிரசினுள்ளே
அப்பனே நாகமது சுத்திசெய்து
அறைகிறே னதில்வைத்துப் புடத்தைப்போடு
அப்பனே செந்தூர மாகும்பாரே.

ஆகுமப்பா செந்தூரஞ் சகஸ்திரத்தொன்று
அணைத்திடவே நவலோகந் தங்கமாகும்
வேகமடா நாகமது வழலைசேர்ந்தால்
வேறில்லை கண்டதெல்லாம் பழுக்கும்பாரு
பாகமடா குருவினிட மறிந்துகொண்டு
பண்பாக ருத்ரசெபஞ் செய்துபாரு
மோகமடா உலகனைத்து முன்வசமேயாகும்
முக்கியமிது யாவருக்கும் விள்ளாதென்னே.

விள்ளாத கருவென்ன சொல்லக்கேளு
மேதினியி லலைவார்கள் கருக்காணாமல்
விள்ளாத கருவென்ன கொடியதுகுதனிலே
விளம்புகிறேன் சாறுமொரு படிதான்வாங்கி
விள்ளாதே சாதிலிங்கக் கட்டிவாங்கி
மேலொருசா மஞ்சுருகக் கிண்டிடவே மெழுகாம்
விள்ளாத கருவென்ன பரிச்சியிழ்கனிலே
மேவியே மெழுகுமதிற் பாத்திரையே. (8)

வையப்பா அதன்மேலே செயரிவைத்து
மைந்தனே மேலுமந்த மெழுகைவைத்து
செய்யப்பா மேல்மூடி ரெண்டுமூடி
திறமாக மெழுகிலே மண்ணுஞ்செய்து
கையப்பா மோடுசெய புடத்திற்போடு
அந்தணுக்கும் வடுகனுக்கும் பூசைசெய்தீ
மெய்யப்பா சொல்லிவிட்டேன் செந்தூரந்தான்
விளம்பரிது பத்துக்கொன் றீய்ந்திடாயே. (9)

ஈந்திடவே பழுக்கும்வய ததுபன்னாறு
யென்னசொல்வேன் மூலிகையின் வேகந்தன்னைத்
தோய்ந்திடவே நவமூலம் ஒன்றாய்க்கூட்டு
சூட்சமடா மூலிகையின் குணத்தைப்பாரு
ஆய்ந்திடவே குருபதத்தை அடுத்துக்காரு
அவர்சொல்வா ரதின்பெருமை யறிவிப்பார்கள்
தொய்திடவே மெய்சொல்லித் தொழிலைச்சொன்னால்
சொன்னபடி யாகுமிது தொழிலைப்பாரே. (10)

பாரப்பா யிந்நூலைக் கண்ணிற் காட்டார்
பாதகர்க்குக் காட்டாதே கண்ணிலேதான்
சாரப்பா பொய்யருக்குந் துஷ்டருக்குஞ்
சளமான யீனருக்கும் நூல்கொடாதே
ஆரப்பா யிந்நூல்தா னார்க்குக்கிட்டும்
அப்பனே குருபதத்தைத் தொண்டுபண்ணி
பேரப்பா பெற்றவர்க்கு யிந்நூல்கிட்டும்
பேசாத கருவொன்று பேசுமேவன். (11)

## யோக ஞான சாலந்திரத் திரட்டு.

பேசுகிறேன் கருநெல்லிக் கனிதானென்று
பிரமாவி னஞ்சுசத்தின் கருத்தானென்று
வீசுகிறேன் கெந்தகத்தின் கருத்தானென்று
விளங்கியதோர் மலசலத்தி னுப்புங்கூட்டி
ஆசுகிறே னிதுவகுஞ் சரியாய்த் தாக்கி
யன்புடனே வாயமுதங் கொண்டுஆட்டி
பூசுகிறேன் புழுகோடு பூரங்கூட்டிப்
புகழாகச் சிமிழதனி லடைத்துக்கொள்ளே.

கொள்ளவே தாம்பிரத்தைச் சுத்திசெய்து
குணமாகத் தகடுதட்டி வைத்துக்கொண்டு
விள்ளவே போகாது மெழுகுதன்னை
விளங்கியதோ ரமுதத்தைத் தொட்டுப்பூசி
அள்ளவே விளக்கினில்நீ வாட்டும்போது
அரகரா மாத்ததுவும் பத்துமாச்சு
கள்ளமே யில்லையடா சத்யஞ்சொன்னேன்
கபடகற்றி ஆயிபதம் பணிந்திடாயே.

பணிந்திடவே சிவன்சத்தி சேர்ந்ததாலே
பாங்கான சகலகுரு திருநீலகண்டர்
அணிந்திட்ட துருசினுட சுண்ணஞ்சொல்வேன்
அப்பனே கருவறிந்து செய்துபாரு
கணிந்திட்ட கருநாவி துருசுதன்னிற்
கடுகவே கவசமிட்டு ரவியில்வைத்து
கணிந்திடவே ஆறுநாள் துருசிடைக்கு
கருவங்கத் தகடுதட்டிக் கவசஞ்செய்யே.

செய்யவே புதுப்பாண்டந் தன்னிலப்பா
திறமாக உவர்மண்ணைப் பாதியிட்டு
உய்யவே பூநீருதிரி விறகனந்தான்
உத்தமனே அண்டத்தின் பொடிதான்போடு
பையவே துருசையதி னடுவேவைத்து
பாங்காக மேலுமந்தப் பூநீர்போடு
மெய்யெனவே மேல்மூடி சேலிசெய்து
விபரமுட னடுப்பேற்ற வகையைக்கேளே.

கேளப்பா அடுப்பைமுன்னே சுத்திசெய்து
கணேசருக்கு மாயிக்கும் வயிரவர்க்கும்
நாளப்பா கந்தனுக்கும் பூசைசெய்து
நலமாக அடுப்பேற்றித் தீயைமூட்டு
வாளப்பா சாமரெண்டு கமலம்போலே
வருமிருசா மந்திபாக் னியெரித்து
வேளப்பா அதன்பிறகு தீநிறுத்தி
வெற்றியடா மறுநாளி லெடுத்திடாயே. (16)

எடுத்திடவே பூசைசெய்து எடுத்துப்பாரு
யென்னசொல்வே னுலவகைச் சுண்ணமாச்சு
அடுத்திடவே வெவ்வேறே யெடுத்துக்கொண்டு
அப்பனே யினமறிந்து யினத்திற்போடு
கொடுத்திடவே வகையேது தொகையுமேது
கொள்கின்ற அண்டமட்டுஞ் செயிக்குமப்பா
தடுத்திடவே போகாது ஒருவராலுஞ்
சண்முகத்தி னாணையிது நிசந்தான்காணே. (17)

காணவே மறப்பதனைச் சொல்லக்கேளு
கருவென்ன பத்தாகுந் தியானஞ்சொல்வேன்
உண்ணவே வங்குசிங்கு அங்கென்றுந்தான்
உத்தமனே திலதமிட்டுச் செபித்தாயானால்
பூணவே லெட்சமுரு செபிக்கும்போது
புகழ்பெறவே சித்தியடா தேவர்காணூர்
நாணவே மறைப்பதனை வெளியாய்ச்சொல்லி
நாட்டினேன் பூரணத்தில் நாட்டினேனே. (18)

நாட்டினே னஷ்டகர்மந் தன்னைச்சொல்வேன்
நன்றாக வட்டமிட்டுக் கருத்தாயூறு
பூட்டினேன் இங்குடனே சிங்கியென்று
புகழாக லெட்சமுரு செபித்தாயானால்
ஆட்டினேன் மாரணமும் நாழிகையிலாச்சு
அலன்கருவும் நாமமுதல் காலயாமாறி
வாட்டினேன் மனந்தனிலே நினைத்தாயானால்
வடுப்பட்டுத் தீப்பட்டு யெரிங்யுதானே. (19)

எரியுமடா அண்டமொடு புவனமெல்லாம்
என்மகனே நினைத்ததெல்லாங் கூடும்பாரு
அறியுமடா எதிர்நிற்க மாட்டானப்பா
அப்பனே கோபமென்ற மாயைதள்ளு
உரியுமடா எட்டெட்டும் நிமிசமாடும்
உத்தமனே சற்குருவை வணங்கிக்கேளு
புரியுமடா தேவர்முதல் தெய்வமெல்லாம்
புத்தியென்ன வென்றுஉன்னைப் பணியும்பாரே.

பணிவதற்கு வகையொன்று சொல்லக்கேளு
பாங்காகப் பூரணத்திற் சொல்வேன்மைந்தா
அணிவதற்குத் தேகமதில் கற்பம்உண்டு
அப்பனே வெண்சாரை யறிந்துபாரு
கணிவதற்கு அறியார்க ளுலகத்தோர்கள்
கண்பார்த் ததையுநீ யுண்டுதேறு
பிணியதற்கு யில்லைவாத பித்தமூன்றும்
பொல்லாத கர்மமெல்லாம் பொடியென்றெண்ணே.

எண்ணவே காலையுச்சி மாலைமூன்றும்
இயல்பாகப் பரைபூசை செய்துஉண்ணு
நண்ணவே யெமனில்லைப் பிரமலிபிதாண்டும்
நாதாக்க ளுன்னைமெச்சி அமுதமீவார்
உண்ணவே கற்பமது ஆர்க்குங்கிட்டா
துரைத்திட்டே னுனக்காகச் சொன்னேனையா
பண்ணவே குருபதத்திற் பணிந்துநீதான்
பகரரிய கற்பமுண்டாற் சித்தியாச்சே.

சித்திக்குஞ் சகலசித்துந் தொட்டதெல்லாந்
தேவர்முதல் பஞ்சகர்த்தாள் வேலைசெய்வார்
முத்திக்கும் வழியிதுவே அமுரிகொண்டால்
மூதண்ட சின்மயத்தைத் தாண்டியேறும்
பத்திக்கு மனமுறுதி திறமதாகும்
பரையுனது பிடமிருந்து வார்த்தைசொல்வாள்
சத்திக்குஞ் சிவத்துக்கும் பிதுவேகற்பம்
தாரணியி லீனருக்கு நூலீயாதே.

ஈயாதே யிந்தனால் செகத்திலில்லை
என்மகனே சித்தருக்குங் கிடையாதப்பா
வாயாதே தவசிருந்து அநேககாலம்
மக்களே சிவயோகஞ் செய்தாற்கிட்டும்
காயாத விருட்சமிது காய்க்குமப்பா
கவனமது வைத்தேகாட் சரத்தைப்பாரு
தோயாதே தோடுகரு அடியைப்போற்றச்
சொல்லுவார் யீயென்று காட்டுவாரே. (24)

காட்டுவார் அகாரமொடு உகாரம்ரெண்டுங்
கருத்தாக அடிமுடியில் வைத்துக்கொண்டு
ஊட்டுவா ருண்டுபார் மையகண்டம்
ஊமையெனும் இகாரத்தைச் சொல்லாரப்பா
பூட்டுவார் பவனமென்ற திதுவேயாகும்
புலையருக்குக் காட்டினால் தலைதெரிக்கும்
நாட்டுவா ரவரையிப் படிதான்சொல்வார்
நான்சொல்சூஸ் திரமிருபத் தைந்துமுற்றே.

சட்டைமுனிவர் சூத்திரம் உரு.

முற்றிற்று.





மதுரை வடக்குவாசல் யானைக்கல்தெருவிலிருக்கும் வித்துவான்
மு. குழந்தைவேலுப்பிள்ளை யவர்களிடமிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதி
யின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன்றுணை.

100-வது:

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# தண்டகம் அக.



பதுமலர்ப் பாணமுத முற்றவாலை
பரைச்சியெனும் வலையிடைச்சி சிறுபெண்ணுத்தாள்
சதுர்முகனு ரிருதயத்தில் விஞ்சைபோலச்
சகலருக்கு மனோமணியாய்த் தானேநின்று
முதுமறைபோ லருணகுல மாதுமாது
முழுதுமதி ஆகாச முழக்கமாகிக்
கெதிமோச்சம் வேணுமெனப் பரத்திற்சென்று
கீழ்திசையை நோக்கித்தவஞ் செய்தாள்பாரே. (1)

பார்மகனே மேல்திசையை யிருகால்கொண்டு
பத்திநின்று பதியமனம் பாங்காய்நின்று
காரிலகு கருணையினி மானேகண்ணே
கமலவல்லி கலையான காமரூபி
சீருடைய சிவபோதம் சத்திபோதம்
தீர்க்கமுள்ள மார்க்கமடா தேவிவாலை
கூர்விழியி னடுவாகிக் கொண்டேநின்று
குமரியவ ளாடினதோர் சித்தென்சொல்வேன். (2)

சொல்லவொண்ணுக் கபடுடைய சிறுபெண்ணுத்தாள்
சோதியடா செகசோதி மார்க்கக்காரி
வல்லபமாய் தன்னுடைய மானம்பெற்றத்
வாலையடா பூரணமாய் வந்தவாமி
தில்லைவனந் தன்னிலவ ளாடுங்கூத்தைச்
சிவசிவா யென்னசொல்வேன் ஒருகால்தன்னில்
வல்லவடா ஒருவிருது சொல்லப்போகா
தவ்விருதைக் கட்டியவ ளாடினுளே. (3)

ஆடினாள் திருநடனம் ஒருகால்தூக்கி
அசையாத பூரணமென் றம்மைக்கண்டு
பாடினா ளனுராக மென்னசொல்வேன்
பரிதிமதிச் செயலுடைய பருமமாது
நாடினாள் மேற்றிசையை நாடிநின்று
நம்வான நாவடியாங் கொப்பிற்சென்று
தேடினாள் தெருவிலொரு காசைப்போட்டுத்
திகைத்துநின்று மறுமடியுந் தெளிந்தாளாத்தான். (4)

தெளிந்துநின்று தெளிந்ததெளி வென்னசொல்வேன்
சிவசிவா மதியமுதச் செய்கைசெய்கை
கொழுந்துநுனி தன்னிலொரு தில்லைநின்று
கொண்டெதடா அண்டசரா சரங்கள்தோறும்
அழிந்துதடா அழிந்தமனத் தவ்வைகாணு
ரவனுடைய ரூபமடா மாயாமாயம்
செழுங்கமலப் பதவியடா அவளைக்காணச்
செகத்திலொரு சித்தனவன் கோடிக்கொண்டே. (5)

ஒன்றான ரூபமடா அருமைப்பெண்ணாள்
ஒருகாலைத் தான்மடக்கி ஒருகால்தூக்கி
நின்றாளே நின்றநிலை யென்னசொல்வேன்
நிருவிகற்ப சமாதியடா துரைப்பெண்ணாத்தாள்
வண்டான ரூபமடா பஞ்சவர்ணம்
வரிசையுள்ள வரிசையடா வாமிவாமி
சென்றாளே மேற்றிசையை வெல்வதற்குச்
சிவசிவா வாசியென்ற திறம்பெற்றாளே. (6)

திறம்பெற்ற தெரிவையடா காடைக்கண்ணி
சென்றுணர்த்தித் தானெடுத்து வித்துத்தன்னை
உறம்பெற்ற வயலூரில் தொளிகலக்கி
யுத்தமியாள் தெளித்தவித்து ஒன்றுடத்தாய்
அறம்வளர்த்தா ளண்டசரா சரங்கள்தோறும்
அசைந்தாடி ஆடிநின்ற அருமைப்பிள்ளை
வரம்பெற்ற செய்கையென்ன சொல்லப்போமோ
வாலையடா சித்தருக்கு வாலைதானே. (7

# யோக ஞான சாஸ்திரத் திரட்டு.

வாலையடா குமரியிரு பெண்ணாளாத்தாள்
வாயியெனப் பூரணமாய்ப் பதிபெற்றோர்க்கு
ஊமையென்ற வூமையடா ஆருங்காணார்
யேகவஸ்து யோகமென வெங்குந்தானும்
காலையடா மாலைநடு வீதிக்குள்ளே
கற்பூரத் தீபமெனக் கருணையாகிப்
பாலைவனத் தீசருட னாடுங்கூத்தைப்
பகருதற்கு நாவுமுண்டோ பாரின்மீதே.

பாரான பிருதிவியும் அப்புங்கூட்டிப்
பாலான தேய்வுடமே சாமதிகொண்டு
தேறாத சித்தருக்குத் தேத்தத்சொல்லிச்
சிவசிவா வாசியென்ற ரூபங்கொண்டு
ஊரான ஊர்தனையும் ஆண்டுகொண்டு
உலகுதனி லுயிர்பயிருக் குதவியாகி
மாறான ஆசனத்தின் மேலேநின்று
வகையறிந்து அதிகார வலுச்செய்தாளே.

தாளான பிதழ்ப்பூவை யறியவேணும்
தன்மையுள்ள அதின்மணத்தைக் காணவேணும்
நீளான சிவமகிமை தியானங்கண்டு
நிலைக்குமென்ற சொல்லுறுதி யறியவேணும்
வாழாத பெண்ணுக்குத் தாலியென்ன
வசனிக்குந் தொனியோசை மதிக்கவேணும்
தேளான தேள்கொடுக்கின் விஷத்தைக்கண்டால்
சென்னிமலைச் சன்னதியை யுன்னிப்பாரே.

உன்னிவித்தை யாடுவதை எண்ணிப்பார்க்கில்
ஓகோகோ அந்தரமென் றுண்மைசொன்னாள்
கன்னிதிரி சூலியடா கபாலிவாமி
கயிலாசத் திருநடனக் காளிகாளி
விண்ணிலொரு காலூன்றி நடனஞ்செய்தே
விதிமதியோ கெதிமோச்சம் விள்ளப்போமோ
வன்னிவளர் சன்னதியைக் கண்டபேர்கள்
வலுவுடைய மதியமுத மார்க்கத்தோரே.

மார்க்கமுள்ள சத்தியடா மூர்க்கமெத்த
வளர்மதியின் கருவறிந்த வாமரூபி
ஏர்க்கமுள்ள சம்சாரப் பெருமைக்காரி
எத்தனையோ புத்திமதி சுத்தமுள்ளாள்
மார்க்குமிடந் தன்னிலொன்று சித்தாண்டாக்கிப்
பதுமமல ராசனத்திற் பாங்காய்நின்று
ஆர்க்குமிவ ளதிகார வஸ்துவஸ்து
ஆதியந்த மிகநிறைந்த சத்திதானே. (12)

சத்திசிவ மென்றொருத்தி அருமைப்பிள்ளை
சகலமதி யுள்ளசிவ சத்திமாது
புத்தியிலே வெகுபத்தி யிருவோர்க்குந்தான்
பூரணமே என்றொருத்தி புதுமைக்காரி
எத்திசையும் ஒருகுடைக்கீ ழாள்வாள்பாரு
இவள்நீலி யிவள்தூளி யேகவஸ்து
சுத்தியிலே வெகுசுத்தி வாமப்பெண்தான்
சுருதிவிந்து நாதமெனச் சொல்லுவாரே, (13)

சொல்லுவா ளொருசொல்லா லுலகையாண்டு
சுத்தமுள்ள சித்தருக்குச் சோதியானாள்
தில்லைநட ராசனுட பதியிற்சென்று
தீர்க்கமென்ன என்னுடைய மார்க்கமென்ன
நல்லகுண முடையவரே சொல்லக்கேளும்
நான்நீயுந் தில்லைவனந் தன்னிற்சென்று
செல்லக்கால் திருநடனம் பாருபாரு
சிக்கெனவே ஒருகாலை இறுக்கினாளே. (14)

இறுக்கியிவ ளொருகாலைச் சுழித்துவாங்கி
இளையான முழங்காலைக் கணைக்கால்மேலே
சுருக்கி யாரு காலெடுத்துத் தியானஞ்செய்து
சுந்தரமே நீபதனம் ஆட்டைப்பாரு
திருக்கறவே ஆடினதோர் குறிப்பைக்கண்டு
சிவசிவா என்னசொல்வேன் நீநான்நீயே
உருக்கமுள்ள கண்மணியே கால்தானேறும்
உனதுகெதி என்றுசெய லுண்மைதானே. (15)

உண்மையென்ற மவுனபர தேசிவாலை
ஊடாடுங் கயிலாசத் துண்மைகேளீர்
வெண்மைநிலா மதியெனவே விளங்குமேரு
வெகுகோடி சித்தர்தவஞ் செய்யுமேரு
தன்மையென்ற ஆதியந்தம் நிறைந்தவாமி
சற்குருவாய் நிற்குமொளி தழைத்தமேரு
கண்மைதின்மை யறிந்துமதி நிறைந்தமேரு
நற்கமல முற்றதிரு மேருதானே.

தானவளாய் நின்றவுல கெங்குமப்பா
தன்மையுள்ள பூரணமாய் நின்றாளாத்தாள்
நானவளைக் காணுதற்கு என்னசொல்வேன்
நான்செய்த தவப்பெருமை மேருவாச்சுக்
கோனருளாற் கண்டனடா ஆத்தாள்ரூபம்
குழந்தையடா சிறுமதலை கோலக்காரி
வானவர்கோ னறியாத சத்திசத்தி
வசையகற்றும் திருவாணி வாமப்பெண்ணே.

பெண்ணான நீலியடா ஐவருக்கும்
பெருமையுள்ள சத்தியடா பேதைபேதை
கண்ணான நடுமதியும் விண்ணுக்குள்ளே
கற்பூரத் தீபமெனக் கலந்தாளாத்தாள்
பண்ணான மதியமுதப் பாலையுண்டு
பதுமமல ருச்சியின்மே லிருந்துகொண்டு
விண்ணான விண்ணிலொரு நடனஞ்செய்தே
வேதாந்தச் சத்தியென விளங்குவாளே.

விளங்குவாள் எட்டிரெண்டும் நான்தானென்று
விஞ்சையஞ்சு மொன்றுமடா நான்தானென்பாள்
கலங்கமற்றக் கன்னியடா காமரூபி
கற்புடைய மங்கையடா கமலமாது
இளங்குமரி நீலியடா வயதோபத்து
இவள்சமைந்து பாத்துடனே யேகமாகி
உளங்கனிந்து பூரணமாய்க் கெற்பமாகி
உற்பனமாஞ் சத்திசிவந் தன்னையீந்தாள்.

## சட்டைமுனிவர் தண்டகம் ௮௧.

சத்திசிவம் யிதுவரையு மீன்றாளத்தாள்
ஞானவளாய் நின்றுதவங் காணசெய்தாள்
வெற்றிபெற ஆதியந்தம் நடுவில்நின்று
வேதாந்த சுந்தரமே சொல்லக்கேளு
முத்திபெற வந்தாண்டு கொள்வாயானால்
மூதண்டம் யெப்படியோ சொல்லுசொல்லு
புத்தியுள்ள கண்மணியே சொல்லக்கேளு
புதுமையுள்ள அண்டமது வாளியாமே.

ஞானவளாய் நின்றனடா அண்டந்தோறும்
நாதாந்தப் பேரொளியி னம்மையாலே
பானமுத முண்டனடா மேரிற்சென்று
பரவிந்து நாதமென நின்றேனப்பா
வானுலகு தன்னில்திரி மூர்த்தியாகி
வாசியெனப் பூரணநால் வேதமாகி
ஊனான பஞ்சகர்த்தாள் வேசங்கொண்டு
ஓமெனவே நின்றகுரு நந்திதானே.

நந்திமதி யெந்தனுட மனமேயாகும்
நற்கமல விந்துகுரு நாதனாகும்
அந்தமென நின்றநிலை நீயேயாகும்
ஆதிபரா பரமெனவே அருளைநோக்கிச்
சுந்தரஞ்ச ரெந்தனுட சத்திசத்தி
சுருதிவள ரிந்திரகுலந் தரைப்பெண்ணாத்தாள்
மந்திரமாம் ஓரெழுத்தை ம[illegible]ளாத்தான்
மனோன்மணியாம் பூரணத்தின் வகையைப்பாரே.

வகையான வகையேது வாமம்வாமம்
வாசிவளர் பூரணமே சத்திசத்தி
துகையான துகையேது அந்தா அந்தா
துருவநிலை மேருவெனச் சொல்லலாகும்
நகையான பலபணிதி ரூபமொன்று
நற்கமல சோதியடா நந்திநந்தி
குகைவாச விருபுறத்தில் துவாரபாலாள்
கும்பமுனி தஞ்சமெனக் குடிகொண்டாரே.

குடிகொண்ட பஞ்சகர்த்தா ளெழுத்தஞ்சாகக்
கொண்டதொரு கோலமெனக் குறிக்கப்போமோ
அடிகொண்ட நகாரமடா வசியமாகும்
அப்பனே மகாரமோ கனமேயாகும்
துடிகொண்ட சிகாரந்தம் பனமேயாகும்
துருவமுள்ள வகாரமுச் சாடானத்துக்காகும்
முடிகொண்ட யகாரமா ரனமேசெய்யும்
முக்கியமுள்ள சித்தர்கள்தான் மொழிந்தவாறே.

வாறான சூரியன்று னழைப்புக்காகும்
வந்ததொரு சந்திரன்றன் பேதஞ்செய்வான்
காரென்ற அக்கினியேழ் சுவரிஞேடே
கலந்துநின்று அட்டாங்க யோகமானர்
ஊரான கருவறிந்து செய்வோர்க்கெல்லாம்
உதவியென நின்றுளே உலகமாது
தேருத சித்தருக்கு இந்நூலைச்
செவியுரைக்கச் சொல்லியோரு சொட்டுப்போடே.

போடப்பா யெட்டுவகை யோகத்துக்கும்
பொருளான கருவொன்று சொல்லப்போமோ
நாடான கருமானஞ் சொல்லப்போமோ
நடுவான ரூபமடா யாருஞ்சொல்லார்
தேடாமல் தேடியல்லோ சித்தரெல்லாம்
திகைத்தல்லோ பூரணத்தை நம்பிக்கொண்டார்
வாடாத பூமாலை வாதங்கண்டால்
வந்ததடா அட்டாங்க வரிசைதானே

வரிசையுள்ள பூரணியே தெய்வந்தெய்வம்
வாமியடா அவளுடைய மார்க்கங்கேளு
உரிசையென நம்புவர்க்கு உலகமாதா
ஓங்காரங் கொண்டவர்க்குச் சிகாரமாவாள்
பரிசுடைய பார்வதிப்பெண் நானேயென்பாள்
பகாரதியார் பொருளுடைய பசுமைக்காரி
அரிதான அட்டாங்க யோகத்துக்கு
அவள்திறமை யல்லாமல் வேறொன்றில்லை,

கும்பிட்ட குறிப்பென்ன சொல்லுஞ்சொல்லுங்
கூடியிரு கைகூட்டிக் குவித்துநெற்றி
அன்புற்ற தவப்பெருமை யென்னசொல்லும்
அதீதமென்ற பூரணத்தி னறிவைச்சொல்லும்
சென்புற்ற கருவென்ன அப்புவென்ன
தீயென்று சொன்னபொருள் தீர்க்கமென்ன
வின்பட்ட வெளியென்ன வேதமென்ன
வேதாந்த நிர்க்குணத்தின் விபரஞ்சொல்லே. (32)

திருமந்திரம்.

சொல்லுமே வனண்டஞ் சுருதிமுடிக்கிடம்
வெல்லுவேன் பூரணம் வேதாந்த நிர்ணயம்
அல்லும் அடிமுடி யகண்டம தாகத்
தில்லைப் பதியிற் சென்றிட முத்தியே. (33)

முத்தியைக் கண்டு மும்மலம் போக்கிப்
பத்தியைக் கண்டு பகுத்தறி மந்திரம்
அத்தி முகவன் ஐம்பத்தோ ரட்சரம்
சித்தி யீதெனவே செபமது செய்யே. ((34)

செபமது செய்யத் தேகமுஞ் சித்தியாம்
கபமது அறுத்துக் கருத்தையுள் ளிருத்தி
உபநிட தப்பொரு ளுண்டென நம்பி
தபமது செய்யத் தானவ னாமே. (35)

தானவ னான சதாசிவ விந்துவைக்
கோனவ னான குறிப்பறி மந்திரம்
வானவர் முனிவர் வணங்கிடு மந்திரம்
ஆனவள் சத்தி ஆகாச ரூபியே. (36)

ஆகாசத் தேரணி யாரு மறிந்திலர்
சாகாத பூரணந் தனையறி மந்திரம்
வேகாத சென்னி வேத நிராமயம்
போகாப் புனல்நிலைப் புகலவு மரிதே. (37)

அரிதான அச்சரம் அவ்வும் உவ்வாகும்
குருவான தேசிக் குருவாம் பராபரம்

தருவாகி நின்ற தன்மை சதாசிவம்
பரியான தேசி பரதேசி யாமே. (38)

பரதேசி யென்று பகுத்தறி மந்திரம்
குருதேசி யான குண்டலி சத்தியாம்
யெருதேறும் வாசி யேக நிராமயம்
உருதேசி வாமி ஓங்காரச் சத்தியே. (39)

ஓங்கார ரூபி ஒன்றான பூரணம்
ஆங்கார மாகி யமைத்தருள் மந்திரம்
றீங்காரஞ் சென்று நினைத்தருள் வாசி
பூங்கார மான பொன்னடி மூலமே. (40)

மூலம தான முத்தி நடுவணை
மூலத்தில் நின்று மொழிந்தருள் மந்திரம்
காலுற்ற வாசிக் கருணைப் பராபரம்
வேலுற்ற அண்டம் மெய்யுற்ற பிண்டமே. (41)

பிண்டமே சத்தி பிரணவ ரூபமாம்
அண்டமே விந்து ஆதி நிராமயம்
விண்டிடப் போகா வேதம் பிறந்திடம்
கண்டவ ரிலலைக் கற்பத்தின் சாரமே. (42)

சாரமே விந்து சண்முக மானது
காரமே சத்தி கயிலாய பூரணை
வீரமே சோதி வின்ளரி தானது
பூரம தான புதுநிலை உப்பே. (43)

உப்பான ஆதி வுவான பூரணம
செப்பாத காரணம் சித்காதி போதகம்
தப்பாத வாசி தன்னுற வாகினால்
அப்பா வழலை யானந்த போதமே. (44)

போதம் நிறைந்த பூமலர் வாவியில்
நாதம் நிறைந்து நன்மலர் பூத்து
ஆதவன் பெண்டி ரவளுரு வாகிச்
சூதகந் திரண்ட சொல்லறி வீரே. (45)

அறிவீர் கருவி லஞ்சுருப் பட்ட
குருவான உப்பினங் குருவறி மந்திரம்
உருவான ஆதி உவரை யறிபவர்
அறிவான வாசி யகண்டம தாமே. (46)

கண்டத்தி னூலே காணுப் பொருளொன்று
அண்டத்தின் கூறு யாரு மறிந்திலர்
பிண்டத்தை நோக்கிப் பிசகா திருந்திடிற்
சென்றுற்ற பாதை சிக்கெனக் காணுமே. (47)

காணுமே விந்து கபிலைப் பதிதனில்
தோணுமே நாதஞ் சுருதி முடிந்திடம்
பேணுவாள் சத்தி பிறப்பிறப் பன்றியே
ஊனம தாகி உயிராகும் வாசியே. (48)

வாசியாம் பூரணம் வாகாஞ் சிரோமணி
நாசியின் மேலே நடுவான மந்திரம்
தேசிகன் பாதம் சிந்தையுள் ளிருத்திக்
காசியில் வாசங் கன்னிமா குமரியே. (49)

வேறு.

குமரியவ ளாருக்குங் குருவாய்நின்ற
குருவான குண்டலியே நான்றானென்பாள்
குமரவொலி தோணிக்கு மொருமையைக்கேளு
கூத்தியா ரத்தையடா கூறப்போமோ
திமிர்தஉரு வானதொரு மூலிதன்னைச்
செங்கதிரும் சோதியுமே சேர்ந்தநாளில்
நமதுருப்போல் மதிபமதி லுபசரித்து
நடுவான ஆணியடா வேரைப்பற்றே. (50)

பத்தியதோர் மைவாங்கும் வகையைக்கேளு
பஞ்சசக்தி மூலரையும் பதியவைத்து
வெத்தியுள்ள அட்டசத்தி அட்டபாலர்
விசையான நவக்கிரக பெந்தரோடு
சித்தியுள்ள நட்சேத்திரம் யிவர்களுக்கும்
தியானித்துப் பூசையனுஷ் டானஞ்செய்து
சுத்தியுள்ள வஸ்திரை பூரணத்தைச்
சுருதிமுடி தனில்நிறுத்தி ஓமஞ்செய்யே. (51)

ஓமம்வளர் குண்டமதி லெவ்வேர்த்தன்றே
ஒன்றுபத்தாய்ச் சமித்து உருகிச்செய்து
வாமம்வளர் பூரணமே மதிபேசன்னோ
மந்திர சனத்திருவே பேசகன்று
ஆயிவனைத் தியானித்து அம்மாவென்று
அர்ச்சனையும் ஆகுதியும் நன்றாய்ச்செய்து
நாமிவனைத் தியானித்து ரவிமதியைக்கூட்டி
நன்றான சிமிழ்தனிலே வைத்துப்போற்றே. (52)

போற்றியே பூரணத்தை ரேசித்தேதான்
புதுமையுள்ள காரணியே போதருமன்னே
காத்தருள வேணுமென்று பூரித்தப்பா
கமலமலர் பூமாத்தைக் கருத்தில்வைத்துப்
பார்த்தல்லோ கும்பித்துச் சிமிழைப்பற்றிப்
பரமகுரு மையெனவே திலதம்போடே
நாற்றிசையும் உள்ளஉயிர் பயிர்களெல்லாம்
நாதனென வணங்கியுன் வசமாம்பாரே. (53)

சிமிழ்.

பாரப்பா மைச்சிமிழைச் சாத்திவேத்தி
பராபரமாம் பூரணத்தைத் தியானஞ்செய்து
நேரப்பா பத்திநின்று திலதம்போட்டு
நின்றிடத்தே ரேசித்துக் கொண்டுநின்றால்
ஆரப்பா உனக்கிது சொல்லப்போமோ
அசுரா தேவதைகள் வசியமாகும்
காரப்பா உனதருளைக் காருகாரு
கண்டபொருள் விள்ளாதே கருவைக்கேளே. (54)

கருவான மைச்சிமிழைத் தியானஞ்செய்து
காரணமாம் பூரணத்தைக் கருத்துள்வைத்துக்
குருவான பதிநோக்கித் திலதம்போட்டுக்
கும்பமுனி தஞ்சமெனக் கூறித்துநிற்கில்
உருவான நோயாளி வந்தானானால்
உம்மெனவே தம்பித்து ரேசித்தாக்கால்
மருவாம லோடிவிடும் நோய்களெல்லாம்
மதியமுத மையினுட மகிமைதானே. (55)

குளிகை.

தானவனாய் நின்றநிலை தன்னைக்கண்டு
சண்முகமாம் விந்துதனில் திலதம்போட்டு
மோனமுடன் பூரணியைத் தியானஞ்செய்து
முன்னிறைந்த கண்மணியே ஊ. ஆ. வென்ன
தேனமுத மொழியுடைய மாதரோடு
திக்கரசர் தேவரொடு வசியமாகும்
கானகத்தில் வாழ்மிருகம் நல்லபட்சி
காட்டேரிப் பசாசுமுதல் வசியமாகும்
தேனமுதம் மதியமுதம் நதிகள்மூன்றும்
திருவான பதிநோக்கில் வசியமாமே. (56)

ஆமப்பா குளிகையொன்று சொல்லக்கேளு
அரகரா சிவனுதம் விந்துகூட்டி
வாமப்பால் விட்டாட்டிக் குளிகைசெய்து
வச்சிரமாம் குகையில்வைத்துப் புடத்தைப்போட்டு
காமப்பால் கட்டியது மணிபோலாகும்
கனகமணிக் குளிகையதைக் கரத்தில்வைத்து
நாமப்பா சொல்லுகிறே மணியின்வேகம்
நாதாந்தப் பேரொளியின் நன்மைதானே. (57)

நன்மையுள்ள பூரணத்தை மனதிற்கொண்டு
நாகரத்தின் மணிக்குளிகை கரத்திலேந்தி
தன்மையுள்ள தயாநிதியே தஞ்சமென்று
தன்வாயில் தானடக்கிக் கும்பித்தாக்கால்
உண்மையுட னண்டமுதல் பிண்டந்தொட்டு
ஊடாடி மீண்டுவரும் உண்மையாகத்
இன்மையுள்ள பதியகத்தில் நன்மையானால்
திலதமணிக் குளிகைவெகு சித்தியாமே. (58)

திருமந்திரம்.

சித்திக்கும் வாசி சிவசிவா பூரணம்
பத்திக்குள் நின்ற பதிவான மந்திரம்
புத்திக்குள் நின்ற பூரண நாதனை
முத்திக்குட் சித்த முனைசுழி யென்னே. (59)

சுழிமுனை தன்னிற் சூட்டிடு வாசியே
வழிதுறை அண்டம் வகையறி மந்திரம்
முழிநடு வாகி முன்னிலை யாகத்
தெளிவது நாதந் திறமதி யென்னே. (60)

திறமதி நாதஞ் சேர்த்திடும் வாசியை
யுறமதி வாசம் உண்டிடும் பூரணம்
மறைபொரு ளொன்று வானவர் போற்றும்
நிறைதரு வான நின்னிலை பற்றே. (61)

நின்னிலை பற்றி நினைவறி வார்க்குத்
தன்னிலை வன்னி தானது பூவாம்
கன்னியில் நாதங் கருவறி வோர்க்கு
வின்னிலை யண்டம் விதமறி வீரே. (62)

விதமறி வாசி விண்டிடப் போகா
நிதம்வளர் பூரணஞ் நேர்நிலை பற்றிப்
பதமறி வார்க்குப் பரிபூ ரணமாய்த்
துதிதிரு வான சுழியறி வீரே. (63)

அறிவான போதம் அசையாத பூரணம்
நெறியான சத்தி நிறைபான பூமலர்
குறியான அண்டங் குணமறி மந்திரம்
பரியான தேசி பராசக்தி பாதமே. (64)

பாதம் பிடித்துப் பதமறி வார்க்கு
வாதமுஞ் சித்தி மந்திரஞ் சித்தியே
போதமுஞ் சித்தி பூரணஞ் சித்தி
நாதமும் விந்தும் நடுநிலை சித்தியே. (65)

நடுநிலை தன்னில் நாதம் பிறந்தது
முடிதனில் நின்ற மோன மறிந்திலர்
அடிநடு முடியாம் அமர்ந்தருள் மந்திரம்
படிதனில் வாசல் பணிந்துநீ பத்தே. (66)

பத்திய போது பராபரக் கற்பம்
நித்தியங் கொண்டு நினைவறி வார்க்குச்
சித்தம் பெருகிச் சிவசிவா வாசியை
முத்திய தென்று மூதண்டம் சுற்றே. (67)

# யோக ஞான சாஸ்திரத் திரட்டு.

வேறு.

சுற்றிநின்று பற்றுவது மென்னவென்றால்
துருவகிலே கற்பமதைப் பகர்வாளாத்தாள்
சித்தமெங்கன் பாக்கியமே யென்றுபோற்றிச்
சிவசிவா பூரணமே யேகவஸ்து
நத்தியெந்தன் கர்த்தவ்விய மெல்லாம்போக்கி
நாதாந்த பூரணமாய் நடுஞ்சுத்த
புத்திமதி நின்றவளர் துவாதசாந்தம்
பூமலரா சனத்திருவே போதத்தாயே.

போதமதி நிறைந்தபூ ரணமேபோதம்
புகழுடைய பூரணமே யேகமாகிச்
சோதியென நின்றசிவ சத்தியாகிச்
சொல்நிறைந்த பூவறிநால் வேதமாகிப்
பேதமில்லா அஞ்சுபஞ்ச பூதமாகிப்
பின்னாகி முன்னாகி யெந்தாயைப்
பாதமடி யென்றுசொலி முடியைத்தேடிப்
பத்துவது பூரணத்தின் பதவிதானே.

பதவியெனப் பத்துவது மென்னவென்றால்
பார்மகனே உன்னுடம்பு நாதமாகும்
உதவியென நின்றிலங்கு மாகாசந்தான்
உத்துப்பார் வெளியாகத் தோணுந்தோணும்
இதங்கேகும் பேசாத ஊமையாகும்
இப்புவியை யாளவந்த ராசாவாகும்
மதமுடைய மதயானை கெர்ச்சித்தாக்கால்
வாய்பேச வூமையவ னடக்குவானே.

அடக்குவா னென்மகனே கருவாய்க்கேளு
ஆதியிலே பூரணமாய் வந்தாளாத்தாள்
துடக்கான துடக்கறுத்துச் சோதியானாள்
தொல்லுலகைக் காக்குமொரு துரைப்பெண்ணானாள்
மடக்கொடியாள் பெற்றதவ மென்னசொல்வேன்
மதிநிறைந்த பூரணத்தின் வகைதானென்றாள்
விடக்கான தூலவுடல் தன்னிலேதான்
விதமான சூட்சமதை யின்னிற்பாரே.

விண்ணிறைந்த சூட்சமதிற் காரணந்தான்
விதவிதமாய்க் காணுதடா விளைப்போமோ
கண்ணிறைந்த காட்சியடா கமலயாது
கற்பூரத் தீபமடா கடைக்கண்பார்வை
வன்னியெனச் சொல்லுவது மில்லைவாலை
வங்காளப் பச்சையடா வாசக்காரி
உன்னியவ ளொருகொடியி லண்டஞ்சத்தி
உம்மெனவே தம்பித்து ஒடுங்கிறோமே.

ஒடுக்குநிலை தன்னிலொரு சிறுபெண்ணுந்தான்
ஓங்கார வாலையடா அந்தக்காரி
அடங்காத நீலியடா அருணவல்லி
ஆதியந்த மிகநிறைந்த அரூபசத்தி
நடுங்காத குண்டலியைக் கண்டுபோற்றி
நடுநின்ற வாசியடா பேதமாச்சு
இடங்காண இடமறிந்து வாசிபூட்டி
இருக்கிறதே நிருவிகற்ப சமாதிதானே. (73)

திருமந்திரம்.

தானான ரூபந் தாயான பூரணம்
கோனாகி நின்ற குருவாம் பராபரம்
ஊனான நந்தி உருக்கமுள் ளானது
மானான வாலை மதிநிக ரானதே. (74)

மதியான வாலை வழலையுப் பானது
பதியான உப்பைப் பானுவிற் சேர்த்திடு
நதியான பானுவில் நயம்பெறக் காய்ச்சினால்
கெதியான மோச்சங் கிட்டுஞ் சமாதியே. (75)

கிட்டுஞ் சமாதிக் கியல்பான அட்சரம்
ஒட்டுவ தென்ன ஓங்கார மூலமாம்
கட்டுடன் பஞ்சாட் சரநிலை கண்டவர்
எட்டுடன் ரெண்டு மௌனநந்தி பாதமே. (76)

எண்ணுவ தென்ன யேகாட் சரநிலை
உண்ணுவ தென்ன ஊடாடும் வாசியைத்
தன்னுள்ளே ரேசித் தாயான பூரணம்
நண்ணுவ தென்ன நடுவான போதமே. (77)

நடுவான போதம் நாதம் நிறைந்தது
சடமான தில்லாச் சண்முக மானது
அடியான பிண்டம் ஆதி நிராமயம்
முடிவான தென்ன முழுதும் அரூபமே. (78)

முழுதுஞ் சொரூபமாய் முன்னெறி பெற்றவர்
பழுதொன் றுமில்லாப் பரமான தேகமாம்
பெலமான வாசி பிறவாமல் நின்றவர்
தலமான மேரு தன்மய மானதே. (79)

வேறு.

மயமான ஜோதியடா மவுனப்பிள்ளை
மந்திரமோ ரட்சரத்தின் மகிமைப்பெண்ணு
நயமான நடுமையத் துவாதசாந்தம்
நாதாந்தம் பேரொளியின் நன்மையாலே
ஜெயமான நாதவிந்து திறந்தாலென்ன
செப்பாத ஆதியந்தந் தீர்க்கமாகும்
சுயமான சுயம்புவெனத் தெளிந்துகொண்டால்
சுற்றமுள்ள பிரதிட்டை தோன்றுந்தானே. (80)

தானவனாய் நின்றுதவஞ் செய்யவேணும்
சற்குருவின் தெரிசனத்தைக் காணவேணும்
பானமுத முண்டுபசி தீரவேணும்
பசியாமல் ஆயிரத்தெட் டிதழைப்பற்றிக்
கோனருளால் நின்றவனே நீதானென்று
குருவிருக்கும் சன்னதியைக் குவிந்துபோற்றி
மோனபர மானந்தந் தன்னில்நிற்க
முத்தியெனுந் தலத்தினிலே வாழலாமே. (81)

சட்டைமுனிவர் தண்டகம் அக,

முற்றிற்று.



மதுரை பாத்திரக்கடைவியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கணபதி துணை.

101-வது

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# வாலைரசகற்பம் சோடசம்



அகண்டபரி பூரணநின் மயமேகாப்பு
    ஆதியந்த மில்லாத வெளியேகாப்பு
இகண்டதிரு மூலருட பாதங்காப்பு
    செகமேழுஞ் சுழலுகின்ற திருவேகாப்பு
நிகண்டபதி னெண்சித்தர் பாதங்காப்பு
    நினைத்தென்னை யாதரித்த குருவேகாப்பு
வெகுண்டெழுந்த திருவுருவே அருவேகாப்பு
    வெட்டவெளி மனோன்மணித்தாய் பாதங்காப்பே. (1)

ஆமப்பா காயசித்தி யோகசித்தி
    அப்பனே குளிகைசித்தி வாதசித்தி
வேமப்பா ஞானசித்தி வயித்யசித்தி
    வேண்டுமோ ரூதாரப் பிரமசித்தி
நாமப்பா விப்படியே சித்திசெய்து
    நலமான கற்பத்தை யுண்டுதேர்ந்து
தாமப்பா வுங்களுக்கு இதுவேமார்க்கம்
    தப்பாது கைமுறைபூ சித்துக்கொள்ளே. (௨)

கொள்ளுமடா சூதகற்பம் சொல்லக்கேளு
    குருவருளாற் சுந்தரமே சுருக்குமெத்த
மள்ளுமடா வுண்டவர்க்குச் சட்டைபோகும்
    வாக்காக மூலத்தி யுடனேயாகும்
வெள்ளமடா வோடும்போ லமுதமாகும்
    வெட்டவெளி திசைநாதங் காதிற்கேட்கும்
சுள்ளுமடா சூதகற்ப முறையைச்சொல்வேன்
    சுழுவிலே துறைகளெல்லா மாகும்பாரே. (௩)

ஆமப்பா சூதகற்பம் சொல்லக்கேளு
அறைகிறேன் சுந்தரமே அறிந்துபாரு
வேமப்பா லிங்கமொரு பலந்தானெட்டு
விதமாகப் பொடியாக்கி வைத்துக்கொண்டு
தாமப்பா வாலுகையின் சட்டிதன்னில்
தான்மூலத் தின்பட்டை பலமிரண்டு
ஓமப்பா பொடியாக்கி சட்டிதைத்து
உயர்ந்தவொரு லிங்கத்தாள் மேலேவையே.

வையப்பா மூலத்தின் மேற்றூள்போட்டு
வாகாக மேற்சட்டி மூருக்கன்சாறு
ஐயப்பா மேற்சட்டி கவிழ்த்துமூடி
அழகான சீலைமண் ணேழுஞ்செய்து
செய்யப்பா மனமகிழ்ந்து காயவைத்துச்
சிதம்பரத்தின் பூசைசெய்து அடுப்பிலேற்றி
வையப்பா வாலைபூட பூசைசெய்து
மனமுறுதி கொண்டுநீ யெரித்திடாயே.

எரித்திடவே நாற்சாம மப்பாகேளு
என்னசொல்வேன் வாலைரசம் மேலேபத்தும்
அரிந்தெடுக்க வராகத்தின் ரோமத்தாலே
அசையாமற் சாண்டியது வைத்துக்கொண்டு
மரித்திட்ட இப்படியே யெழுதரஞ்செய்ய
மகத்தான வாலைரசம் நிறைதான்நீங்கிக்
கரித்திட்ட மருந்தைப்போ விதைவெண்ணேதே
கசடற்றுப் பத்துவய தாகும்பாரே.

பாருநீ சோடசமா யெரியதாகும்
பகருகின்ற மூலிகையைச் சொல்லக்கேளு
வேருநீ கவியாணி வில்வம்மேனி
விதமான மூளகரணை சாரணைதக்காளி
காருநீ அப்பைபூட கிழங்கின்சாறு
கருவாமூ மத்தைபொற் கையானுரும்
சீருநீ புளித்தமா தளைப்பழங்கள்
செம்முள்ளி கருவேலம் பட்டைதானே.

## சட்டைமுனிவர் வாலைரசகற்பம் ௰௯.

நானென்ற சிறுசெருப் படிவெற்றிலை
சார்வாம்வெண் சங்குவிடத் தாரையோடு
வானென்ற பதினாறு மூலிதன்றால்
வண்மையாய்ச் சோடசமா யெரித்திடாய்நீ
தேனென்ற வாலைரசந் திரைதான்றீர்க்கித்
திறமான குளிகைக்கு ஆதியாகும்
பானென்ற பாலகனை வைத்தியர்க்குப்
பரமனருள் தன்னாலே பலிக்கும்பாரே.

ஆமப்பா சூதகற்பம் சொல்லக்கேளு
அறைகிறேன் சுத்தமே அறிந்துபாரு
வேமப்பா விடத்தாரை மூலந்தானும்
வேரோடு பிடுங்கியதை மேற்றோல்வாங்கி
காமப்பா நிழலுலர்த்தி யிடித்துக்கொண்டு
தானேவடி கட்டிச்சூ ரணமேசெய்து
வாமப்பா சூதமது பலந்தானாலு
வாகாயிச் சூரணமும் பலமும்நாலே.

நாலான வகையிரண்டு மொன்றாய்க்கூட்டி
நலமான கல்வத்தி லிட்டுஆட்டு
வாலான நாகமல்லிச் சாற்றினாலே
வளமாய்நீ யெண்சாம மரைத்துக்கூட்டு
சேலான தேனிவிதைத் தோய்த்துவைத்துச்
சிதராமற் பொடியெல்லாஞ் சேர்த்துத்தள்ளி
நாலான நேரமது சொல்லக்கேளு
நாளொன்றுக் கிருசாம மாட்டிடாயே.

நாளான வாரம்பின களவுகொள்ள
நலமான மேகமெங்கே சூலையெங்கே
வேளான வாதமெண் பதுதானெங்கே
விழலான பித்தம்நாற் பதுதானெங்கே
கோளான அஷ்டகுன்பம் அஷ்டகாசம்
குறைகிலேற் பனமுமிரு பதுதானெங்கே
தாளான பீனிசங்கள் கபாலச்சூலை
தவருண்டே போகுமடா யின்னங்கேளே.

இன்னங்கேள் ஜன்னிசுர மேழும்போகும்
இதமான பிளவைகுஷ்டங் கன்னப்புத்து
சின்னமுள்ள மேகநோய் இருபத்தொன்றும்
தீதான சூலைபதி னெட்டும்போகும்
வன்னமுள்ள அஷ்டகுன்மம் அஷ்டகாசம்
வளமான தலைசுழற்றல் வாய்நீரூறல்
பின்னபதி மூன்றுவகை ரோகமெல்லாம்
பேசாம லோடும்பத் தியமாய்க்காரே.

காரப்பா பத்தியமாய்க் கொண்டாயானாற்
காசினியி லுன்தேகம் அருணன்போலாம்
சாரப்பா சத்தியமே மனதுவைத்துச்
சரமான மண்டலமே கொள்ளும்போது
பாரப்பா நோயெல்லாம் பறந்துபோகும்
பராபரியாள் வாக்கில்நின்று பரீக்ஷிப்பாள்பார்
நேரப்பா மண்டலமே கொண்டாயானால்
நிச்சயமாய் மன்மதனைப் போலாம்பாரே.

பாரேநீ பத்தியத்தைப் புகல்வேன்யானும்
பாசியுட பயிறுடனே பசும்பாலாகும்
சேரேநீ நெய்யுடனே தயிருமாகும்
சிறப்பாகக் கண்டங்கத் திரிக்காய்ப்பிஞ்சும்
காரேநீ சிறுகீரை பொன்னாங்கண்ணி
கனமான பருப்புடனே வரையுமாகும்
தேரேநீ தூதுளங்காய் வற்றலாகும்
திறமான சீனிச்சர்க் கரையுமாமே.

ஆகுமே முருங்கையுட பிஞ்சுமாகும்
அப்பனே வெள்ளாட்டு வற்றலாகும்
பாகுமே ரஸ்தாளிப் பழமுமாகும்
பண்பாகத் தள்ளுகிற வகையைக்கேளு
ஏகுமே புகையிலையுங் கஞ்சாவாகா
எள்ளில்வரும் நல்லெண்ணெய் கடுகுமாகா
சாகுமே பூசணிக்காய் சுரக்காயாகா
சரியான சன்னிதி யாகும்பாரே.

பார்க்கவே காயசித்தி பண்ணும்போது
பச்சரிசி பால்பயறு சிலவியாகும்
கோர்க்கவே மற்றொன்று மாகாதப்பா
குணமான வுப்பநுவுங் கட்டிக்கொள்ளே
சேர்க்கவே கன்றுள்ள பசுவின்நெய்யிற்
றிறமாக இம்மருந்தைக் கொண்டாயானால்
நீர்க்கமாங் காயசித்தி யோகசித்தி
நெடுணைத்திலே திருவுருவு மாகுமுற்றே. (16)

சட்டைமுனிவர் வாலைரசகற்பம் சோட்சம் ௧௬,

முற்றிற்று.





ஸ்ரீ வில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் சங்கரலிங்கப் பிடகர் குமாரன் அழகுமுத்துப் பண்டிதரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

குமரன் றுணை.

102 - வது:

இராமதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# தண்டக பட்சணி ராகூ°

ஆதியந்தம் நடுவிருந்த சோதிகாப்பு
அகண்டபரி பூரணமே அறிவேகாப்பு
நீதிகலை வாணிகுரு கந்தன்காப்பு
நிரஞ்சனமாய் நின்றகுண வதீதங்காப்பு
பாதியாந் தளிர்கனலுங் காலொன்றான
பட்சணியே நிச்சயமாம் பாதங்காப்பு
வீதியாம் பட்சணியாய் விளங்குஞ்சித்தி
விக்கினவி நாயகரின் காப்புத்தானே.

ஆதியந்தம் நடுவிருந்த பரமெய்ஞ்ஞான
அகண்டபரி பூர்ணமே யதீதமான
சோதியந்த மாகநிரஞ் சனமாய்நின்ற
சூக்ஷமடா பட்சணியின் சூட்சந்தானும்
காதியந்த மார்க்கமுற வென்றேஆத்தாள்
காட்டினாள் சகலசித்து மாடியாட
வீதியந்தப் புரியட்டம் நாலுமொன்றாய்
வெளியான சவுக்காரத் திறவுகோலே.

திறமான பட்சணிக்குள் ளெல்லாம்பார்த்துச்
சீரறிந்து பொருளறிந்தாற் சரிநின்றாடும்
உறமான திக்கருவை அறிந்தாற்கேளு
மாநிலந்தா னுனக்கீடோ யீசன்வேறோ
குறமான தேவதைக ளேவல்கேட்டும்
கோடியண்ட வரையடங்கு மாணைசெல்லும்
உறமான மாமதனால் வசியஞ்சொல்வேன்
ஓகோகோ உலகமெல்லாம் வசியமாமே.

வசியமாம் ஆறுவகைக் கருமமாடும்
மானிலத்து வேந்தர்களும் வசியமாகும்
வசியமாஞ் செகமெல்லாம் வசியமாகும்
மகத்தான ஸ்ரீபுருடர் வசியமாகும்
வசியமாஞ் சத்துருக்கள் வசியமாகும்
வாரணங்கள் மிருகமெல்லாம் வசியமாகும்
வசியமா மிரவிமுன்னாள் வடவேர்வாங்கி
மைந்தனே கவுதும்பை வேரும்வாங்கே. (4)

வேரிரண்டும் பச்சைப்பட் டதனில்வைத்து
மேலான ஆவின்புல் லுருவியோடு
கூரிரண்டு கஸ்தூரி மஞ்சளோடு
குங்குமப்பூ மூன்றுமரைப் பலமேகொண்டு
மாரிரண்டு மூன்றையுந்தான் பொடியாய்ப்பண்ணி
மைந்தனே முதற்சீலை தனிற்பரத்திச்
சேரிரண்டு வேரையுந்தான் நடுவேவைத்துத்
திரியாக்கித் தாம்புரத்தி லிட்டுத்தானே. (5)

இட்டுமே காராவின் நெய்யைவார்த்து
இதமாய்சிர சோட்டில்மை யெரித்துவாங்கிக்
கிட்டுமே புழுகுடன்சவ் வாதுசேர்த்துக்
கிருபையுள்ள மையைமத் தித்தேமந்த்ரம்
நட்டுமே ஓம்ஸ்ரீயும் ஹ்ரீயுமென்று
நலமான சருவசம் பன்னமோகா
வெட்டுமே காமதே வாயநமவென்று
விதமாக அஞ்ஞூறு வுருத்தாஞேதே. (6)

ஓதிடமுன் சொன்னதெல்லாம் வசியமாகும்
உத்தமனே ஓமென்று திலதம்போடு
வாதிடமுன் வந்தபடை மாறியோட
மானிலத்தி லரசரெல்லாம் வசியமாகச்
சாதிடமுன் சாத்தியன்கைப் பாணமாறச்
சதிராய்பீ ரங்கிவெடி குண்டுமாறச்
சூதிடமா யின்னமொரு சூட்சஞ்சொல்வேன்
சுருக்கடா செம்பரத்தை வடக்குவேரே. (7)

செம்பருத்தை ஞாயிறுக்குக் காப்புக்கட்டித்
திறமாக நவசாபம் நிவர்த்திசெய்து
உம்பருக்கு மறியாத கணேசன்மூலம்
ஊமெனவும் ஆமெனவும் முருலெட்சந்தான்
நம்பருத்த பலியாடு கோழிபன்றி
ரத்தபெலி யூட்டிமறு கிழமையன்று
வம்பருக்குச் சொல்லாதே பொங்கல்தூபம்
மாட்டியே தியானத்தால் வேருவாங்கே. (8)

வாங்கியந்த வேரதனைப் பஞ்சலோக
மகிமையாந் தகடதிலே பொதிந்துகொண்டு
தாங்கியந்தக் குளிசமதைக் கரத்திலேந்தி
தம்பனந்தான் நூற்றிருபத் தெட்டுமோது
ஓங்கியந்தக் குளிசமதைச் சிரசிற்கட்ட
ஓகோமுன் சொன்னதெல்லா முண்மையாகும்
தேங்கியந்த மாதரெல்லாம் வசியமாகச்
செப்புகிறேன் மையொன்று தேர்ந்துகொள்ளே. (9)

தேர்ந்துநீ குளங்கள்குட்டந் தன்னிற்பார்த்துத்
திறமான அட்டைபத்துப் பிடித்துவந்து
கூர்ந்துகேள் தாமரையின் நூலைச்சுற்றிக்
குறிப்பாகத் திரியதனை விளக்கிலிட்டுச்
சார்ந்துநீ நெய்வார்த்துத் தீபமேற்றித்
தருவான காரோட்டில் மையைவாங்கி
ஓர்ந்துநீ புழுகுடனே சவாதுசேர்த்து
உறவாக மோகினியைச் சேவிப்பாயே. (10)

சேவிப்பாய் ஓம்ஸ்ரீயும் றீயுமென்று
சிறக்கவே ஓம்கிலியோ மென்றுசொல்லி
பாவிப்பாய் சருவமோ கினிவாவென்று
பகர்ந்துநீ ஆயிரத்தெட் டுருவுமானால்
ஆவிப்பாய் பானமொடு பலகாரங்கள்
ஆத்தாட்கும் வடுகனுக்கும் பூசைபண்ணி
தாவிப்பாய் சங்காத்திப் பேரைச்சொல்லித்
[illegible] பணவிடைதான் திலதம்போடே.

இலதமிட்டு மந்திரத்தால் வாவாவென்று
செப்பிடவே ஸ்ரீவசிய மென்னசொல்வேன்
குலமழிந்து வரம்பழிந்து முறையுமன்றி
குடிகெடுந்த காமவெறி கொண்டுபின்னே
வலதழிந்து மதிமயங்கி உலைத்துள்ள
மாந்தரெல்லா முன்னடியில் வருந்துவார்கள்
நிலவரமாய்ச் சொல்லிவிட்டேன் கருவிள்ளாதே
நேர்த்தியாம் வசியமொன்று நேர்த்தியாமே. (12)

நேர்த்தியடா வசியமென்ன சொல்வேன்மைந்தா
நிகருண்டோ முள்ளெலியின் பெருமைமெத்த
நேர்த்தியடா உலகத்திற் சொன்னாருண்டோ
நிசமாகச் சித்தரெல்லாம் மறைத்துவைத்தார்
நேர்த்தியடா சொல்லுகிறேன் முதற்பக்கந்தான்
நேராகக் கருநாளில் நீதான்கேளு
நேர்த்தியடா முள்ளெலியொன் றெடுத்துவந்து
நிசமாகத் தலைகீழாய்க் கட்டித்தூக்கே. (13)

தூக்கியே சாபங்கள் நிவர்த்தியாகச்
சூட்டுவாய் மண்டலந்தான் தினம்நூறப்பா
நீக்கியே வெள்ளைத்தா மரைக்கிழங்கு
நிழலுலர்த்திச் சமனாக நிறுத்துக்கொண்டு
தாக்கியே ரெண்டையுந்தா னிடித்துத்தூளாய்ச்
சாதகமா யிந்திரமாங் கோபப்பூச்சி
ஆக்கியே களஞ்சியொன்று கிராம்புகூட்டி
ஆதியாம் முதற்கருவுந் தொட்டித்தானே. (14)

தொட்டந்தப் பொடியைமுதற் றாசிலூட்டிச்
சுகமாகத் திரியதனை வாங்கிக்கொண்டு
நட்டந்த மாம்பசுவின் நெய்யைவிட்டு
நலமான அகிற்றிரியிற் றீபமேற்றி
இட்டந்தச் செஞ்சுள்ளைச் சட்டித்தூரில்
இதமாகப் பொற்றலையின் சாற்றைப்பூசிக்
கட்டந்த மாய்மூடி மையைவாங்கிக்
கருணைபெறப் புனுகுகோரோ சனையுங்காணே. (15)

காணவே வகைக்கொன்று களஞ்சிகூட்டிக்
கருதியே மத்தித்துச் சிமிழில்வைத்து
வேணவே ஆயிபதம் வைத்துப்போற்றி
மேலான வடுகனுக்குப் பூசைபண்ணி
தோணவே வசியத்தில் லெட்சம்ரூட்டு
சுகாதித மையெடுத்துத் திலதந்தீட்டு
பேணவே மூவுலகும் வசமாம்பாரு
போராக யின்னமொரு செய்திகேளே. (16)

கேளப்பா மோகனந்தா னதிகசூட்சம்
கெடியாக மையென்று சொல்லக்கேளு
நாளப்பா கிராம்புமொரு களஞ்சிதானும்
நயமான மினிப்பூச்சி களஞ்சிகூட்டி
நீளப்பா யிந்திரமாங் கோபப்பூச்சி
நிறுத்துநீ களஞ்சியதிற் கூட்டிமைந்தா
சூளப்பா திகைப்பூச்சி களஞ்சிபூரம்
சுகமாக வொன்றுக்கித் தூளாய்ப்பண்ணே. (17)

பண்ணப்பா மூதற்றாசி லூட்டிமைந்தா
பருவமுடன் திரியாகத் திரித்துக்கொண்டு
விண்ணப்பா விளக்கிலிட்டுக் காரெள்ளெண்ணெய்
விட்டதிலே கபாலத்தால் விளக்கைமூடி
நண்ணப்பா மையிரங்கும் போதுமைந்தா
நலமான வடுகனுக்குப் பூசைபண்ணு
எண்ணப்பா மோகனத்தில் லட்சமோது
இதமாக மைவாங்கிச் சிமிழில்வையே. (18)

வையப்பா புனுகுடன்சவ் வாதுதானும்
மத்திகோரோ சனையதனைக் கூட்டிமத்தி
மெய்யப்பா மைச்சிமிழைத் திறந்துகொண்டு
விரையவே ஓமென்று திலதம்போடு
உய்யப்பா உலகமெல்லாம் மோகமாகும்
ஓகோகோ புருடரெல்லாம் மோகமாகும்
செய்யப்பா தேவரெல்லாம் மோகமாகும்
சிவனுமுதற் றேவியுமே மோகமாமே.

மோகமாம் வசியத்தி னின்னமொன்று
முக்கியமாய்ச் சொல்லுகிறே னதிதமாக
ஆகமாம் வல்லூராண் குருவிபார்த்து
அப்பனே பித்தகலா துலர்த்தித்தாரம்
தாகமாங் களஞ்சியொன்று சேர்த்தரைத்துச்
சமூலந்தான் முதற்றூசி தன்னிலிட்டு
வேகமாந் திரியதனை விளக்கிலிட்டு
விநோதசித் தேரண்டத் தெண்ணெய்வாரே. (20)

வாரென்ன கபாலவோ டதனுல்மூடி
மையெரித்து ஆயிபதம் வைத்துப்போற்றி
சீரென்ன கோரோசனையும் புனுகுங்கூட்டிச்
சிவசிவா வசியந்தான் லெட்சமோதி
பேரென்ன வாவென்று திலதந்திட்டப்
பேருலகி லுள்ளோரும்—வசியமாகும்
கூரென்ன ஸ்ரீகளுட பேரைச்சொல்லிக்
கொண்டுதில தம்போட வசியமாமே. (21)

வசியமா மின்னமொரு வித்தைதமைந்தா
மானிலத்தி லதிகமடா தம்பனந்தான்
வசியமாம் நிலக்கூகை யூமன்காடை
வகையான பொற்கையான் விஷ்ணுகாந்தி
விசிதமாங் கட்டுகொடி மூலிஅஞ்சும்
விரவியே தூளாக யிடித்துக்கொண்டு
உசிதமா முதற்கருவு கொஞ்சத்தொட்டு
உளவாக முதற்றூசி யூட்டித்தானே. (22)

ஊட்டியே திரியதனை யகலிலிட்டு
உத்தமனே சிரசோடு கவுழ்த்துநீயும்
வாட்டியே நல்லெண்ணெய் விட்டெரித்து
வாங்கியே புனுகுகோரோ சனையால்மத்தி
தாட்டியே தம்பனந்தான் லட்சமோது
தயவாக ஆயிபதம் வைத்துப்போற்றிக்
காட்டியே வடமாலை வடுகனுக்கும்
கருணைதரு வாயெனத்தோத் திரங்கள்செய்யே. (23)

செய்யவே நங்கென்றும் மங்கென்றுந்தான்
    தீர்க்கமடா தம்பனத்தின் மூலந்தானும்
உய்யவே லட்சமுரு தியானமோதி
    உறவாகப் பணவிடைதான் திலதம்போட
நொய்யவே உலகமெல்லா மடங்கிப்போகும்
    நோக்கரிய வெளியடங்கும் சபையடங்கும்
பையவே காலடங்குஞ் செலமடங்கும்
    பசாசுமுதற் பூதமெல்லா மடங்கிப்போமே. (24)

அடங்குமே பூதலத்தில் தெய்வமெல்லாம்
    ஆச்சரியம் ஆயுதங்கள் நாடாதொன்றும்
நடங்குமே அரசரெல்லா மடங்குவார்கள்
    நோக்கறவே பொறியடங்கும புலனடங்கும்
தடங்குமே யித்தொழிலைத் தொடுத்துப்பாரு
    தாணிமுழு தெல்லாமுன் வசமேயாகும்
மடங்குமே தம்பனந்தா னின்னஞ்சொல்வேன்
    மைந்தனே விசிதமடா மகிழ்ந்துபாரே.

பாரப்பா கதிர்பூசந் தன்னிலன்பாய்ப்
    பகருவேன் அழுக்கிறுந் தனித்துநின்றால்
நேரப்பா மஞ்சள்நூற் காப்புக்கட்டி
    நித்தியமும் நவசாயம் பதிஞ்ரேறி
கூரப்பா யிரவிமறு கிழமையன்று
    கோழிமுத லாடுபன்றி பெலிகொடுத்துச்
சீரப்பா பொங்கலிட்டம் மணமதாகச்
    சிறக்கவே கலங்கொம்பாற் கெல்லுகெல்லே.

கெல்லவே மேல்நோக்கி வானைப்பார்த்துக்
    கிருபையாய் நக்ஷேத்ரம் விழும்போது
மெல்லவே மூலந்தான் வேராறுமல்
    வியனாகப் பிடுங்கிவந்து காத்திலேந்தி
அல்லவே சொல்லுகிறேன் தம்பனந்தான்
    அசையாமல் லெட்சமுரு வரைந்துநீயும்
சொல்லவே அளிஞ்சியினுற் குளிசமாடி
    தோத்திரஞ்செய் தாபிதம் வைத்துப்போற்றே.

போற்றியே வயிரவன்றன் றியானமோது
பூரணநூல் விதியாக லெட்சந்தானும்
சாற்றியே தூபமொடு தீபங்காட்டித்
தாக்குவாய் சேடன்முடி தாக்குமென்று
தேற்றியே சிரசறிவாய் குளிசங்கட்டுந்
தேவரென்ன உனக்கீடோ செப்பக்கூடா
நாற்றிசையு முன்னேவெல்லப் போகாதப்பா
நமனேது கோடியண்டங் கட்டுந்தானே. (28)

கட்டுமடா நாகபா சந்தானீடோ
கக்கிஷமும் புவனேவுரு வெல்லாங்கட்டும்
கட்டுமடா தொட்டியத்தின் உருவைக்கட்டும்
கருதிக்கேள் சல்லியத்தி னுருவைக்கட்டும்
கட்டுமடா அண்டரண்டங் கட்டுக்குள்ளாம்
காலடியிற் றம்பனமோ வெட்டுங்கட்டும்
கட்டுமடா வாள்வல்ல யம்பிரங்கி
கனமான படைகளையுங் கட்டும்பாரே. (29)

காட்டினுற் றேவபாண முஞ்செல்லாது
கருதிப்பார் சிவனுமையுங் கட்டுக்குள்ளாம்
நாட்டினுற் றரும்பதனை யிழுக்கப்போமோ
நானிலத்தில் ஈசனுமை நீதான்வேறு
தேட்டப்பா யிதைவிட்டாற் றொழிலுமுண்டோ
சிவசிவா தம்பனத்தின் செய்கைசெய்கை
ஓட்டினு லொக்கவல்லோ தம்பிக்கும்பார்
ஒருவருக்குஞ் சொல்லாதே கருவைத்தானே. (30)

தானுகும் இன்னமொரு வித்தைகேளு
தம்பனமே முக்கியமாம் சார்ந்துபாரு
வேணுதும் நத்தைச்சூ ரிக்குத்தானும்
வெள்ளியன்று காப்பணிந்து பொங்கலிட்டுக்
கோனுகும் சுத்தவெள்ளைச் சாவலொன்று
கொண்டுவந்து பெலிகொடுத்துத் தீபங்காட்டித்
தேனுருக் தம்பனத்தின் மூலந்தானும்
தீர்க்கமடா லெட்சமுரு நம்கென்றோதே. (31)

ஓதந்த மூலிகைக்கோர் சாபமில்லை
உறவாக வேரறு மற்றுன்மைந்தா
சூதந்த வேர்பிடுங்கிக் குளிசமாடிச்
சயம்பெறவே நன்கென்று சிரசிற்கட்டு
வாதந்த முப்பத்தி ரெண்டுவாளும்
வாங்கியே வெட்டிடினும் மயிரறாது
போதந்த மாகவுமே கிடாக்கழுத்திற்
பூட்டிவெட்டப் பாருலகிற் புதுமையாமே. (32)

புதுமையாம் இன்னமொரு வாடைசொல்வேன்
பூதலத்தில் மாதரெல்லாம் வசியமாகும்
புதுமைகொச்சி மஞ்சள்வங் காளப்பச்சை
பொங்கமுக் கிறுவேரும் வெட்டிவேரும்
புதுமையாம் சந்தனமண் சிட்டியேலம்
புகழ்மருளு மத்தம்விரை லவங்கப்பட்டை
புதுமையாம் பச்சைக்கற் பூரம்நாகம்
பூலாங்கி ழங்குபுளி சுப்பாக்கென்னே. (33)

என்னவே விலாமிச்சம் வேரினோடு
இயல்பான வில்லைவேர் புரத்தோல்தானும்
கன்னவே வகைக்குவொரு பலந்தான் தூக்கிக்
கருணைபெற வேயிடித்து வடிகொண்டேகி
உன்னவே திகைமயக்கு பத்துத்தானும்
உறவாக வேவுலர்த்தித் தூளாய்ப்பண்ணி
வன்னமா முன்பொடியிற் சேர்த்துக்கொண்டு
மைந்தனே ஆதித்த வாரநாளே. (34)

வாரமாய்ச் செத்தவன்றன் னூலைவாங்கி
மாணுகப் பித்துமதின் கொழுப்புத்தானும்
பாரமாய்க் கொண்டுவந்து பதனமாகப்
பாகமாய்ப் பொடியெடுத்து ரவியில்வைத்துச்
சூரமாம் பித்தனுங் கொழுப்புத்தானும்
துலங்கவதன் மேல்நெகிழ்த்து வைக்கும்போது
வீரமா யிளகியது ரேசித்தாக்கால்
விரவிநன்றாய்க் குழாய்தனிலே அடைத்துக்கொள்ளே. (35)

கொள்ளுமே ஆயிபதம் வைத்துப்போற்றிக்
குருவாக மோகினியை லட்சமோது
விள்ளுமே குழாயிலொரு டணாந்தான்வாடை
மேல்சேரக்கிப் பூகிடுவாய் காத்துவாடை
தள்ளுமே வாடைபட்ட மாதரெல்லாம்
தள்ளாடி மதிமயங்கித் தளர்ந்துநிற்பார்
நள்ளுமே உன்னேவ லாருங்கேட்பார்
நன்றாகச் சொல்லிவிட்டேன் வாடைதானே. (36)

வாடையிலே யின்னமொரு வித்தைகேளு
மானிலத்தி லதிகமடா வகையாய்ச்சொல்வேன்
சாடையிலே மூன்றுதிங்க ளாந்துக்குள்ளே
சலஅண்டம் வாங்கியொரு பாண்டத்துள்ளே
மூடையிமேல திகைப்பூட்டுப் பூச்சிதானும்
மூக்கியமாய்ப் படிநறு பிடித்துப்போடு
காடையின்மேல் பச்சைப்பாம் பொன்றுமேபோடு
நலமான ஆவின்பால் படிதானொன்றே. (37)

ஒன்றான வஸ்துஒரு படிதான்விட்டு
உத்தமனே அமுரிபடி மத்தஞ்சாறு
நன்றான படியும்பேய்க் கரும்பின்சாறு
நயமாக மூறைமசக்கிப் படிசாறுவிட்டு
குன்றான அடுப்பேத்தி வேடுகட்டிக்
குணமாகச் சீலைசெய்து சரக்கையெல்லாம்
மன்றான வேட்டுமேல் வைத்துமூடி
மைந்தனே வற்றமட்டும் வன்னிமூட்டே. (38)

மூட்டியே பதமாக எடுத்துக்கொண்டு
முக்கியமாஞ் சரக்கையெல்லாம் நிழலுணர்த்தி
காட்டியே கல்வத்தி லிட்டுத்தூளாய்
நயமாக வடிகொண்டு நீயுந்தானும்
காட்டியெடு தேவிமுன்னே வைத்துப்போற்றிக்
கருணைதர வேணுமென்று கருத்திலுன்னி
நீட்டியே மோகினிமந் திரந்தானையா
நிசமாக லட்சமுரு நேர்ந்துகொள்ளே. (39)

நேரவே உலகமுந்தான் வசியமாச்சு
நீணிலத்தி லரசருந்தான் வசமாய்ப்போச்சு
கூரவே ஸ்ரீகளுந்தான் சேர்வையாச்சு
கொதித்துவருஞ் சத்துருக்கள் மசகமாச்சு
தேரவே விஷங்கள்முதல் பிசாசுபோச்சு
செகசால வித்தையெல்லா மிதற்குள்ளாச்சு
மாரவே தேவதைக ளெல்லாமுன்னை
வணங்குமடா வாலைவித்தை மயங்குந்தானே. (40)

மயங்காமற் சொல்லிவிட்டேன் வெளியாய்வாலை
மாட்டினேன் சித்தரெல்லாம் எளிதாய்ச்சொன்னார்
தயங்காமல் அனைத்துக்கும் மூலமந்த்ரம்
சாற்றினேன் அகாரமொடு உகாரந்தானும்
கயங்காமல் மகாரமூன் றெழுத்திநோடு
கருணையிறீங் கிலியும்ஓ மென்றுசேவி
இயங்காமல் லெட்சமுருச் செய்துகொள்வாய்
என்னசொல்வேன் மவுனதி வாலையாச்சே. (41)

வாலையிலே மூன்றெழுத்து வகையாய்ச்சொன்னேன்
வரிசையா யின்னமொரு சூட்சங்கேளு
காலையிலே மாலையுச்சி வேளைமூன்றும்
கருத்தறியோ மென்றுலெட்ச முருத்தானோது
வேலையிலே வடமுகமா யிருந்துகொண்டு
வேகமாய்ச் செபஞ்செபியா சனத்தான்மைந்தா
சாலையிலே கிருட்டிணு சனத்திருந்து
சார்வாகக் காலைசந்தி பார்த்துவாவே. (42)

பார்த்துமொரு மண்டலந்தான் மவுனமாகப்
பக்தியுடன் வருந்தியுரு வேறும்போது
கீர்த்துமொரு அண்டமெல்லாஞ் சுடரைப்போலும்
நிராமயமாங் கலைமதியோ நிகரோவ்வாது
தேத்துமொரு பச்சைவர்ண மொளியோகசுங்
திருமாலும் லட்சுமியும் அரனுங்காண்பாய்
ஆத்துமொரு நிமிஷத்துக் குள்ளேமைந்தா
அட்டசித்தி சௌபாக்ய மருளுவாரே. (43)

அருளுவா ருன்தேகங் காந்தியென்ன
 ஆதவனுஞ் சந்திரனும் ஒவ்வாதையா
அருளுவார் தேவகுனக் கிடோசொல்லு
 ஆராலு முன்னைவெல்லப் போகாதென்று
அருளுவா ரெத்திசையு முன்னைப்போற்றி
 அடியின்கீழ் வணங்கிநிற்பா ரநிதமாக
அருளுவார் நவலட்சந் தொழிலுமாட
 அறைகிறேன் திருவுருவா யதீதந்தானே. (44)

அதீதந்தா னென்னவென்றாற் சொல்லக்கேளு
 ஆச்சரியம் ஆதியென்ற பிண்டம்வாங்கி
அதீதந்தான் வசம்புள்ளி கடுகுகாயம்
 அடவாகும் வெந்தயங்கள் அரிமஞ்சள்
அதீதந்தான் சவாதுடனே புனுகுபூரம்
 ஆகவொன்றாய்ச் சமனாக நிறுத்துக்கொண்டு
அதீதந்தான் பேய்ப்பீர்க்கு மத்தஞ்சாறும்
 ஆவின்நெய் சரிசமனா யாட்டுவாயே. (45)

ஆட்டவே குழம்புபோ லாகும்பாரு
 அரகரா பிண்டமதைத் தோய்த்துத்தோய்த்து
நாட்டவே யிருமூன்று வேளைமைந்தா
 நலம்பெறவே தோய்த்துநன்றாய் நிழலுலர்த்தி
மூட்டவே மண்டலந்தா னுணர்ந்தபின்பு
 முக்கியமாய்ச் சொல்லுகிறேன் சொல்லைக்கேளு
காட்டவே சுக்கிரன்றன் வாரந்தன்னிற்
 கடுநிசியில் நடுச்சாமங் கருவைக்கேளே. (46)

கருவான உருவெடுத்து மயானமேவிக்
 கதிர்பெறவே வடமுகமா யிருந்துகொண்டு
உருவான பிண்டமதை முன்னேவைத்து
 உறுதியுட னுருத்திரன்றன் தியானந்தானும்
திருவான மங்கென்றும் றங்கீங்கென்றும
 சிவாயநமா வென்றுஉரு லட்சமோது
தருவான கனிதேங்காய் ஆவின்பாலும்
 சட்டமுடன் வைத்துமது சத்திவையே. (47)

சத்தியமாஞ் சோடசொப சாரத்தாலே
தோத்திரஞ்செய் ருத்திரன்ருத் திரியுமாச்சு
எந்திசையும் போற்றுமடா கருவின்சூட்சம்
என்னசொல்வேன் ஆதிவிர்க்கை யிதுதான்பாரு
புத்தியா யின்னமொரு சூட்சங்கேளு
பொலிவாகு மட்டகர்மந் துடிகொண்டாடும்
உத்தியா மீஸ்பரியே யவளேஆதி
ஓகோகோ அட்டாங்க வாலையாமே. (48)

வாலையென்ன சிறுபிள்ளை வயதோபத்து
வடிவென்ன மதியிரவி யொவ்வாதாத்தான்
காலையென்ன நடுவீதி கமலத்துள்ளே
கருணைபெற வீற்றிருந்தாள் காட்சியாட்சி
மாலயனும் உம்பர்சித்தர் அவள்கொண்டாட்டம்
மயேஸ்பரனும் ருத்திரனுஞ் சிவனும்போற்றப்
பாலையென்ன கரும்புரசப் பாகுமேடா
பகருமொழி யவளுடைய பரிசுதானே. (49)

பரிசுகேள் அட்டாங்க வாலைமார்க்கம்
பத்துமடா கும்மென்ற அட்டகர்மம்
துரிசுகேள் ஓம்ஐயுங் கிலியும்சவ்வும்
சுருக்கெனவே றீங்கெனவுஞ் சொன்னாற்போதும்
திரிசகே ளிதைப்போல சூட்சமூலம்
செப்பினார் சிதம்பரத்துக் கிதுவேமூலம்
பெரிசுகே ளட்டாங்க மிதைவிட்டாக்கால்
பேசாதே சித்திரமா யிருந்துபோமே. (50)

சித்திரமா யிருந்துவிட்டா லேதுண்டாகும்
தீர்க்கமென்ன சித்தமென்ன திறமையென்ன
உத்திரமாய் நாட்டிவித்தாற் சித்தனாவாய்
உருவழிந்தால் ஞானமென்ன வொழிந்துபோச்சு
அத்திரமாய்ச் சடமிருந்தா லெல்லாமாச்சு
ஆதவனும் மாமதியும் சுழியுமொன்றாய்
நத்திரமாய் எந்தனுட நூலைப்பாரு
நயம்பெறவே விசிதமடா காட்டிப்பாரே. (51)

நாட்டமா யட்டகர்மஞ் செய்யவென்றால்
நயம்பெறவே ஐங்காயக் கருவுங்கூட்டி
ஈட்டமா யெந்திரத்திற் றெழுதிலக்கிறி
இருபுறமும் வாலையுட யெழுத்துமாறி
ஆட்டமா யெந்தெந்தக் கருமத்துக்கும்
அந்தந்த வஸ்துவிட்டு அரைத்துப்பூசி
வாட்டமில்லாக் கற்பூர தீபமேத்தி
மயங்காமல் மூலமென்று அறிவாய்வாட்டே. (52)

வாட்டவே அண்டரண்டம் நீறிப்போகும்
மாநிலத்தி லெதிரானி யுண்டோசொல்லு
காட்டவே சுணங்காளி யேவல்துர்க்கை
கன்னிதொட்டுக் காளிவரை யோடிப்போகும்
கீட்டவே மாரணத்துக் காதிபீடம்
நிகருண்டோ அட்டாங்கம் நிலைக்கப்போமோ
மூட்டவே மயானத்தில் முன்னேசொன்ன
மூர்க்கமா முருவதனை நோக்குவாயே. (53)

நோக்கமாய் திருவாணை ரூபங்கொண்டு
ருத்ரசெபஞ் சொன்னபடி முடித்தாற்சேரு
தாக்கவே பதினைந்து காலுக்குள்ளே
தவறாமல் நிட்டைதனை முடித்துக்கொண்டு
ஊக்கமாய்த் திருவுருவை வசமேசெய்து
ஒருவருக்குந் தெரியாம லில்லமேவி
ஆக்கமாய்ப் பூசித்துப் பதனம்பண்ணு
அரகரா வதிதமுந்தன் செய்கையாமே. (54)

செய்கையாந் திருவுருவா லெட்டெட்டாடும்
திரிலோக புவனமுந்தன் யேவல்கேட்கும்
செய்கையாஞ் சத்துருக்க ளடியில்வீழ்வார்
சிவனுமையுந் தேவர்களும் வார்த்தைசொல்வார்
செய்கையா [illegible]க்கீடா ருண்டோயில்லை
சித்தமபாரா முன்தேகஞ் சித்தியாச்சு
செய்கையா யெதுவேணு கருமஞ்செய்ய
சிவசிவா கருவுருமுன் காட்டிமூட்டே. (55)

மூட்டவே நாகபா சந்தானீட்டோ
மூர்க்கமாம் சுராபான மிகற்கிடாமோ
நாட்டவே காயதனைக் கொண்டுவந்து
நயமாக நிழலுணர்த்தித் தயிலம்வாங்கிச்
சூட்டவே தயிலந்திற் புனுகுபூரம்
துடியான வீரமுடன் கூடன்சேர்த்து
நீட்டவே சரக்கெல்லாந் தோய்த்துவாட்ட
நிசமாகக் கட்டியது மெழுகுமாமே. (56)

மெழுகாகும் ரவியில்வைக்க உப்புமாகும்
வேதையாங் கோடிகவர் விரிந்தேயாடும்
நழுகாத ஜாலவித்தை யிதனாலோடும்
நாட்டவே தொடுகருவு மிதுவேயாகும்
அழுகாத சரக்கென்ன துருசைத்தோய்த்து
அப்பனே ரெண்டெருவிற் புடத்தைப்போட
வழுகாமல் வெளுப்பான சுண்ணமாகும்
மகத்தான மதயானை பட்டுப்போமே. (57)

பட்டுப்போஞ் சூதமொரு பானைதன்னிற்
பாச்சியே துருசுநீர் களஞ்சிபோட
வட்டுப்போ விறுகியது வெள்ளியாகும்
மாத்தென்ன மூந்நூறு மாத்துமாகும்
தெட்டுப்போ விந்தவெள்ளி செம்புநூறிற்
செயமாக வோர்களஞ்சி கொடுத்தால்மாத்து
விட்டுப்போ மாயிரத்துக் கோடும்பாரு
மேலான வேதையடா சூதப்போக்கே. (58)

சூதவித்தை கோடிவரை தொந்தமேறும்
சுருக்கடா வேதையிட்டால் மலைபொன்னாகும்
வாதவித்தை பாராதே சூட்சம்பாரு
மாணிலத்திற் குபேரனிதி யீட்டோசொல்லு
வேதவித்தை யின்னமொரு சூட்சங்கேளு
விள்ளுகிறே னஞ்சனத்தை விகிதமாகப்
போதவித்தை யாகுமடா புவியிலுள்ள
பொருள்களெல்லா முந்தனுட பொருள்தான்பாரே. (59)

பொருட்டாக வேணுமென்றுற் சொல்லக்கேளு
போதமா மயித்தேசிக் கண்ணிக்கேறுடே
யிருட்டாத மிணிமினிதே வாங்குப்பித்து
யிந்திரகோ பப்பூச்சி பன்றிக்கொம்பு
வெருட்டாத பச்சோந்திச் சிரம்பூநாகம்
விதமான சாதிக்கா யெட்டும்நேராய்த்
தெருட்டாம லுலர்த்திமுகற் கருவுங்கூட்டிச்
சிவந்ததொரு தூசியினா லாட்டிப்பாரே. (60)

ஊட்டியே காரெள்ளு யெண்ணெய்விட்டு
உறவாகத் திரியதனை யகலிலிட்டு
மூட்டியே பத்தவைத்துக் கபாலவோட்டில்
முக்கியமாய்ப் பாதாள மூலிச்சாறு
தீட்டியே தூர்தனிலே மையைவாங்கு
சித்தர்முத்தர் தாய்பதத்தைப் பூசிக்கப்பால்
காட்டியே அஞ்சனா தேவிதன்னை
றங்கெனவும் றிங்கெனவும் நயந்துகொள்ளே. (61)

நயந்துகொள்ளும் அஞ்சனா தேவியாகி
நன்மைதர வேணுமென்று கருத்தினுன்னி
வியந்துகொள்ளும் மையெடுத்துக் கரத்திலேந்தி
விதமான கம்பளியை மூடிப்பாரு
அயந்துகொள்ளு முருமாற்றஞ் சொல்லக்கேளு
ஆச்சரியங் கல்தேரை தேடிப்பித்து
கயந்துகொள்ளுங் குழிபானை சமனாக்கொண்டு
கருவாகும் முத்தயிலந் தன்னாலாட்டே. (62)

தன்னாலே ஆட்டிமுகற் றாசினாட்டித்
கருவாஞ்சித் தேரண்டத் தெண்ணெய்விட்டு
முன்னாலே சித்தாமை யோட்டினுள்ளே
முதிரவிட்டுக் கண்சுட்டித் தூரில்நன்றாய்ப்
பன்னாலே பேய்ப்பீர்க்குச் சாரையூட்டிப்
பத்தவைத்து மையெடுத்து வைத்துக்கொண்டு
சொன்னாலே அம்மென்று நிலைதம்போடச்
சுகாதீத உருமாற்றஞ் சூட்சந்தானே. (63)

சூட்சமாய்க் கண்டுகொள்ள மாற்றஞ்சொன்னேன்
சுகாதீத சிவனாலுங் காணக்கூடா
ஆச்சரிய மிந்தவித்தை யல்லாதுண்டோ
அரகரா தேகமது காணவென்றால்
பேச்சரிய ஆட்காட்டி மையைத்தீட்டு
பேருலகம் பதினாலும் உன்னைக்காணும்
சூட்சமா மிப்படித்தான் கருவார்சொல்வார்
சூட்சாதி சூட்சமென்ற சூட்சந்தானே. (64

சூட்சமடா சொல்லுகிறேன் முன்னேசொன்ன
சூதவெள்ளி யிடைபாகந் தங்கஞ்சேர்த்துக்
கூச்சமடா நாதவிந்து சமனாய்க்கொண்டு
கூறிய சிறுநாகங் கெந்திதானும்
வீச்சமடா சமபாகம் நிறுத்துக்கொண்டு
வெருளாம லொருசாமங் கல்வத்தாட்டி
மோட்சமடா தேகசித்தி கைக்குள்ளாச்சு
மூதிரவே மேருவென்ற குப்பிக்கேற்றே. (65

ஏற்றியே வாலுகையிற் றீயைமூட்டி
என்னசொல்வேன் செந்தூர மியம்பக்கேளு
சாற்றியே மூச்சாமங் கமலவன்னி
தான்மூட்டி முத்தீயு மெரித்தபின்பு
ஆற்றியே வடுகனுக்கும் ஆத்தாளுக்கும்
அடவாகச் சோடசோப சாரத்தோடே
ஏத்தியே செந்தூர மெடுத்துப்பாரு
இணையுண்டோ செம்முருக்கம் பூவொவ்வாதே. (66)

ஒவ்வாத செந்தூரம் பணவிடைதான்
உறுதியா யிருபோது தேனிலுண்ணக்
கவ்வாது நரைதிரையுந் தேகம்போகும்
கருதிக்கேள் வயதீரெட் டென்றுமாகும்
தவ்வாது நவலோகந் தன்னிலூட்டத்
தவாது முந்நூறு மாத்துமாகும்
மவ்வாது தேகநடுக் கத்திலோடும்
மாசற்ற செந்தூர மகத்வந்தானே. (67)

மகத்துவந்தான் சொல்லுகிறே னுன்னைப்போலே
மானிலத்திற் சித்தருண்டோ யெவருமிட்டோ
சகத்திரந்தான் கோடியுண்டு சூத்திரம்போற்
சாற்றுமோ சகலசித் ததிதமாக
அகத்துள்புரி யட்டபூ ரணமுமொன்றாய்
ஆக்கிவிக்கும் சிற்குணத்தி னதிதந்தானும்
சகத்துள்ளே மசகமடா தொழில்களெல்லாம்
நாதாந்தப் பட்சணியை நாட்டினேனே. (68)

நாட்டினு லொவ்வொன்றிற் கோடிதொந்தம்
நந்திசர் பட்சணியி லதிதஞ்சொன்னர்
மூட்டினர் தேவரொடு கணங்களிட்டோ
மூவுலகு முனக்கிடு சொல்லப்போமோ
நாட்டியே அட்டதிக்கும் விஜயஞ்செய்ய
நாதாந்தப் பட்சணியின் கருவைப்பாரு
மேட்டிமையாய்த் திரிந்துவிட்டா லேதுண்டாகும்
வீணேநீ திரியாதே யிந்நூல்பாரே: (69)

இன்னூல்போ லெந்தெந்த நூலானுலும்
இனிக்குமோ கரும்புரசங் கச்சுப்போகும்
மின்னதே ஒருவருடன் வீண்பேசாதே
மேதினிவா ழரசாளி நீதமில்லாள்
தன்னலே யின்றமட்டுஞ் சேனைகூடித்
தாரணிவாழ் மாந்தர்களுந் தன்மேல்வந்தால்
முன்னலே உடைத்தவன்றன் சேனையெல்லாம்
முடுகியே மடிந்துவிடக் குடந்தான்பாரே. (70)

பாராரும் படியேழுங் கொள்ளாமற்றான்
படைகூடி வந்தாலும் மசகமாச்சு
சீராரும் நினைவதனுற் றேர்ந்துகொண்டு
சிங்கம்போ லவன்சேனை முகத்தைநோக்கி
ஏராருங் கருவதனை யியம்பக்கேளு
இதமாகுங் காமமோ கினியைவாழ்த்திச்
சாராரும் நுனிவாலை வனையமாடிச்
சமத்தான மூன்தயிலங் கனுத்தொட்டுவேணே: (71)

ஊணவே செம்முள்ளி வெண்கொழுஞ்சி
உறவாகுஞ் சிறுசின்னி மூலந்தானும்
வேணவே முன்னுரிற் கன்னிசாம்பல்
வேகாத குடத்தைப்பார் சுள்ளைச்சாம்பல்
தோணவே புத்துமண்ணுங் கலந்துகொண்டு
துகையென்ன அறுகோண மூலந்தானும்
பேணவே குடத்தினிலே வளையம்போட்டுப்
பெருகவே சோடசோப சாரத்தோடே. (72)

சாரஞ்சான் வஸ்துடனே சுத்திவைத்துத்
தயவாக ருத்ரசெபம் லட்சமூட்டிப்
பேரஞ்சான் சட்கோணம் ருத்ரமூலம்
பேதனவுச் சாடனத்தால் நோக்கிப்பார்த்துக்
கூரஞ்சான் ஐயனொடு துர்க்கைகாளி
கோவில்வலங் குடங்கொண்டு சுத்திவந்து
சீரஞ்சான் தன்சேனை முன்னேநின்று
செயிக்கவந்த யெதிராளி படையைநோக்கே. (73)

நோக்கவே மூன்றடிதான் முன்னேவாங்கி
நோகாமற் குடத்தைப்போட் டுடைத்துப்போடு
தாக்கவே மூன்றுலட்ச முருத்தான்கொண்டால்
சமத்தான குடத்திலிருந் ததீதமாகப்
பார்க்கவே ருத்ரகணங் கோடாகோடி
பாரேழுங் கொள்ளாம லடர்ந்துசாடி
நீக்கவே நிமைக்குமுன்னே சேனையெல்லாம்
நிமிஷத்திற் றூளாக்கிப் போடுந்தானே. (74)

போடுமே கோட்டைகொடி காரமெல்லாம்
புதுமையாங் கிழூறு கொண்டுபோச்சு
கோடுமே மதயானை நீயேயாச்சு
குறியான மூவுலகுஞ் வசமேயாச்சு
நாடுமே கிரகவுச்ச மருந்துதானால்
ராஜரீகஞ் செய்யுமடா சித்தனாக
வாடுமே தேகமெல்லாங் காந்திகாணும்
வரிசையென்ன சட்டையெல்லாந் தள்ளும்பாரே. (75)

தள்ளுமே முன்சொன்ன ரசசெந்தூரம்
சார்வாக வருடமொன்று சார்ந்துகொண்டால்
விள்ளுமே கத்திநடு வோடுந்தேகம்
வெளியான பூரணத்தை மேலேயேற்றும்
தள்ளுமே ஆறுவரை தாண்டிச்செல்லும்
சதிராகுஞ் சபையேழுங் காணுமுள்ளம்
துள்ளுமே யிந்திரிய மேங்கிடாது
தோகையரைச் சேராதே துரியத்தேறே. (76)

தேறவே சிவனுமையின் னூலைப்பார்த்து
சித்தநிக மிச்சமென்றார் சித்தரெல்லாம்
கூறவே உனக்காகச் சொன்னேன்சூட்சம்
கொட்டினேன் கருமறைப்பு மில்லாமற்றான்
ஆறவே புத்திவந்தா லெல்லாமாச்சு
அம்பரத்தை யறியாட்டால் மடையனாச்சு
சாறவே செந்தூரம் பத்யங்காரு
சாவில்லை காலனுமக் கில்லைதானே. (77)

இல்லையென்று போகாம லிந்த்ரஜாலம்
இயம்புகிறேன் சகலசித்துங் கருத்தொட்டாடத்
தொல்லையென்று போகாதே மகனாரூபி
சுகாதீத மாங்குமரி மூலத்தோடே
எல்லையடா நிசமிதுதான் சமனாய்க்கொண்டு
இதம்பெறவே நிழலுலர்த்தித் தயிலம்வாங்கி
அல்லையடா முற்றயிலம் மயானச்சாம்பல்
அதீதந்தான் ஜாலவித்தை யறிந்துகொள்ளே. (78)

கொள்ளவே யின்னமொரு சூட்சங்கேளு
கூறுசன்னி சுரதோஷங் கிரகசங்கை
மெள்ளவே யேவலொடு கணங்கள்காளி
விஷம்பூதம் பேயுடனே துஷ்டகாளி
கள்ளமே யில்லையடா ஐயன்துர்க்கை
கடிதான சாமுண்டி பிடாரிதானும்
தள்ளவே அடங்காத துட்டரெல்லாம்
தானோடச் சாடனந்தான் சார்ந்துகேளே. (79)

சார்ந்துகேள் வேம்பின்மேற் காக்கைக்கூடு
சார்வான கழுதைலத்தி பன்றிவிட்டை
சார்ந்துகேள் மூன்றுகூறு சந்திமண்ணும்
தனிவீட்டிற் புகையூறல் சுழற்றரும்பு
சார்ந்துகேள் காஞ்சூரை ஆமையோடு
தயவாம்பேய்ப் பீர்க்குகவு தும்பைக்காயும்
சார்ந்துகே ளிதுவெல்லாம் சமனாய்க்கொண்டு
சதிராகச் சூரணித்துச் செம்மான்தண்ணீர். (80)

தண்ணீர்விட் டரைத்துமுதற் றாசிலூட்டித்
தயவாக வேயுலர்த்திக் காயவைத்துக்
கண்ணீர்போற் றேசியுட லூணேவிட்டுக்
காரணமுஞ் சாடனத்தில் நூற்றெட்டோதி
கொண்ணீர்மை யில்லையடா திரியைவாங்கிக்
கொளுத்துவாய் புகைகாண யெல்லாமோடும்
நண்ணீர்மை சூட்சமுஞ்சா டனந்தான்பாரு
நலமாமுன் சொன்னதெல்லா மோடிப்போமே. (81)

ஓடுமடா அஞ்சனங்கள் பார்க்கும்போது
ஓடுங்காத காளியைய னெதிர்த்துவந்தால்
சாடுமடா யித்திப மேத்திமுன்னே
தான்காட்ட மறைந்தோடு மெதிர்நில்லாது
நாடுமடா யின்னமொரு வித்தைபாரு
நாட்டுகிறேன் வெகுவிசிதம் நன்றாய்க்கேளு
கூடுமடா லோகமதில் ஸ்திரிகளாடை
கொள்ளாம லவிழ்ந்துவிடக் குறிசொல்வேனே. (82)

குறியென்ன மாயவன்றன் பிறந்தவாரம்
கூறுவேன் சனிக்கிழமை அந்நாள்தன்னில்
குறியென்ன மாயவன்றன் மூலிதன்னை
குணமாக வணங்கிநின்று சாபம்நீக்கி
குறியென்ன மாயனுட தியானந்தன்னைக்
கூறவே பூரகந்தான் நூற்றெட்டோதி
குறியென்ன செவ்வாயின் இரவிற்பொங்கல்
கொள்கையாய்ப் பெலிகொடுத் தாபங்காட்டே. (83)

காட்டடா வேதனைக் கெல்லிமைந்தா
கருணைபெற நுனிமூலங் கைதான்போட்டு
மூட்டடா ஆகாச வெளியைப்பார்த்து
முதிர்ந்தவெள்ளி விழுகையிலே மூலத்தோடே
நாட்டடா அறிவாலே வேரைவாங்கி
நயம்பெருமுச் சாடனந்தான் லட்சமோதி
ஊட்டடா யெந்திரத்திற் பொதிந்துகொண்டு
உறவாக உன்னிடுப்பிற் கட்டிக்கொள்ளே. (84)

உன்னிடுப்பிற் கட்டிடவே முறைப்பெண்தானும்
முக்கிவெட்கித் தலைகவிழ்ந்து வோடத்தானும்
தன்னடப்பா யவனுடைய தடத்தில்நின்று
தன்னாசை தூக்க அவள் சீலைதூக்கும்
உன்னியல னெடுத்தெடுத்தே உடுத்தினாலும்
ஒருவரெடுத் துடுத்திடியே கட்டினாலும்
பின்னுதுகி லரையிலே தருகாதப்பா
வேருடைய முக்கியம்பார் விசிதந்தானே. (85)

விசிதமடா பின்னமொரு வித்தைகேளு
மேதினியி லதிகமடா விரும்பிப்பாரு
விசிதமடா தூசுகுடை பிடித்துவந்தால்
மேலான தேவனென்பா ருலகத்தோர்கள்
விசிதமடா மதனவல்லி தயிலத்தோடே
வியனான யீமத்தின் சாம்பல்தானும்
விசிதமடா கருத்தொட்டுத் தூசுதன்னில்
விடுமுந்தி நால்மூலை மையந்தானே. (86)

மையந்தான் கருங்காளி தியானஞ்சொல்லி
வானோக்கி வீசிடவே விரித்துக்கொள்ளும்
ஐயந்தான் இல்லையடா யுனக்குத்தானே
ஆதவன்போற் குடைபிடித்து வரவேகண்டோர்
ஒய்யந்தான் மாமுனியோ ரிஷியோவென்று
உன்காலில் வீழ்ந்தெழுந்து யேவல்கேட்பார்
வையந்தான் கொள்ளாத கருக்கெல்லாம்
மாட்டினேன் வெளியாக மைந்தாபாரே. (87)

பாரப்பா இன்னமொரு சூட்சங்கேளு
பாடுகிறேன் நாதாக்கள் பாடாதெல்லாம்
வேரப்பா தம்பனமொன் றதீதமாக
மேலான அழுக்கிருச் சூரிவித்து
காரப்பா கிரஸ்ஸையுந்தான் கருத்தொட்டாட்டிக்
கருணைபெற வேறுமென்று காயிற்பூசி
பேரப்பா தம்பனக்தான் றூற்றெட்டோதிப்
பிரியமுட னுரையுந்தான் சமைக்கச்சொல்லே. (88)

சமைக்கரிவாள் பனியிலிட்டு நருக்கினாலும்
சதுருகக் கத்திகொண்டு வீசினாலும்
அமைக்கருமை யாகுமடா அதீதப்பாரு
ஆயுதங்கள் முனைமழுங்கி முறிந்துபோகும்
சமைக்கருவாய் மெய்யெங்கும் பூசிக்கொண்டு
கடகமந்த்ர வாள்கையிற் பிடித்துக்கொண்டு
நிமைக்குமுன்னே சாத்தியன்றன் சேனைதளமெல்லாம்
நீவெட்டித் துணியுன்மேல் வெட்டோதே. (89)

ஏராது வெட்டிவாள் குண்டேறாது
எதிராளி பாணமொன்றுஞ் செல்லாதப்பா
பாராது தேவருனக் கீடோமைந்தா
பஞ்சபட்சி தனையறிந்தால் வெல்லப்போமோ
தீராது பிறவிபிணி நோய்தான்பாரு
தீர்ந்துவிடச் சிவயோகத் திருந்துதேறு
வாராது மெய்ஞ்ஞானம் வந்தால்மைந்தா
மவுனிசிவ யோகியடா சித்தனாமே. (90)

சித்தனைச் சடமிருந்தால் வாய்க்குமெல்லாம்
செடமிறந்து போனாக்கா லேதுண்டாகும்
முத்தனா யிருந்தாக்கால் சினத்தைப்போக்கு
முனைதிறந்து முப்பாழுக் கப்பாற்செல்லு
சித்தனாய் நடராஜா சேவைகண்டு
நிலைத்தபுத்தி தவறாமல் நின்றால்நீயே
சுத்தனாய்ப் பிராணாய சூட்சத்தாலே
சுகாதீத முள்ளடங்குந் துரியமாமே. (91)

துரியமாங் கருக்களெல்லாம் விரைந்துபார்த்துச்
சூத்திரத்திற் கோர்த்துவிட்டேன் மணிகளாக
பிரியமா யிந்நூலைப் பாடியானும்
பேரண்டஞ் சித்தண்டங் கீர்த்தியாச்சு
அறியாம லிந்நூலைப் பதனம்பண்ணு
ஆர்தனக்குங் கண்ணிலே காட்டவேண்டாம்
தெரியாமற் பசங்கள்கையிற் கொடுத்திடாதே
சிவயோகி யானலிக் தாலிவாயே. (92)

நூலிலே வெகுகோடி நூல்களுண்டு
நுணுக்கங்கள் நிரம்பவுண்டு காட்டமாட்டார்
நாலிலே பூரணத்தின் காலைக்கண்டு
நாதாந்தப் பட்சணியிற் றெரியச்சொன்னேன்
பாலிலே தெளிவாகும் பாலாமிந்நூல்
பார்த்தவர்க்கு வெட்டவெளி சூத்திரம்பார்
சாலிலே நெய்யிருக்க வெண்ணெய்தேடித்
தானலைவார் சண்டாளப் பிசத்தோரே. (93)

சண்டாள பிசத்தோர் செனனவாசம்
தான்போமே அவருடனே சாரப்போமோ
வண்டாரும் பூங்கூந்தல் மாதராசை
மனதிலே நினைத்தாலும் ஞானமாமோ
தண்டாமற் பசுபதியின் பாசந்தள்ளி
சச்சிதா னந்தவரை சார்ந்துநின்று
தொண்டான அடியாருக் கடிமையாகிச்
சொற்குருவின சார்பறிந்து சோதித்தேனே. (94)

சோதித்தேன் சூட்சாதி சூட்சமெல்லாம்
சூட்டினேன் கருவடக்க மில்லாமற்றான்
சாதித்தேன் வெளிதிறந்து பட்சணியில்
சகலருக்கு மிந்நூலிற் கருத்தான்றோனும்
வீசித்தேன் சகலகருச் சூக்ஷமெல்லாம்
விள்ளாதே கசடருக்குச் சொன்னாற்றோஷம்
போதித்தேன் உலகமெல்லாஞ் சித்தாய்ப்போகப்
பூவுலக மெல்லாமுன் வசமதாச்சே. (95)

ஆச்சென்று வந்தசன்னி சாங்கம்போக
அடங்காத பேயுடனே பூதம்போக
போச்சென்ற விஷங்களெல்லாம் மீண்டுபோக
புகலமேகம் செம்பருத்தின் கன்றும்பித்தும்
வீச்சென்ற திமைப்பூச்சி கிரிப்பித்து
வெள்ளொருக்குந் சிக்கிலிக்குந் திறியாணங்கை
மூச்சென்றுதலைசுருணி பங்கப்பாணி
முதிர்மூல மேனியுட மூலந்தானே. (96)

மூலந்தா னிவ்வளவுஞ் சமமாய்க்கொண்டு
முயன்றினது ஆறுடனே காந்தந்தானும்
ஆலந்தான் வகைவகைக்குக் களஞ்சிதானும்
அடவியில்வாள் பன்றியுட பித்துங்கூட்டிச்
சீலந்தான் பெய்ப்பிர்க்கின் தயிலந்தாட்டிச்
செயமாக நிழலுலர்த்திக் கயிறுய்வாங்கி
ஓலந்தா னிட்டுவங்கோர்க் கிதையேமைந்தா
உச்சிதமாய் வெற்றிலைச்சார் தனையுரைத்தே. (97)

உரைத்துயிள கிப்பாதி யிருகண்ணுக்கும்
ஊட்டினல் முன்சொன்ன தெல்லாமோடும்
விரைத்துவிடுங் குளிகைதனைக் கண்டபோதே
விசம்போச்சு சரம்போச்சு தோஷம்போச்சு
அரைத்துவரும் பேய்பூதம் ஓடிப்போச்சு
ஆச்சரியம் பூபதியு மினக்கொல்லாது
நிரைத்துவிட்டேன் பட்சணியி னதிதம்மெத்த
நேத்தியடா நெஞ்சிலுன்னிப் பாருபாரே. (98)

நெஞ்சான தொருமனதாய் நிலைக்கவேணும்
நேராகப் பூரணத்தை நோக்கவேணும்
பஞ்சான வஞ்சகத்தா னறுக்கவேணும்
பட்சணியை அதிசமுற்றுப் பார்க்கவேணும்
துஞ்சாத செந்தூர முன்னவேணும்
சொல்லரிய பிராணாய சூட்சம்வேணும்
அஞ்சாத அட்டாங்க சித்திவேணும்
அருளாகும் பொருளதுதா னவனுமாமே. (99)

தானவனு யிருக்கவென்றால் தீட்சைவேணும்
தயங்காமல் யோகசித்தி யாகவேணும்
மானவளா யிருந்தசிவ காமிவாலை
மகத்துவந்தான் சிவரூபங் காணுங்காணும்
யானவளா யிருந்தகருத் தறியவேணும்
அதீதந்தான் சிலம்பொலியைக் கேட்கவேணும்
தேனவள்தா னமுதமள்ளி யூட்டவேணும்
சிவக்யான தீபநுனி தீபம்பாரே. (100)

பாரப்பா யிந்நூல்போல் நூலோயில்லை
பகல்போலே கருவையெலாந் தெரியச்சொன்னேன்
சீரப்பா சாஸ்திரமா யிரந்தான்சொன்னேன்
சிருட்டியடா பார்ப்போர்க்குத் திறந்தான்பாரு
கூரப்பா அதைக்குறுக்கி யைந்நூறாகக்
கொட்டினே னதைக்குறுக்கி யிருநூறாகச்
சாரப்பா அதைக்குறுக்கி நூறுசொன்னேன
சமத்தாக இவ்வளவும் சார்ந்துபாரே. (101)

சார்ந்துபார் கருக்கிடையுங் குருக்கிடையும்
சாற்றரிய பட்சணியைப் போலேயுண்டோ
கூர்ந்துபார் கருக்களெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
குவலயத்தி லினைப்போலார் சித்தருண்டோ
நேர்ந்துபார் நிஷ்டைவிதி யோகமார்க்கம்
நினவறிந்து காலறிந்து அறிவில்நில்லு
தேர்ந்துபார் சிவதீட்சை சத்திதீட்சை
திறம்பெற்றார் மெய்ஞ்ஞானச் சித்தராமே. (102)

சித்தனுஞ் சகலசித்துங் கைக்குள்ளாகும்
திரிலோக புவனமுந்தா னேவல்கேட்கும்
சுத்தனு யிருந்தாக்கா லெல்லாமாச்சு
தோகைவலைக் குள்ளானு லெல்லாம்போச்சு
கத்தனுஞ் சிதம்பரமும் புவனைவாலை
கருத்தாலே யிருக்கைதொட்டு ஞானமாச்சு
அத்தனுஞ் சிவனுமைநீ தானேயாச்சு
ஆதவனுஞ் சந்திரனுஞ் சுழினையாச்சே. (103)

ஆச்சடா திட்டைவிதி பத்தாங்கூடி
ஆகாயே சாட்சாரந்தா னென்றேயாச்சு
பேச்சடா யிலைகவிட்டாற் பொருள்தா னுண்டோ
பேசாதே மவுனமூற்று அதிதம்பாரு
வாச்சடா யிடையின்னுஞ் சுழினையூடே
மதியிரவி யாக்கியென்ன கண்மேறுகூசும்
மூச்சடா உள்ளடங்கும் பேச்சடங்கும்
மும்மூல மிலவினையைச் சுழினைதாக்கே. (104)

தாக்கையா மூலமுத லாறுவீடு
சார்வுற்ற நிராதார மாறும்பாரு
நோக்கையா அந்தந்த வரையினுள்ளே
அனுக்கமா யவரவர்தன் மூலந்தானும்
ஆக்கையா பஞ்சகர்த்தா வெல்லாமாச்சு
அவரவரை அனுசரித்து அதிதம்பாரு
வாக்கையா பேசாதே மூலம்பாரு
வாழ்வென்ன சிவயோக வாழ்க்கைதானே. (105)

சிவயோக மெய்ஞ்ஞான வாழ்வேயாகும்
தீர்க்கமடா காயசித்தி க்ஷணத்திலாகும்
அவயோக மடையோகஞ் செய்யாதேநீ
ஆச்சரியம் ராஜயோ கந்தான்பாரு
தவயோகக் குண்டலியே சத்திசத்தி
சார்ந்தறிவாய் லட்சயப்பூ ரணந்தானாச்சு
நவமூல மனுவளவாய் மேருவாச்சு
லட்சயமே அதீதமடா மோட்சந்தானே. (106)

மோட்சமிந்தப் பட்சணியார் கொடுக்கப்போறார்
முன்னூலிற் சொல்லிவிட்டேன் சூட்சமெல்லாம்
ஆச்சரிய மிந்நூல்தா னார்க்குக்கிட்டும்
அனுபோகி யானுக்காற் பலிக்கும்பாரு
பேச்சரியப் பேச்செடுத்துப் படித்துப்பேசிப்
பெரியோரைத் தர்க்கமிடும் பிசாசரோடே
கூச்சமன்றிச் சங்காத்தம் பண்ணவேண்டாம்
குணமான பிள்ளைவந்தாற் கைக்கொள்வாயே.

கொள்ளுவாய் பிள்ளையுட மனஞ்சோதித்துக்
கூறுதவ றாதபுத்தி யில்லாவிட்டால்
தள்ளுவா யவனுடன்வாய் பேசவேண்டாம்
தவறாத புத்தியொடு நெறியில்நின்றால்
விள்ளுவாய் பட்சணியை யெடுத்துக்காட்டி
விளங்குகருக் கிடையேகுருக் கிடையுஞ்சொல்லித்
துள்ளுவாய் சுண்ணாம்பு மஞ்சள்தானும்
தொடுகுறிபோல் கூடமெல்லாங் கூட்டிச்சொல்லே. (108)

சொல்லடா யினமறிந்து வாகியோகம்
கூட்டடா சகலகலை செய்தியெல்லாம்
சல்லடா காயசித்தி போகமார்க்கம்
கருவென்ன சவுக்கார மாதியாதி
அல்லடா பசங்களுக்கு யிந்நூலீய்ந்தால்
அந்தரமா யிடிபிடித்துத் தலைவெடிக்கும்
வெல்லடா நவகோடி சித்துமாடும்
வேதாந்த பட்சணிய திகமுற்றே. (109)

இராமதேவர் தண்டக பட்சணி ௱க.

முற்றிற்று.





திருமங்கலம், அருணாசலம்பிள்ளை குமாரர், வைத்தியம் சுப்பிரமணியபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

முருகன் றுணை.

103 - வது:

இராமதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# பரைஞான கேசரி ௱.



ஆதியெனும் பரைஞான கேசரியைத் தானும்
        அசையாமல் நெஞ்சகத்தி லறிவதனால் நிறுத்தி
நீதியெனும் பரைஞான கேசரிவி நோதம்
        நேர்மையுடன யான்பாடக் குருவருளே! சரணம்
சாதியெனும் எழுவகையுந் தன்வசமாய்க் கண்டு
        சச்சிதா னந்தமென்று அமுதமதைக் கொண்டு
சோதியெனுஞ் செகசோதி ஞானமய மான
        தூண்டாத தீபமதைத் துணையெனக்கொண் டேனே. (1)

துணையான தீபமடா தூண்டாத தீபம்
        சுயஞ்சோதி யானதொரு தீபமதிற் சேர்ந்து
வினையான கருவிகர ணாதிகளை நன்றாய்
        விபரமுடன் தானறிந்து அனலதனை மூட்டி
சுனையான யோகமெனுஞ் சுகதுக்க மிரண்டும்
        சுட்டந்தப் பதியான துருவமதில் நின்று
முனையான சுழிமுனையென் றழலான தீயில்
        முக்காலும் வலம்வந்து முன்னிலைகண் டேனே. (2)

கண்டந்த முன்னிலையிற் பரைஞான தீபம்
        கருவான தீபமதிற் கருணைபெற நின்று
கொண்டாட பரைஞான கேசரியைக் கண்டு
        கூர்மையுட னவள்பதியில் நேர்மையுடன் நின்றேன்
விண்டந்தக் கேசரியும் வாராமா வென்று
        விபரமுடன் விநோதவகைச் சுருணமிக யீந்தாள்
அண்டர்பிரா னருள்கொண்ட ராமனுட வாக்யம்
        அருளான வாக்கியமென அறிந்துமிக நில்லே. (3)

நில்லந்த நிலைதனிலே நின்றுநிலை கண்டால்
நிசமான பரைஞான கேசரிதன் னருளால்
சொல்லந்த மானதொரு கலைகள்மூன் றதுவுந்
தோணுமடா உனதிடத்திற் றருவமதின் மீதே
செல்லந்த முதற்கலைகள் அகாரமய மாகும்
திருவான பிங்கலையும் உகாரமய மாகும்
கல்லந்த மானதொரு ஓங்கார ரூபம்
கருணைபெற முப்பொருளுங் கண்டுமிக நின்றேன். (4)

கண்டுமிக நின்றதொரு ஞானகே சரியைக்
கருவான விநோதமய மானஞா னிதுவாய்
விண்டுமிகக் கொண்டதுக் குருவினிடஞ் சென்று
விநோதமய மானதொரு ஞானகே சரியைக்
கொண்டதப் பாதமதில் வைத்துமிக நின்றேன்
குணமான பரைஞான கேசரியை நீதான்
பண்டுள்ள பொருள்களை நீ விநோதமய மாகப்
பாடினதை யாரறிவார் பயனறியார் தானே. (5)

தானென்ற சந்தோச மாகவெனை யழைத்துத்
தவமாகச் சொன்னதொரு ஞானகே சரியைத்
தேனென்ற விநோதமய மானபொருள் தன்னைச்
செப்பமுடன் சொன்னதுவும் மெத்தமிக நன்று
வீனென்ற வீணர்களு மிப்பொருளைக் கண்டால்
மேலான சித்தர்களை வீரியமே செய்வார்
கோனென்றுங் குருவென்றும் மதியாமல் நிற்பார்
குருவான பெரியோர்க்கு மனநோகும் பாரே. (6)

பாரப்பா விநோதமய மானகே சரியைப்
பண்பாக நல்லோர்க்கு அன்பாக யீவாய்
ஆரப்பா அறிவார்கள் கேசரியின் மாயை
அரூபமய மானதொரு குருவினுடை தீபம்
நேரப்பா நின்றவர்கள் தீபமதை யறிவார்
நிலைகண்டு அவர்களிட மிந்நூலை யீவாய்
வீரப்பா கொண்டதொரு வீணர்தனக் கீந்தால்
வேதாந்தத் தீயதுவும் மெய்யாகச் சுடுமே. (7)

மெய்யான பரைஞான கேசரியி னோதம்
மேன்மைபெற ஒருவருமே யாடுவதை அறியோம்
அய்யனே உனதுடைய வாக்கியமே கண்டோம்
அன்பாக இந்நூலுக் கொருநூலு மில்லை
துய்யனே யிந்நூலைப் பதனமதாய்ப் பாரு
சுகமாக யிந்நூற்குச் சாபமது மில்லை
வையகமா மிதனில்வெகு சித்தர்களு முண்டு
மாராட்டஞ் செய்வார்கள் மனமறிந்து தன்னே. (8)

கற்பசாதனம்.

தன்னடா சுகதுக்க மிரண்டுமதை நீயும்
தாயான பரைஞான கேசரிதன் னருளால்
உன்னடா நிலையான அந்தநிலை தனிலே
உண்மையா மதியமுதம் மருவியது பாயும்
கொன்னடா அந்தமுகம் பசிதீர வுண்டு
குருவான சிவசத்தி யிரண்டையுமே பூசி
தென்னடா சிவயோகப் பதவியிலே நின்று
திறமாக காற்பதமுஞ் சேர்த்துமிகக் கொண்டேன். (9)

சந்திரசூரியர் ரேயல்.

கொண்டதொரு பரைஞான கேசரியைத் தானும்
கூர்மையுடன் கண்டுதொழ நேர்மைதனைச் சொல்வோம்
கண்டதொரு சூரியனுஞ் சந்திரனு மிரண்டும்
கலந்தோடு மாகாசச் சுழினையது ஒன்றும்
விண்டதொரு மூன்றுமும் மண்டலம தாகும்
விபரமுடன் உனதிடத்தில் மெய்யாகப் பாரு
அண்டமெனுந் திரிகூட ஆக்கினைதன் னதிலே
அடங்கிநின்ற பருதிமதி சுடர்தனைக் கேளே. (10)

கேளடா சதுரகிரி கொடுமுடிதன் னதிலே
கிருபையுடன் வாழுகிற பிடகலையிங் கலையும்
சூளடா சுடரான சுழிமுனைதன் மீதில்
துலங்குகின்ற விபரமதை சூக்ஷமதாய்க் கேளு
பாளடா யிடையான சந்திரனார் சேரில்
பஞ்சபூ தங்களொடு அறிவுமிக வொடுங்கும்
வாளடா வல்லமான சூரியனார் சேரில்
மகத்தான ஐம்புலனு மறிவுமிக வருமே. (11)

அறியாம லிடகலையும் பிங்கலையுங் கூடி
அசையாமல் வலமாக அந்தரத்தி லேகி
நெறியான சுழியினிடம் ஒடுங்குவதே யானால்
நின்றிலங்கு மறிவுடனே தசவாய்வு ஒடுங்கும்
குறியான தொடுங்குவது இயங்குவதோ யில்லை
கூர்மையுட னிதையறிந்து குருவருளைப் போற்றிப்
பறியான பரைஞான கேசரியைக் கண்டு,
பத்திகொண்டு யிருகலையும் பதிப்பதனாற் சித்தே. (12)

சித்தாகுஞ் சிவமாகுஞ் சிவயோக மாகும்
சிவசிவா பூரணத்தின் தெரிசனமு மாகும்
முத்தாகுந் தேகமது சித்திமய மாகும்
மூர்க்கமுடன் வாசியது தீர்க்கமுட னையா
வித்தாகும் பரைஞான கேசரியிற் சேர்ந்து
விபரமுள்ள வாசியது தீபமதிற் புக்கும்
பத்தாகுந் தீபமது வாசியதின் வழியாய்
பக்குவமாய்த் தானிரங்கி மூலமதிற் சேரும். (13)

மூலமதிற் சேர்ந்தந்தத் தீபவொளி தானும்
முத்திகொண்ட பரைஞான கேசரியிற் சென்று
ஞாலமெனும் புருவநடுப் பீடியதி னோரம்
நடுவான பீடமடா பிரமமதின் பீடம்
சீலமெனும் பீடமதில் நடுவுமது வாசி
சிவஞான குருதேசி சத்திசிவ மாக
கோலமுடன் குடியிருந்த பாகமதை யறியக்
குறிவொன்று சொல்லுகிறேம் நெறியாகக் கேளே. (14)

சத்திசிவ ரகசி.

நெறியென்ற புருவநடுக் கமலமீ தினிமேல
நேர்மையுள்ள சத்திசிவ மானகலை ரெண்டும்
குறியாகத் தானொக்கி ரேசகபூ ரகமாய்க்
கும்பமெனும் பரைஞான கேசரியைக் கண்டால்
பிறிவான மனதுருகி யோர்மனதாய் நின்று
பெருமையுற அமுதாச மானமலைதக் கொண்டு
அறிவான அறிவுபரி பூரணமாய் நின்றால்
அரகரா சிவயோகத் தங்கயது வாமே. (15)

சந்திசிவ தீட்சை.

அங்கமெனுஞ் சிவயோக மனுசரிக்க வேண்டி
அருளான பரைஞான கேசரியைக் கண்டு
பங்கமில்லா அகாரமடா சிவதீட்சை யாகும்
பகாரிய உகாரமடா சந்தியுட தீட்சை
சங்கையுட னிதுவிரண்டுஞ் சாதகமாய்க் கொண்டு
தானென்று நினைவறிந்து தானாக நின்றால்
மங்காத அறிவுபரி பூரணமாய்க் காணும்
மகத்தான வாலையுட பூசைதனைக் கேளே. (16)

வாலை பூசை.

கேளுநீ வாலையுட சக்கரத்தை மைந்தா
கிருபையுட னிருதயமா முக்கோணந் தனிலே
வாளுநீ அதனடுவே விந்துவது சாத்தி
வருக்கமுள்ள வித்ததுமேற் சுழித்துமிக நின்று
ஆளுநீ விபூதிதனை யுத்தளமாய்ப் பூசி
அன்பாக மேருவைமுன் ரேசகமும் பண்ணி
தாளுநீ பூரணமாய்ப் பூரகமே செய்தால்
தவறாது வாலையுட பூசையிது வாச்சே. (17)

சிதம்பர பூசை.

ஆச்சப்பா வாலையுட பூசைதனைச் சொன்னோம்
அன்பாகச் சிதம்பரத்தின் பூசைதனைக் கேளு
காச்சிதரும் பரைஞான கேசரிதன் னருளாற்
கருவான புருவநடுக் கமலமீ தினிலே
தாச்சியென நின்றிலங்கும் ஓங்காரம் நிறுத்தி
தன்மையுள்ள ஓங்கார மதனில்நடு வாக
ஆச்சியெனு மட்சரமாம் சுழியான சுழியை
அன்பாகத் தானிறுத்திக் கேசரியை நோக்கே. (18)

சிவ யோகம்.

நோக்குவது கண்டத்தில் அங்கென்று நிறுத்தி
நன்மையுடன் அம்மென்று திருவாசல் பூட்டித்
தாக்குவது ரவிமதியுஞ் சரியாக வந்தத்
தமர்வாச லானபரா ஞானகே சரத்தில்
வாக்குமன தொன்றாகி மனதுபூ ரணமாய்
வழுவாமல் நினைப்போது வாசமதா யிருந்தால்
ஆக்கைதனி லழியாத அமுததே கமுமாம்
ஆனந்த மானசிவ யோகமது வாமே. (19)

ஆமப்பா வாணுமவ னிடப்பாக மீதில்
அசையாத பரைஞான கேசரிதன் னருளால்
நாமப்பா வென்றமொழி தானகத்தி யந்த
நடுவான தீபவொளி பரைஞான வெளியில
வாமப்பால் தன்னருளாற் றனிலங்கும் போது
மக்களே தானறிந்து வாசிதனைப் பூட்டி
காமப்பால் கானற்பால் கருவறிந்து கொண்டு
காணுவது பிருதிவியு மப்புமிகச் சேரே. (20)

செம்புகட்டு.

சேர்த்தந்த யிடைக்கிடைக் தாளமுங் கெந்தி
செம்மையுள்ள தாருசுடனே சாரமொடு லிங்கம்
பார்த்தந்த எழுசாரக்குங் கல்வமதி லிட்டுப்
பக்குவமா யாட்டுவது பழத்தினுட சாற்றால்
வார்த்துமிக நன்றாட்டி வட்டதுபோற் பண்ணி
மைந்தனே புடம்போடு சிவயோகப் படிக்குங்
காத்துமிகப் புடமாறி யெடுத்துமிகப் பார்த்தால்
கருவான எழுசாரக்குங் கட்டிமிகப் போமே. (21)

கட்டியதோர் சரக்கதனை யெடுத்தந்த யிடைக்குக்
களிம்பான செம்புருக்கி யதனிலிதைத் தாக்கு
திட்டமுடன் செம்பதுவுங் கட்டிமிகப் போகும்
சிவாயகுரு பரைஞான கேசரிதன் னருளால்
சட்டமுட னிச்செம்பை வெள்ளிதனை யுருக்கித்
தாக்கடா பத்திலிது ஒன்றமிகத் தானும்
வட்டமதி யானதொரு வெள்ளியது தானே
மாற்றுடன் தான்சிவந்து பொன்றுப மாச்சே. (22)

தாரக்கட்டு.

ஆச்சப்பா யின்னமொரு விநோதவகை கேளு
அடங்காத மால்தேவி அடங்குவதைத் தானே
நீச்சப்பா வெகுநீச்சு பிருதிவிதன் னோடே
நிசமான அப்பதுவும் ஒன்றாகக் கூட்டிப்
பாச்சப்பா தாரமது யிடைக்கிடையே சேர்த்துப்
பக்குவமா யாட்டுவது பழத்தினுட சாற்றால்
பேச்சப்பா ஒன்றுமில்லை வட்டதுபோற் பண்ணி
பேணியே புடம்போடு சிவயோகப் படியே. (23)

கட்டுசெயநீர்.

சேரப்பா யின்னமொரு கேசரிவி நோதம்
செம்பான பாண்டமதிற் செலமூறும் வகைதான்
ஆரப்பா அறிவார்கள் ரவிமதி ரமென்று
அருளான பிருதிவியு மப்புமிகச் சேர்த்துக்
காரப்பா ரவிபீசம் மாவினுட பீசம்
கருவான அறுசரக்கும் கல்வமதிலிட்டு
வீரப்பா தாமொடுங்க ஆட்டுவது கேளு
மேலான பழத்தினுட சாறதனால் மைந்தா. (32)

சாரமுள்ள பழச்சாற்றால் மையதுபோ லாட்டிச்
சங்கையுடன் தான்வழித்துப் பாண்டமதி லிட்டுக்
காரமுள்ள பாண்டமதை ரவிமுகத்தில் வைத்தால்
கண்மூடி விழிக்குமுன்னே கசிந்துமிக வூறும்
ஈரமுள்ள பாண்டத்திற் கெங்கைமிக வூறி
இருக்குமடா அந்தமுதம் குப்பிதனி லடைத்துப்
பாரமுள்ள கெங்கையென்று பதனமதாய் வைத்துப்
பார்க்கவே அதனில்வெகு விநோதமய மாமே. (33)

ஆமப்பா விநோதமது ஏதுவகை என்றால்
அடங்காத சரக்குகளை அடக்குமிந்த நீர்தான்
நாமப்பா சொல்லுகிறோம் எச்சரக்கா னாலும்
நன்றாகச் செயநீரிற் சுருக்குமிகத் தாக்கிச்
சாமப்பா புடம்போடு சிவயோகப் படிக்குத்
தயவாக உருகியொரு மணியாக நிற்கும்
தாமப்பா அந்தமணி பற்பமது வாகத்
தன்மையுட னின்னமொரு செயநீரு கேளே. (34)

பஸ்பச்செயநீர்.

கேளப்பா இரும்பதனாற் பாத்திரமுண் டாக்கிக்
கிருபையுடன் பாத்திரத்தில் மருந்துவகை கேளு
ஆளப்பா பிரிதிவியு மக்கினியா காசம்
அருளான நவச்சாரஞ் சூடனுடன் துருசு
மாளப்பா ஆட்டுவது சம்பழத்தின் சாற்றால்
மகத்தான கல்வமதி லிருமூன்று சாக்கும்
கோளப்பா வாறுது மையதுபோ லாட்டிக்
குணமாக வேவழித்து வட்டதுபோற் பண்ணே. (35)

பண்ணியதோர் வட்டதனை அயப்பாண்டந் தனிலே
பக்குவமாய்த் தான்போட்டு ரவிதனிலே வைத்தால்
புண்ணியனே உப்பதுவுங் கசிந்துமிக வூறி
பூரணமாய் நிற்குமடா தெளிவான சலந்தான்
வன்னிநிற மானதொரு செயநீரு தன்னை
மார்க்கமுடன் முன்கட்டு மணிதனக்கு மைந்தா
தன்னிமையாய்ச் சுருக்கிடவே மலர்ந்துமிக நீறும்
சாதகமாய் நீறியது பற்பமது வாச்சே. (36)

செந்தூரசெயநீர்.

ஆச்சப்பா பற்பமது செந்தூர மாக
அருளான கேசரிவி நோதவகை கேளு
பேச்சப்பா பேசாத மண்பாண்ட மீதிற்
பேணியே தான்வைக்கும் மருந்துவகை கேளு
நீச்சப்பா உப்புடனே அஞ்சுடனே அஞ்சும்
நிசமான சரக்கதுவும் கூட்டிமிக நன்றாய்ப்
பாச்சப்பா கல்வமதிற் பழச்சாறு விட்டுப்
பண்பாக மையதுபோ லாட்டிமிக வழியே. (37)

வழித்ததொரு மருந்ததனை மண்பாண்டத் துள்ளே
மார்க்கமுடன் தானிட்டு மதிதனிலே வைத்தால்
அழுக்கமுள்ள செயநீரா மந்தநீ ரதனில்
அன்பான வீரமுடன் பூரமது ரெண்டும்
செழித்தமன துறுதியினாற் பொடிசெய்து போட்டுச்
செம்மையுடன் வைத்திருக்கச் செயநீரின் பெருமை
வெழுத்ததொரு பற்பமதிற் பத்துக்கொண் டீய்ந்து
மேன்மைபெற ரவியில்வைக்கச் செந்தூர மாச்சே. (38)

ஆச்சப்பா செந்தூரம் பதனமதா யெடுத்து
அன்பாக வெள்ளிசெம்புத் தகடதிலே பூசிப்
பாச்சப்பா ஓட்டில்வைத்துச் சற்குருவைத் தொழுது
பக்குவமாய்ப் புடம்போட்டு எடுத்துமிகப் பாரு
பேச்சப்பா யென்னசொல்வேன் அத்தகடு பழுத்துப்
பெலமான தங்கமதுக் கதிகமதாய்க் காணும்
மூச்சப்பா ஓடாது சுழினையிடம் பாரு
முத்தியுள்ள விநோதமதை முன்னிலையாய்ப் பாரே. (39)

முன்னிலையாய் நின்றதொரு கேசரியி னோதம்
முத்தியுள்ள விநோதமதை மூடரிடம் நீயும்
தன்னிலையா யிக்கருவைப் பகராதே மைந்தா
தாரணியோ ரறிந்ததனாற் சராசரங்க ளில்லை
புண்ணியர்க ளிந்நூலைப் பதனமதாய் வைத்துப்
பொறுமையுள்ள சீஷருக்குப் புத்திமிகச் சொல்லிக்
கண்ணிமைபோ லிந்நூலைப் பதனமதாய்க் காரு
கருணையுள்ள சீஷருக்கு உபதேசம் வையே. (40)

சீஷருக்கு உபதேசம்.

வையப்பா உபதேசம் யாருக்கென்றால்
அமைந்தோனை யெச்சாதி யானாலென்ன
மெய்யப்பா தவறாத சீஷன்வேணும்
மேன்மையுள்ள புத்தியதா யிருக்கவேணும்
செய்யப்பா வாக்குமதி மனதுறுதிகண்டு
திடசித்த முள்ளவனைச் சேர்த்துக்கொண்டு
நெய்யப்பா தன்னுனீ ராடச்சொல்லி
நேசமுட னருகிருத்தி விபூதிசாற்றே.

சாற்றுவது உத்தமமாய் விபூதிசாத்திச்
சகலகர்ம பாபவிமோ சனமென்றிட்டுப்
போத்தியிகப் புருவமதிற் பொட்டுமிட்டுப்
பூரணமாய் மலர்தூவி அர்ச்சனைகள்செய்து
பாத்திபனை தீபமொடு தூபங்காட்டிப்
பக்குவமாய்க் குருருக்ஷக் காதிற்செப்பிக்
கூத்துமனூர் தான்விலக ஆகாரஞ்சொல்லிக்
குடியிருப்புத் திறமாக உகாரஞ்சொல்லே. (42)

சொல்லடா உடலுயிர்க்கா தாரமான
அவ்வுமுன் மகாரமென்ற மவுனஞ்சொல்லு
உல்லடா ஓங்காரந் தொனிக்குஞ்சொல்லு
உருவமல்ல அருபமல்ல உற்றுப்பாரு
வெல்லடா மூன்றினுட விபரஞ்சொல்லு
மேன்மையுடன் துலிக்குங் காலஞ்சொல்லு
வில்லடா வாசியுட விபரஞ்சொல்லு
வெய்யவனும் அம்புலியும் விளங்கவோதே. (43)

ஓதியதோ ருண்மையெல்லா நன்றாய்ச்சொல்லு
உண்மையுடன் போஜனத்தாம் பூலம்நல்கிப்
பேதியா தொருமனதாய் நினைவாய்நில்லு
பெரி[illegible]டம்பண்ணு
சாதியெழு வகையுங்க[illegible]
சமயமென்ற சமய[illegible]ர்ந்துநில்லு
சோதியதை ஞானக்க ளிலையக்[illegible]
சுகமான நூலெடுத்து மவுனமாய்ப்பாரே. (44)

நிஷ்டை.

மவுனமென்ற குருபதத்தை யேதோவென்று
மயங்காதே மைந்தனே சொல்லக்கேளு
கெவுனமென்ற கேசரத்தில் மனதைநாட்டிக்
கெதிபெறவே கண்டத்தி லங்கென்றாலு
தவனமென்ற புருவநடுப் புடதியோரம்
சதானந்தப் பிரமவொளி தன்னுட்பாரு
கவனமுடன் பார்ப்பதுதான் மூலங்கொண்டு
கதிரான சுடரொளியைக் கண்ணுற்பாரே. (45)

பார்க்கையிலே பரமவொளி தன்னிலேதான்
பகலவன்போல் ரவிவட்டங் கண்ணிற்காணும்
ஏர்க்கையுள்ள வட்டமடா யென்னசொல்வேன்
இரவிதனில் மதியொடுங்கும் யேகரூபம்
சேர்க்கையுள்ள ரூபமடா மவுனபீடம்
சிவசிவா பரமபத மானபீடம்
தீர்க்கமுள்ள சிவகளைசென் றிருக்கும்பீடம்
சிவாயகுரு சிவயோகத் திறந்தான்பாரே. (46)

வாசியோகம்.

திறமாகப் பார்ப்பதற்கு வாசியோகம்
தீர்க்கமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு
உரமான பீடமடா நந்திபீடம்
ஓங்கார மானதொரு பீடந்தன்னிற்
பரமான அகாரமுடன் உகாரம்ரெண்டும்
பத்திகொண்டு ஓங்காரந் தன்னில்நாட்ட
வரமாமூ லத்தினிலக் கினிகொண்டேறி
மகத்தான ஓமகுண்ட மென்றும்பேரே. (47)

மயமான ஓமமவளர் குண்டந்தன்னிற்
        பிரியமுள்ள சமித்துமா குதிகள்செய்தால்
நேரான அக்கினியை யென்னசொல்வேன்
        நிலையாத அக்கினியிற் சென்றுகொண்டு
வாராரே சகத்தாற்பூ ரகமேசெய்து
        மார்க்கமுடன் கும்பகத்தில் நின்றாயானால்
மாறாத மவிவட்டந் தன்னின்மேலேதான்
        மகத்தான தீபவொளி காணலாமே. (48)

காணவே தீபவொளி கண்ணிற்கண்டால்
        கைலாச மோக்ஷகெதி பதவியுண்டாம்
பேணவே அஷ்டகர்மஞ் சித்தியாகும்
        பிலமான வாசியதுக் குயிருண்டாகும்
பூணவே கற்பசித்தி காயசித்தி
        பொருளான பொருள்விளக்கும் வாதசித்தி
தோணவே தொட்டதெல்லாஞ் சித்தியாகும்
        சுத்தமுள்ள கேசரிவி நோதம்பாரே. (49)

பாரப்பா ஞானகே சரிவிநோதம்
        பருவமுடன் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
காரப்பா செம்பதுவும் யிரும்புபோலாம்
        கருமானஞ் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு.
வீரப்பா கொண்டலிங்கந் தாருகிறேடு
        விதமான கெந்தியொடு தாரங்கூட்டிச்
சேரப்பா ரவிமதியோ டறுசரக்குங்கூட்டிச்
        செம்மையுள்ள சரக்குநிகர் பிருதிவியைக்கூட்டே. (50)

கூட்டியே தான்பொடித்துப் பழச்சாறுவிட்டுக்
        குழுமவே ஈராறு சாமந்தானும்
ஆட்டியே வழித்துருட்டி வட்டுப்பண்ணி
        அப்பனே புடம்போடு சிவயோகப்படிக்கு
பூட்டியே புடமாறி எடுத்துக்கொண்டு
        புகழான மருந்திடைக்குச் செம்பைவாங்கி
நாட்டியே குகைதனிலே உருக்கியந்த
        நலமான மருந்தையதிற் சேர்த்துக்கொள்ளே. (51)

கொள்ளப்பா செம்போடே மருந்துசென்று
குளுகுளென்று உருகும்போ தெடுத்தாயேயும்
மெள்ளப்பா தரைதனிலே சாய்த்துப்போடு
மேன்மைபெற ஆறினபின் னெடுத்துப்பாரு
விள்ளக்கேள் கரிபோலே கருத்துப்போகும்
மேன்மையுடன் தானடிக்க நொருங்கிப்போகும்
அள்ளக்கே ளதையெடுத்துப் பதனம்பண்ணி
அதுக்குமிகர் தங்கத்தைச் சேர்த்துக்கொள்ளே. (52)

சேர்த்துமிகத் தானெடுத்து வைத்துக்கொண்டு
சிவமான வெள்ளியிலே பத்துக்கொன்று
காத்துமிகத் தான்கொடுத்து உருக்கிப்பாரு
கருவான வெள்ளியது சிவந்துபோரும்
மாத்துமிகந் தானேறிப் பழுத்துப்போகும்
மார்க்கமுள்ள தங்கமதை வைத்துக்கொண்டு
பூத்தமலர் வாசனைபோற் சிவயோகத்திற்
பொன்னொளிபோற் கண்ணொளியைப் பூட்டிப்பாரே. (53)

அயச்செம்பு.

பூட்டிப்பா ரின்னமோர் கேசரிவிநோதம்
புகழ்ஞான கேசரிதன் னருளினாலே
நாட்டிப்பா ரிரும்புஞ்செம் பதுபோலாக
நயமாகச் சொல்லுகிறேன் நன்றாய்க்கேளு
வாட்டமொன்றும் வேண்டாங்காண் லிங்கத்தோடு
வளமான அரிதாரங் காரங்கூட்டித்
தோட்டமுடன் மனோசிலையும் அப்புஞ்சேர்த்துச்
சேர்த்தொன்றாய்க் கல்வத்திற் பொடியாய்ப்பண்ணே. (54)

பொடியாக்கிச் சாக்கினிலே பழச்சாறுவிட்டுப்
பூட்டிநன்று யரைத்திடுவாய் மைபோல்மைந்தா
நெடிதாக அரைத்துருட்டி வட்டதுபோற்பண்ணி
நேர்மையுடன் புடம்போடு சிவயோகப்படிக்கு
வடிவாகப் புடமாறி எடுத்ததனைமைந்தா
மார்க்கமுட னிதற்குமிகர் அயப்பொடியுஞ்சேர்த்து
கெடியாகப் பொடிபண்ணிக் குகைதனிலேசெலுத்திக்
கிருபையுடன் குகையமூக ஊதுதானே. (55)

ஊதிநன்று யுருக்கியதை யெடுத்துமைந்தா
உத்தமனே தரையில்விடு தண்ணீர்போலாம்
ஆதியென்ற குருபரனைத் தொழுதுபோற்றி
அன்பாகத் தானெடுத்துப் பாருபாரு
வாதிகள்தான் யனதுமெத்த செம்பேயாகும்
மைந்தனே அயச்செம்பை பதனம்பண்ணி
நீதியுட னிதற்குநிகர் தங்கம்சேர்த்து
நேர்மையுட னுருக்கியொரு மணியாய்வாங்கே. (56)

வாங்கியந்த மணியதனை வைத்துக்கொண்டு
மார்க்கமுடன் கேசரியை மனதில்நோக்கிப்
பாங்குபெற வெள்ளியைத்தா னுருக்கிநல்ல
பழுப்பான செம்பதனிற் பத்துக்கொன்று
ஆங்கதிகொண் டேயதனை யுருக்கிப்பாரு
அன்பான பொன்னொளியை யென்னசொல்வேன்
பூங்கமல மாதுவய தீரெட்டாகும்
பூரணமாய்ச் சிவயோக தவத்தில்நில்லே. (57)

ஞானம்.

தவமான தவந்தனக்கு உறுதிநிஷ்டை
தன்மையுள்ள நிஷ்டைதனைக் குறுதிகேளு
சிவமான சிவதவமே யல்லாதுண்டோ
சிவசிவா பூரணத்திற் சேர்ந்துநில்லு
நவமான நவக்கிரகந் தன்னிற்பாரு
நலமான அனுக்கிரகந் தனிலேநில்லு
அவமான புத்திகளை அகலத்தள்ளி
அருளான கேசரிவி நோதம்பாரே. (58)

சாஸ்திரவகை.

பாரப்பா கேசரிவி னோதம்நூறு
பத்திசிவ யோகமிரு நூறுபாரு
தேரப்பா மனம்வைத்தா யிரமும்பாரு
சிவசிவா பலதிரட்டைந் நூறும்பாரு
நேரப்பா வயித்தியமெண் பதுவும்பாரு
நேர்மையுட னைம்பதுமுப் பதுவும்பாரு
சீரப்பா மெசசியமும் பதினெண்பாடை
செம்மையுடன் பார்த்தவனே சித்தனாமே. (59)

சித்தமென்ற தயாபரிபூ ரணமாய்நின்றால்
தேவாதி தேவனென்ற பேருண்டாகும்
பத்தமில்லாச் சித்தமதா யிருந்தாலென்ன
பலருமயில் மனதுறுதி யானுமென்ன
குற்றம்வருஞ் சடந்தனக்கு மைந்தாமைந்தா
குருவான பெரியோரை யடுத்துக்காரு
மெற்நனமாய்த் திரிவாரை யடுக்கவேண்டாம்
வேதாந்த சாஸ்திரத்தில் விரும்பிநில்லே. (60)

தாளகயியம்.

விரும்பியே பின்னமொரு கேசரிவி நோதம்
மெய்யாகச் சொல்லுகிறோம் விரும்பியதைக் கேளு
அரும்பான அரிதாரம் யியமது வாக
ஆரறிந்து செய்வார்கள் அறியும்வகை சொல்வேன்
கரும்பான ஆகாசப பிருதிவியுங் கூட்டிக்
கணக்காக யிதுக்குநிகர் தாளகமுஞ் சேர்த்துக்
குரும்பான குணம்நிறுத்தி அமுர்தமதா லாட்டிக்
குணமாக வழித்தெடுத்துக் குகைதனிலே வையே. (61)

வையப்பா குகைதனக்குச் சில்லுப்போட்டு
மார்க்கமுடன் மண்சீலை வலுவாய்ச்செய்து
பையப்பா சரக்கினுட நிதானங்கண்டு
பக்குவமாய்ப் புடம்போடு குருவைநோக்கிப்
பொய்யப்பா போகாமற் சரக்குமூன்றும்
பொருந்தியொன்று யுருகியது யியமாகும்
மெய்யப்பா சொல்லுகிறேன் வாதத்துக்கு
விசையான யியமடா தங்கஞ்சேரே. (62)

சேரப்பா தங்கமது உருகும்போது
செம்மையுடன் அந்திடைக்கு யியஞ்சேர்த்துப்
பாரப்பா உருகியது ரெண்டுமொன்றாய்ப்
பக்குவமாய்த் தானிருக்கும் வெள்ளிபோலே
நேரப்பா நின்றகுரு தன்னைப்போற்றி
நீமகனே செம்பதனை உருக்கிக்கொண்டு
வீரப்பா கொண்டதொரு தாரந்தன்னை
விபரமுடன் நீபத்துக் கொன்றுதாக்கே. (63)

தாக்கியொன்று புருக்கியதை யெடுத்துப்பாரு
தன்மையுள்ள பசுமையதா யிருக்குந்தங்கம்
பாக்கியமாய் நின்றதொரு தங்கந்தானை
பரப்பிரம சோதித்தா யென்றுபோற்றி
வாக்குநவ ரூபத்தே சரியைநோக்கி
மார்க்கமுடன் காயாதி கற்பங்கொண்டு
போக்குவாந் தானின்ற வாசியோகம்
பூரணமாய் நின்றதொரு வேயோகந்தான்
ஆக்கைதனைக் குறுத்தியெனை அறிந்தேனந்த
ஆதிமங்கும் பராபரத்தி னருளைக்கண்டே. (64)

அருளாய பரஞான யோகிதன் னருளால்
ஆதிபந்தப் பொருளறிந்து அதனின்மனை தாகி
இருளான விருளறிந்து வேசவெளி தன்னில்
இரவிமதி சுழினையெனற மண்டலமூன் றாண்டி
பொருளான தீபமதிற் புக்கியொரு மனதாய்ப்
பூரணமாய் நின்றதொரு மதியமுதங் கொண்டு
குருவான பதிநோக்கித் திரும்பிடும்போ தவனில்
குணமான மனோன்மணியைக் குருவினிடங் கண்டே. (65)

கண்டந்த மனோன்மணியின் கிருபையினால்மைந்தா
காசினியிற் பெரியோர்க்குப் பிள்ளையாகி
தொண்டனென நின்றனடா கோடிகாலம்
சொர்க்கபத மெய்க்கவேதான் துருவஞ்சென்று
நின்றனடா ஞானதே சரியைநோக்கி
நிலைகவருஞ் சித்தனென்றுந் தேவனென்றும்
கொண்டனடா குருஞான தேசிகன்றன் னருளால்
கோதில்லாக் கேசரிவி நோதமனு பாரே. (66)

இரசமணி.

பாரப்பா இன்னமொரு கேசரிவி நோதம்
பரிவான ஆதிபந்தம் சத்திசிவ மாச்சு
நேரப்பா சத்திசிவம் மண்தண்ணீ ராச்சு
நிசமான மண்தண்ணீர் காரசார முமாம்
ஆரப்பா அறிவார்கள் காரசா ரத்தை
அப்பனே சொல்லுகிறேன் விந்துநாதம்
சேரப்பா நாதமுடன் விந்துவது சேர்க்கச்
செம்மையுடன் கட்டியது மணிபோலு மாச்சே. (67)

நீாகரச பஸ்பம்.

சித்திக்க இன்னமொரு வினோதமது கேளு
சிவசிவா நாகரச மிரண்டுங் கூட்டி
முத்திக்கு மோக்ஷமெனப் பிருதிவிதன் னோடே
முன்பின்னாய்ப் போகாம லிடைசரியாய்ச் சேர்த்து
மத்திக்கும் போதளவில் மாலினுட நாதம்
மறவாதே தாருசடனே ஆநாசங் கூட்டி
சத்திக்குத் தனதான கல்வமதி லிட்டுத்
தன்னமுத பானமதாற் றாலரைத்துக் கொள்ளே. (68)

கொள்ளவே குகைதனிலே அரைத்தமருந் திட்டு
குவியவே வாய்மூடி மண்சீலை செய்து
உள்ளமே தான்குளிரக் குருபூசை செய்து
உத்தமனே நிறையறிந்து புடமதனைப் போடு
வள்ளலே புடமாறித் தானெடுத்துப் பாரு
மார்க்கமுடன் திரண்டுருகி மணியதுபோ லிருக்கும்
துள்ளவே மணிக்குநிகர் தங்கமது சேர்த்துச்
சுகமாகக் குகையிலிட்டு உருக்கவொரு மணியாம்
மெள்ளவே அம்மணியைக் கல்வமதி லிட்டு
மேன்மைபெறத் தானுடைத்துப்பொடியதுபோற்பண்ணே.

பண்ணியதோர் பொடிக்கிஅரை காரங்கூட்டிப்
பக்குவமாய்த் தானரைப்பாய் வாய்நீர்விட்டுப்
புண்ணியனே தானரைப்பாய் மெழுகுபோலே
புத்தியுடன் தானரைத்து வழித்துருட்டித்
தன்னிமையாய் வில்லைதட்டி ரவியிற்போடு
தன்மையுடன் காய்ந்தபின்பு யெடுத்துப்பாரு
வன்னியுட மகிமையினாற் காய்ந்ததல்ல
மாசற்ற வெண்மையதாம் பொடியாய்ப்பண்ணே (70)

பொடியான பொடியதுவும் லேசாய்ப்பண்ணி
புத்தியுடன் பரணிதனி லடைத்துக்கொண்டு
படியான செம்புவெள்ளி தகடாய்த்தட்டிப்
பணவிடைதா னெடுத்திடுவாய் பாலாமுன்பொடியில்
வடிவான மயேஸ்பரிக்குப் பூசைபண்ணி
வாய்நீராற் றகட்டின்மேற் பூசிக்கொண்டு
கெடியான ஓட்டில்வைத்துப் புடமேபோடு
கேள்வியென்ன தகடதுவும் பழுத்துப்போமே. (71)

யழுக்குமடா வெள்ளியிலே பத்துமாத்து
பாலகனே செம்பிலே ஆறுமாத்து
தழுக்கறவே குடவணிலே யேழுமாத்து
தான்பழுக்குந் தன்மனது சாந்தமானால்
அழுக்கறவே தேகசுத்தி பண்ணிக்கொண்டு
அப்பனே காயாதி கற்பங்கொள்ளு
வழுக்கலென்ற வழுக்கல்லது விலகிற்றானால்
மார்க்கமுடன் கால்விசையாய் நடக்கலாமே. (72)

இரசகுளிகை.

நடப்பதற்கு இன்னமொரு கேசரிவினோதம்
நாடெல்லாஞ் சென்றுவரக் குளிகை சொல்வேன்
கடப்பதற்குத் தான்குதிக்கும் ரசமதனை வாங்கி
கருவான பழச்சாற்றில் ரவிபீசஞ் சேர்த்துத்
திடப்படவே கரைத்தந்த ரசமதனை விட்டுச்
செம்மையுட னடுப்பேற்றித் திருவருளைப் போற்றிப்
படபடத்து அக்கினியை யெரியாமற் சீராய்
பக்குவமா யிருசாம மெரித்துமிக வாங்கே; (73)

வாங்கியந்த ரசமதுக்குச் சரியாய்ப் பூவை
வரிசையுடன் பொடித்துவைத்துக் கல்வமதி விட்டுப்
பாங்குபெறப் பழச்சாற்றால் மையதுபோ லாட்டிப்
பக்குவமா யாட்டுவது ரசமதனில் விட்டு
தாக்கிமிக அரைத்திடவே பூவுடனே ரசமும்
தான்சேர்ந்து கட்டியது வாலையது வாகும்
திங்கில்லா வாலைதனை யுருட்டியொரு மணியாய்ச்
செம்மையுடன் தானுருட்டி அம்மணிக்குக் கேளே. (74)

கேளடா அம்மணிக்கு நாவிலொன்று காரம்
கெவுனமுடன் தானரைத்து மணிதனுக்குப் பூசி
வாளடா காயவைத்து மணலரைத்துப் பூசி
மார்க்கமுடன் மண்சீலை வரிசையுடன் சுத்தி
கோளடா வாறுமல் மனோமணியைப் பூசி
கூர்மையுடன் நிறைபறிந்து புடமதனைப் போடு
வேளடா எரித்தநெற்றிக் கண்ணி னாலே
விசையடங்கி யுருகியது மணியதுபோ லாமே. (75)

ஆமப்பா புடமாரி மணியதனை யெடுத்து
அம்மணிக்குத் தமரதுவும் அமைத்துமிகக் கொண்டு
நாமப்பா சொல்லுகிறோம் மணியதனைப் பூசி
நன்மையுள்ள மனோமணியென் றிதனைமிக வெடுத்து
வாமப்பால் கொண்டந்த மணியதனை வாயில்
வணக்கமுடன் தானடக்கிச் சிவயோகத் திருந்தால்
காமப்பால் கசியாது கருணையுடன் சேர்ந்து
காலான வாசியது கடவாது மெய்யே. (76)

மெய்யான வாசியது அசையாமல் நின்று
மேலான பரைஞான கேசரிதன் னருளால்
அய்யனே ஆக்கையது யிருகிவலு வாகி
அசையாது யில்லமது அடிப்படைதான் விலத்தால்
துய்யனே மனோமணியும் மாளிகையில் நின்று
துலக்கிவிப்பாள் தூரதிஷ்டி காரியங்க ளெல்லாம்
கையப்பா கண்டதுவுங் காட்சிமய மாகும்
கருணையுடன் சஞ்சார சமாதிதனைப் பாரே. (77)

சஞ்சாரசமாதி.

பாரப்பா சஞ்சார சமாதியுட னேர்மை
பலகாலுங் கேசரத்தில் மனதைமிக நாட்டிக்
காரப்பா கருணைவிழிக் கண்ணாலே நீயும்
கற்பூர மானதொரு தீபவொளி தன்னை
நேரப்பா யிருக்கையிலும் நடக்கையிலும் மைந்தா
நேர்மையுள்ள அறிவதனை யதனில்மிகத் தாக்கிச்
சேரப்பா பரைஞான கேசரிதன் னருளாற்
சிவசிவா மவுனமது சஞ்சார மாமே (78)

ஆமப்பா சஞ்சார சமாதிதனில் நிற்கில்
ஆச்சரியம் பேசாதே நல்லோரைப் பாரு
தாமப்பா மனதுருமை யானவர்க ளிடமாய்த்
தன்மையுடன் பசிதாகஞ் சாந்திமிகச் செய்து
வாமப்பால் மதியான அமுதமதை நீயும்
மகத்தான பரைஞான கேசரிதன் னருளால்
ஆமப்பா அகலாமற் சிவசத்தி பூசை

சித்தான கெவுனமுத லஷ்டமா சித்தும்
சிந்திக்கில் முன்னின்று பரைஞான தேசி
உத்தமமா யுன்னிடத்தி லகலாமல் நின்று
உண்மையென்ற பொருளையெல்லா முறுதியாப் பார்த்துப்
பற்றுதல்போல் நன்றாகக் கருணைமிகச் செய்வாள்
பாலமுதம் பசிதீர ஊட்டிமிக வைப்பாள்
மத்துமினி யென்னதவம் வேண்டுமென நினைத்து
மகத்தான பரைஞான கேசரியை நோக்கே. (80)

நோக்குவதற் கின்னமொரு கேசரிவி நோதம்
நோயான நோய்களெல்லாம் நொருங்கிமிகப் போகத்
தீர்க்கமுள்ள தேகமது சித்திமய மாகச்
சிவசிவா வாசியது தீர்க்கமுடன் நிற்க
மார்க்கமுடன் பரைஞான கேசரியை நோக்க
மகத்தான குருவருளாந் தீபமதைக் காண
நாக்குநுனி அமுதமது பூரணத்திற் செல்ல
நாதந்தக் கற்பமது நன்மைதரும் பாரே. (81)

பாரப்பா நாதாந்தப் பயோதரிதன் மூலம்
பரமான் பராபரத்தாய் பதிவான மூலம்
நேரப்பா நின்றதிருக் கமலமதின் மூலம்
நேர்மையுள்ள மும்மூலங் குருவருளாற் கண்டு
சேரப்பா கல்வமதி லொரிமையாய்க் கூட்டிச்
சிவமான மூலமதை கிட்டிமிக ஆட்டிக்
காரப்பா கன்னிவிடு மையதுபோ லாட்டிக்
கருணையுடன் வழித்துருட்டி வட்டுபோற்பண்ணே: 82)

பண்ணியதோர் வட்டதனை ரவிதனிலே போடு
பதமாக அரைவாசி காய்ந்ததின்மேல் மைந்தா
புண்ணியனே மண்சீலை யொபந்துதாஞ் செய்து
புடம்போட நிதானமஃ புகலுவதைக் கேளு
தன்னிமையாய்ச் சொல்லுகிறேன் பலந்தனக்கு மைந்தா
தயவாக ஒருமுழுத்தான் புடமதுவே போதும்
வன்னியென்ற அனல்மூட்டிப் புடமாறிப் பார்த்தால்
மாசற்ற நீரதுபோற் பற்பமது வாமே. (83)

ஆமென்ற பற்பமதைப் பரணிதனி லடைத்து
அளவாகக் காலைசந்தி பணவிடைதான் கொண்டால்
நாமென்ற வாதபித்த சிலேற்பனத்தி னாலே
நன்றாகத் தான்வளர்ந்த வியாதிகள்தா னெல்லாம்
போமென்று சொன்னவுடன் வியாதிகள்தான் தீரும்
பூரணமாய் நிறைந்தொரு பற்பமது வாலே
தாமென்று சொன்னபரை ஞானகே சரியால்
சச்சிதா னந்தமென்ற அறிவுதனில் நிலலே. (84)

நில்லென்ற நிலையறிந்த சித்தாதி தானும்
நிச்சயமாய்ப் பரைஞான கேசரியைப் பார்த்துச்
சொல்லொன்றுந் தவறாத மூலமது நாளும்
தொடுகுறியாற் றானறிந்து துருவமதில் நின்று
வில்லென்ற விசைபோல அம்மூலந் தன்னை
மேலான பற்பமதை விரும்பிமிக வுண்டு
கல்லென்ற தேகவச்ர காயமது வாகி
கற்பூர தீபமெனக் கருணைபெற நின்றால்
கொல்லென்று வந்தவொரு கூற்றுவனார் தானும்
குருவான பதிநோக்கிக் குணமாகு வாரே. (85)

வியாதிகளுக்கனுப்பானம்.

வாரப்பா பற்பமதிற் பணவிடைதான் நீயும்
மகத்தான தேனதினில் மருவிமிகக் கொண்டால்
வீரப்பா கொண்டவொரு குன்மமொடு சயமும்
மேலான மகோதரமும் பித்தப்பாண் டுடனே
நேரப்பா தீர்ந்துவிடுங் கேசரிதன் னருளால்
நிசமாக முலைப்பாலிற் பணவிடைதான் கொண்டால்
மாரப்பா அடைத்துவிடு மூர்ச்சைவாய் வதுவும்
மகத்தான தலைக்குத்து சன்னிகள்போய் விடுமே. (86)

விடுமென்று திரிகடுகு சூரணமே செய்து
மேலான தேனவிட்டுப் பற்பமதிற் கொண்டால்
கெடுமந்த சீதம்சுர சமசுரமுடனே தோசம்
கேள்ள குளிர்சுரமுங் கெதிகெட் டோடும்
சுடுமந்த மூலமுடன் பவுந்திரங்க ளெல்லாம்
சுளிவாகத் தீருதற்குச் சொல்லுகிறேன் கேளு
வடிவான திரிகடுகிற் பற்பமது கொள்ள
மார்க்கமுட னேதீரும் மண்டலத்திற் றானே. (87)

தானான பரைஞான கேசரிதன் னருளால்
தயவான பற்பமதிற் பணவிடைதா னெடுத்து
தேனான அமுதமதில் மண்டலமே கொண்டால்
சிவசிவா மந்தார காசமொடு யிருமல்
வீணான யீளையொடு யிருமல்குட்டங் கிரந்தி
மெய்யான பாரித்தியமும் விட்டுவிடு மையா
கோனான குருவருளாச் சதாநித்தம் போற்றிக்
குருவான பரைஞான கேசரியைக் காரே. (88)

## நேத்திரசிந்தாமணி.

காரப்பா வாக்குறுதி மனதுறுதி யாலே
கைகண்ட கேசரியின் விநோதமது கேளு
நோப்பா நேத்திரத்தில் வரும்நோய்க் கெல்லாம்
நிச்சயமாய்த் தீர்ப்பதற்கு மருந்துவகை கேளு
பேரப்பா பெரிதான அண்டமொடு சீனம்
பீத்ரோ கணியுடனே தூருசுமிகச் சேர்த்துப்
பாரப்பா நாற்சாரக்குங் கல்வமதி விட்டுப்
பக்குவமோ ரிடைகலசப் பாலைவிட்டு ஆட்டே. (89)

ஆட்டுவது அதன்பிறகு பழத்தினுட சாறு
அப்பனே பழமாறுற் கண்டங்கத் திரியாம்
தீட்டுவது அப்பழத்தின் சாறதனு லாட்டித்
திரமாக மையதுபோற் சேர்த்துமிகக் கொண்டு
நாட்டியே கயிறதுபோற் றிரட்டிமிக வைத்து
நன்றாக நிழலுமூர்த்தி நன்மையுட னெடுத்துக்
காட்டியே மூலைப்பாலிற் கண்ணதனிற் போட
கரையாத சவ்வுடனே காசமது போமே. (90)

போகுமே புகைச்சலொடு நீர்ப்பாய்ச்சல் சிகப்பு
புழுவெட்டு அமரமொடு பொல்லாத குந்தம்
வாகுடைய மாலைக்கண் நீகுருதி யோட்டம்
வானடைப்புச் சதையடைப்பும் மகத்தான நெரிசல்
ஏகுமே யிருந்திடப்பிட் டப்பாலே மைந்தா
என்னசொல்வேன் நேத்திரத்தின் வியாதிகள்தா னோடும்
பாடுடைய மாத்திரைதன் போதனைக் கேளு
பரிவான நேத்திரசிந் தாமணியு மாமே. (91)

மணியான பரைஞான கேசரிவி நோதம்
மார்க்கமுடன் தூறதுவும் வரிசையுடன் பார்த்தால்
கனியான நெல்லியுட கனியதுபோல் மைந்தா
காயாதி கற்பமுந்தல் யோகாதி சித்தி
பிணியான பலபிணியும் அணுகாது மைந்தா
பிலமான வாதமது நிலையாக நிற்கும்
துணிவாக மனதுபரி பூரணமே யாகும்
சுயசோதி யானதொரு தீபமதிற் றானே. (92)

தானவனாய் நின்றதொரு பூரணந்தான் மைந்தா
தன்மையுள்ள பூரணத்தை யார்தான் காண்பார்
கோனவனாய் நின்றகுரு தன்னைக்கண்ட
குருபுத்ர னானதொரு சிஷன் றானும்
நானவனா மென்றெண்ணிப் பூரணத்தைக்காப்பான்
நன்மையுடன் குருபதத்தில் நயந்தேறிநிற்பான்
ஆனவனும் அவன்றானும் நாற்பதமுங்கண்டு
அன்பான லோககுரு ஆவான்பாரே. (03)

பாரப்பா பிருதிவியை யறியவேணும்
பண்பான அப்பினிடஞ் சேரவேணும்
கூரப்பா தேய்வுதன்னைக் காணவேணுங்
குறிப்பாக வாய்வுதனைக் கொள்ளவேணும்
நேரப்பா யிதுநாலு மறிந்துகொண்டு
நேர்மையுட னாகாசம் புக்கவேணும்
பேரப்பா ஆகாசந் தன்னில்நின்று
பிலமான பிருதிவியைப் பேணிப்பாரே. (94)

பார்த்ததினா லென்னவரு மையாஐயா
பரமான சற்குருவைப் பணிந்துபோற்றி
காத்ததினா லைந்தினுட விபரந்தன்னைக்
காட்டுவா ரதன்பிறகு கருணைவைத்து
சேர்த்ததற்குச் சேர்மானத் திரமுஞ்சொல்லித்
தெவிட்டாக மதியமுதச் செயநீர்காட்டி
வார்த்தனுக்கு வகைவிபரம் நன்றாய்ச்சொல்லி
மகத்தான குருவாக வழிசொல்வாரே.

சொல்லுவார் சிவஞான போதந்தன்னைச்
சொல்லற்ற மவுனமதைத் துலக்கிவைப்பார்
வெல்லுவார் வேதாந்தசித் தாந்தம்ரெண்டும்
விபரமுட னதன்பயனும் விளங்கிக்கொண்டு
தள்ளுவார் சத்துருமித் துருவிரண்டு
சாங்கமாய்த் தானகற்றித் தன்மைபூண்டு
கொல்லுவார் கருவிகர ணாதிதன்னைக்
கொண்டபின்பு சீஷனென்று குறிசொல்வாரே.

குறிகாட்டி அக்குறிக்கு மேலேநின்ற
குருவான பதிகாட்டி அப்பதிக்குமேலே
நெறியான பொருள்காட்டி யப்பொருளுக்கடுக்க
நின்றிலங்குந் தீபவொளி நிசமாய்க்காட்டி
பரியான பரஞ்சோதி யிதுதானென்றும்
பரப்பிர்ம மானதொரு வஸ்துவென்றும்
அரியான முதலெழுத்துக் காதியென்றும்
அரகரா அதன்பிறகு தானென்றாரே.

தானென்ற உலகமெல்லாந் தானேதானாய்
சகலகலைக் கியானமெல்லாந் தானேதானாய்
தேனென்ற மதியமுதந் தானேதானாய்
திறமான கற்பதுந் தானேதானாய்
நானென்ற அனுபவமுந் தானேதானாய்
நலமான வாசிசிவ யோகந்தானாய்
கோனென்ற பரைஞான கேசரியுந்தானாய்
ஆரியான ஜீவன்முதற் செய்கைதானே.

தானேதான் தானவனா யிருந்துகொண்டு
தன்மையுள்ள பரைஞான கேசரியைநோக்கித்
தேனேதான் அதிலும்வெகு ருசியாய்நின்ற
திருவான கேசரியின் விநோதம்நூறும்
பூணேதான் மனந்தனிலே மவுனமாகப்
பூண்டுகொண்டு அஷ்டமா சித்தும்பார்க்க
வீணேதான் போகாதே விநோதம்பார்க்க
மெய்ஞ்ஞான குருதீபஞ் சரணமுற்றே.

மூற்றான பரைஞான கேசரிவி நோதம்
முழுதுமிதை மவுனமதாய் மனதுட் கொண்டு
சித்தான சித்துவிளை யாடும் மைந்தா
சிவயோகப் புனிதமதிற் சேர்ந்து நில்லு
வித்தாரந் தான்பேசித் திரிவா ரோடே
வீரியங்கள் பேசாதே விண்ணை நோக்கிக்
கர்த்தாவே கெதியெனவே கமலம் நோக்கிக்
கற்பூர தீபமதின் கருத்தான் முற்றே. (100)

இராமதேவர் பரைஞான கேசரி ௱,

முற்றிற்று.





மதுரை வடக்குவாசல் யானைக்கல்தெருவிலிருக்கும் வித்துவான்
மூ. குழந்தைவேலுப்பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதி
யின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

104 - வது:

ஈஸ்வரன் திருவாய்மலர்ந்தருளிய

# வாக்கிய சூத்திரம் ௲௩.



ஆதியா யந்தமா யில்லா தவன்றன்னைச்
சோதியாய் நின்ற சுடர்ப்பிர காசனை
நீதியாய் நின்ற நிட்கள ரூபனைப்
பூதியாய் நந்தி புகழ்ந்து தொழுதனன். (1)

தொழுதெழு நந்தியைச் சொற்பெற நோக்கிப்
பழுதற நீயெனைப் பணிந்ததெக் காரணம்
முழுதும் உடற்பொரு ளாவியு முன்னருள்
தழுவுறத் தத்துவத் தாதி யருள்செய்வீர். (2)

தத்துவம் வேதஞ் சகல கலைகளும்
அத்துவ மந்திர மாகம சாஸ்திரம்
புத்தியா லுத்தமர் பூதியிற் றோன்றிடும்
சித்தனே நந்தி தெளிந்துகொள் வாயே. (3)

தெளிந்தே னுடல்தனைத் தேர்ந்தே னுயிர்நிலை
கழிந்தே யுடல்விடிற் காயத்துள் நாயகன்
அழிந்தே விடுமோ அறுதியிற் சேருமோ
மொழிந்தே யிதனை முறைசொலு வீரே. (4)

முறைவான நந்தி மூலமுத லாறும்
உறைவான தேவ் ருளமந்தி ரங்களும்
பறைவா னரிது பழமறை யாகும்
அறைதோறும் நின்றது ஐம்பத்தோ ரட்சரம். (5)

அச்சர மாவது ஆதியோ அந்தமோ
அச்சர மாவது அண்டமோ பிண்டமோ
அச்சர மாவது அகமோ புறமோ
அச்சர மேதென் றஃதுரைப் பீரே.

உரைக்கின்றாம் நந்தி யென்றுங்கா லத்திற்
பரப்பேது மில்லை பராபரந் தானும்
விரிப்போ மெனவே விருப்புநே ரத்திற்
றரிப்பாய் மவுனந் தானறி வுற்றே. (7)

உற்பன மான உருப்பட்ட விந்துவாய்
அப்பரி சாக அதற்குயி ரட்சரம்
இப்பரி சாக யிருபேரு மொன்றும்
ஒப்புட னைக்கு முயிருமொன் றாமே. (8)

ஒன்றாய் அச்சரம் ஓமென் றுதிக்கது
கன்றாய் விந்துவும் நாதமுந் தானாய்ப்
பொன்றாம லுந்தியிற் போன்றுங் குதித்தேங்
கன்றாமல் வந்து கண்டத்திற் றாக்குமே. (9)

தாக்கிடு மூலந் தங்கு மிருதயம்
தேக்கிற் கபாலந் திரும்பக்கண் டத்தில்
மூக்குகண் ணைக்கு முழங்கிக் கவுளிதாள்
ஆக்கித் தலந்தொறும் ஆமென்ற அச்சரம். (10)

அச்சர மாவது அயல்குஞ் சரமெனும்
நிச்சய மச்சரம் நின்றது நாலலோ
வச்சிர மான வுடல்நிலைத் தெவற்கும்
வச்ச பொருளொரு மந்திரந் தானே. (11)

மந்திர மாவது மாயப் பொருளது
தந்திர மாகச் சமைக்கி லுருவமாம்
முந்திய தத்துவ மூலத்தி லங்கரன்
வந்திடும் வட்டம் வடிவிதழ் நாலே. (12)

நாலிதழ் தன்னிலும் நால்மூல சத்தி
பால்நிற மொன்று பவளமா மொன்று

சால்முருக் கம்பூச் சார்மயம் பின்பு
மேல்கிற வட்டம் நிச்சயங்கண் டமரே. (13)

கண்ட ரிதழ்நால் கால்வட்ட பீடமாய்
வண்டாம் பூங்குழல் மன்மத யோகிக்
குண்டே அவருக் குயிர்நிலை ஓவெனும்
பண்டேயிவ் வாதி பலிக்குஞ் சத்தியே. (14)

சத்தி கணபதி தன்னில்மா ணிக்கம்
பத்திய ஆகமம் பதிந்த தவர்க்குயிர்
முத்திய மூலாக் கினியினில் மூழ்கிடும்
புத்தனே நந்தி யறிந்துகொள் வாயே. (15)

அறிந்தே னிவணம் ஆதிவே றுண்டோ
செறிந்தே யிதனைத் தெரிசிக்க முத்தியோ
இறந்தே விடும்போ தெழுத்தெங் கொடுங்குமோ
துறந்தே யிதனைத் தொடுத்துரைப் பீரே. (16)

உரைகேள் நந்தி யுரைக்கிலோர் வித்து
கரைகாண்ட தில்லை காய்பிஞ்சு பூவாம்
இரைபாவ மன்றித் தெளிபவர் தேசிகர்
பரைபோ முடலிற் பதிந்த சிவமுயிர். (17)

உயிரு முடலு மொருவர் வகுப்பரோ
பயிரும் நிலம்போற் பார்க்கி லிடையறுத்
தயிருக்குள் வெண்ணெய் தானறி வாரோ
செயல்பா லறிந்து சேர்த்திடு வாரோ. (18)

சேர்த்திடு மென்னிற் சேருநாற் கோணம்
கோர்த்திடு பூறுங் குங்குமம் போலநீர்
மாத்தது வேறிலா மாலெயல் போலவும்
சாத்தும் பசுநிறந் தான்பச்சை பொன்மையே. (19)

பச்சையில் வெண்மை பறந்தொளி யொன்று
நிச்சய மான நிறமாறுஞ் சத்தியம்
உச்சித மறகாற் பீடஞ் சதுரமாய்
இச்சைப் பிரம னிருப்பது தானே.

தானே சரஸ்வதி சத்தி யவனுடன்
ஊனோ டுயிராம் ஓம்நங் சிறீங்கெனும்
மானே றீங்கிலி மம்மெழுத் தாறும்
நானேவவ் வாதி நடத்திடுந் திட்டியே. (21)

திட்டி பிரமனோ சேர்ந்தெழுத் தாறோ
திட்டியைக் கண்டு தெரிசிக்க முத்தியோ
திட்டி பிரமன் சிரங்கழி வாமோ
திட்டியே தென்று தெளிந்துரைப் பீரே. (22)

உரைகேள் நந்தி யொன்றான பூமியைக்
கரைகாண்ப தில்லை காணுந் திதிதிட்டி
நிரைமேயப் பார்போல் நின்றான் சதுர்முகன்
விரைவான சூயவன் விளம்புரு வாமே. (23)

உருவா முடலுக் குயிராறு பீசம்
மருவேறு பூவுக்கு வகுத்தடைப் பாரோ
குருவே யொருவன் குறித்தபொருள் காணில்
அருவா முருவா மதுதிட்டி யலவோ. (24)

திட்டி யறிந்தேன் திதியுமது தானோ
முட்டி யுரைத்த மூல மறியானால்
இட்டமோ தீதோ யேதோ வறிகிலேன்
சிட்டர்பரி பாலர் செய்வது நின்செயல். (25)

செய்வ திதுக்குமேற் சேர்ந்திடும் பத்திதழ்
நொய்ய பிறைபோல் வடிவது நோக்கம்
பொய்வா னுருநிறம் போன்றிடு மாயவன்
மெய்தா னிலட்சுமி மீறிடும் பார்மகள். (26)

பாரா யிதழ்சதம் பகர்ந்திடிற் றிழ்மேல்
நேராய்த் தூண்போல் நிற்பது சத்தியும்
போரா மொளிதான் பீதாம்பர வீட்டுக்
காரார் குழலீர் கருநிறஞ் சொல்வேன். (27)

சொல்வேன் பளிங்கு நிறம்பச்சை பொன்மையும்
சொல்வேனு மின்னொளிக் கொவ்வைப் பழநிறம்

மல்வேல னேறும் மயில்நிறம் போலவும்
புல்வேலம் பூப்போற் புகைநிற மொன்றே. (28)

ஒன்றாலம் போல்நிற மொன்றே முதல்போல்
நன்றா யிதனை நடத்து மெழுத்துக்
குன்றாத டெவ்வாதி பவ்வீ றிதுக்குயிர்
பொன்றாத மவ்வு பொருந்துசவ் வுஞ்சிறீம். (29)

பொருந்து மிதன்மேற் புகலெட் டெழுத்தும்
திருந்த வுரைத்திடிற் றெய்வீக மல்லவோ
மருந்து கொடுப்பவர் போலலோ மாயனும்
விருந்தாளி யானவன் வீடலட் சிப்பனே. (30)

வீடேது வீட்டுக்குள் வேண்டுவ தாரென்னில்
நாடேது நாட்டுக்கு நாயகன் றானது
தேடே னிதனைத் தெளிந்துரைப் பீரேற்
கோடே னினியான் குறிகொள்வேன் கொற்றவா. (31)

கொத்தான பூக்கட்டிக் கொண்டநா ளென்றலோ
கத்தா வொருவன் காரியப் பேர்பல
வித்தார மாகச் சமைக்கி லுருவமாம்
சித்தா யிதனைத் தெளிந்துகொள் வாயே. (32)

கொள்வே னிதற்குமேற் கூறும்வஸ் துண்டோ
விள்வேன் சதுர்முகன் வேதன் விதியிதோ
கள்வ னெனவே கருத்தினிற் றோன்றுமால்
தெள்வே னிதற்குமேற் றெய்வு விருப்பதே. (33)

இருப்பது முக்கோண மீரா றிதழிது
தரிப்பது கன்னி தான்பரா சத்திகள்
விருப்புறு செம்பு வெள்ளி நிறம்போற்
கருப்புவில் மன்மதன் கணைபோலு மஞ்சுபேர். (34)

அஞ்சுபே ரிந்திர தனுநிறம் போலும்
வஞ்சிமே லாறும் கீழாறும் பாதமாய்
பிஞ்சு மெழுத்துக் கவ்வாதி டவ்வீறு
இஞ்சொல்நாற் பீடம் மெரிநிற மாமே. (35)

ஆமே யுருத்திரன் வட்டத்தில் வாழ்பதி
தாமேவு சத்தியும் பார்பதி கெங்கையும்
தீமேவுஞ் சீயுஞ் சிறீயு மிறீயும்
கார்மேகவ் வாதி நடத்தும் சவ்வைவயே. (36)

அசவை யுடனே யாகாரஞ் சேர்ந்திடில்
நிசவைமா சித்தம் நின்றேன் விந்துவும்
மசவையி லோடும் மாக்கல மீதாம்
திசவையி லோடுந் தீவொளி சித்தம். (37)

சித்தங் காணூர் சேருமோங் காரம்
மத்தன் மதன மகாயிருள் குளிகன்
குற்றமோ சொன்னேன் கூற வறிகிலேன்
வித்தகா நந்தி வெட்டுவாள் தானே. (38)

தானேயோர் கம்பஞ் சமைத்தவ னாட்டினால்
மானே யனலன்றி மத்தாற் சுடுவாரோ
யூனே யுடலா முயிராயிப் பீசம்
கோனே யுலகாள் குறும்பர்கோ லாமே. (39)

ஆமோ சங்கார மம்மட்டோ வுள்ளது
போமோ யிதனைத் தெரிசிக்கப் பாவமும்
காமோ கினியைக் கருதுவர் காமுகர்
தாமே யனுபவக் தையல்புல் காமல். (40)

புல்கு மிதுக்குமேற் பொருந்திடு மாருதம்
நல்குமறு கோணம் நாட்டுமீ ரெட்டிதழ்
ஒல்கிய சத்திக ளொன்பது மேழுமாம்
சொல்குறை யிலாநிறம் பதினா றுண்டே. (41)

உண்டே கனக கிரிநிறம் வெண்மையும்
பண்டே பவளம் படிகமும் பச்சையும்
விண்டே நிறம்பிச்சி மாணிக்கம் போலவும்
கொண்டேன் கமலங் குருதிபோற் கூறிருள். (42)

இருளை யகற்று மிரவி சசிகுசன்
மருளகற் றும்பொன் மாந்தளிர் மேனியும்

அருளெய்து கோண மிவ்வண்ண பீடமாய்த்
தெருளே யிதன்மேற் றெளிந்த மயேசுரன். (43)

மாயே சுரனொடு மலரம் பிகையும்
மாயே சுரியே வகாரஹ்ரீங் காரமாய்
மாயேநல் லட்சரம் வவ்வாதி அகாரம்
தாயே வுடலாந் தந்தையுயிர் பீசம். (44)

உயிரோ வுடலோ யுதிப்பது முன்பின்னே
பயிராம் வினைவாம் பசுமைவித் தொன்றே
அயிரா பதத்தனுக் காயிரங் கண்ணால்
தயிரிய மக்கண் தானெக்கக் காணுமோ. (45)

காணுமோர் பட்டங் கயிற்றிலே கட்டினாற்
சேணி லுயர்ந்து திரும்ப வருவது
பூணுங் கயிறே பிடித்தகை தானே
யூணி யிதனை யுகந்துகொள் வாயே. (46)

கொள்வே னிதற்குமேற் கூறும்வஸ் துண்டே
அள்ளா திருந்த யனுக்ரகந் தானே
கள்ளா யிதனைக் காட்டயி ரெட்டிதழ்
வள்ளாய் வட்டம் வடிவதா காசம். (47)

ஆகாச வட்ட மதற்கிதழ் ரெண்டு
ஏகாச மான யிதழுக்குச் சத்திகள்
மாகாச மான மரகத வர்னமும்
ஏகாக மான தென்நிற மொன்றே. (48)

ஒன்றாய் வட்ட முயிர்பீடம் நீலம்போற்
கன்றாய்ச் சதாசிவங் கன்னி மனோமணி
நன்றா யிதனை நாடும் பொருளது
வன்றா யகார அரியிறீங் காரமே. (49)

அரியதோர் சங்கரி யானதோர் சவ்வின்கீழ்
எரிசுட ராக யிருக்குங் குமரி
சுருதி மறையெலாந் தோன்று மவளிடம்
பருதியுஞ் சோமனும் பதியுமதின் கீழே. (50)

அதின்செய லாவ தனுக்கிர கந்தொழிற்
பொதிந்தேயெல் லார்க்கும் புளக மதின்குணம்
விதிசெய லாவது வெளியுட லாகும்
உத்தியின் செயலா னுயிரட் சாமே. (51)

அசசர மாவது யாவர்க்குஞ் சீவனாய்
நிச்சய மாகவே நின்றதாய்ச் சொன்னீர்
உச்சித மாகவே யுண்டே யுறங்கிறாற்
கச்சு முலையாள் கனக்காண்ப தேதினால். (52)

ஏதுக்காய் நந்திநீ யிவ்வாக் குரைத்தாய்
மாதுநல் லாளும் மணங்கலச் சோற்றைத்
தீதிலா வெண்கலந் தன்னிற் றிரட்டிடப்
பூதியா யுண்டது புருசனோ கஞ்சமோ. (53)

கஞ்ச மலர்ந்த முகத்தாளுங் காமனும்
பஞ்சணை மேலே பள்ளிகொள் போது
கொஞ்சி யுறங்கிக் குலாவி யெழுந்தது
மிஞ்சிய மெத்தையோ மேவி யிருந்தரோ. (54)

இருந்த தறிந்தே னிதன்மேல் வேறுண்டோ
பொருந்த வுரைத்தமைப் புத்தி தெளிவியும்
இருந்தவன் நந்தி யிதன்மேலொன் றுண்டு
பிரித் திருந் தப்பிர மாந்திரங் கேளே. (55)

கேளா யதன்குணம் வடிநிறம் வீசமும்
நாளா யெழுந்த பிறைக்கீழ் நோக்கி
ஊழா யெழுந்தகா ரங்குயிர் வீசம்
மூளாய் நிறமிந்த்ர சாபம்போல் வெண்மையே. (56)

வெண்மை யறிந்தேன் வீதியின் செயலிதோ
தண்மையாய் நின்ற தலமும்வே றுண்டோ
உண்மையாய் நந்தி யிதன்மே லுரையிலை
வண்மை யிதுக்குமேல் மவுனமே யுள்ளது. (57)

உள்ள நிறமது ஒளியோ வெளியோ
தெள்ளத் தெளியத் திருவுரு வல்லவோ

விள்ள அரிதாம் விழியை யடைத்திடில்
உள்ளும் புறமும் உணர்வெளி யாமே. (58)

ஆமே யதன்கீ ழடுக்கும் பலதுண்டு
நாமே யுரைத்தது நந்தி யிருந்திடு
ஊமை யிருந்து உரைசெய்வா றெக்கும்
தாமே யறிவெனச் சதுர்மறை யோதுமே. (59)

ஓது மறையு முடற்சக் கரங்களும்
தாதுவாந் தத்துவஞ் சாரங்க ளானது
மாதியாஞ் சாத்திர மக்கர மானது
நீதி யுடலில் நின்றதின் பின்னலோ. (60)

அல்லோ பகலோ அதிசய மென்சொல்வேன்
சொல்லோ பொருளோ சொரூபமோ பேசிடக்
கல்லோ வுனக்குக் கரையா மனந்தானோ
நல்லோனென் நந்தி நாட்டமே நிர்மலம். (61)

நிர்மல மானது நின்குணம் நிட்களம்
நிர்மலன் றனந்தி நேச பராபரம்
நிர்மல மானது நின்குணம் நிட்களம்
நிர்மலன் றனந்தி நேசத்தாற் போற்றினேன். (62)

நினைவே னுனக்கினி நீநானு மொன்றானால்
புனைவா ரணிகம் பொன்தான் சுமக்குமோ
முனைநா னுரைத்த மொழிமந்திர மல்லவோ
தனையாய்ந் திருப்பது சற்குரு வாமே. (63)

ஈஸ்வர வாக்கிய சூஸ்திரம் ௬௩

முற்றிற்று.





உ

குமரன் றுணை.

105 - வது:

ஈஸ்வரி திருவாய்மலர்ந்தருளிய

# வாக்கிய சூத்திரம் ௧௪.

சாற்றுகிறேன் நாதாக்கள் பாதம்போற்றிச்
சகலதொழி லட்டகன்மஞ் சாதித்தாட
ஏற்றுகிறேன் தசரேகை நேரேயிட்டு
இந்தமுறை தசரேகை குறுக்கேயிட்டு
வாத்துகிறேன் எண்பத்தோ ரறையும்நிற்கும்
மறுபடியும் அதைமூன்ருய் வகுத்திட்டேதான்
தோத்துகிறேன் நவக்கிரக மடைக்கும்வாறு
தொடுகுறிபோல் நன்ருகச் சொல்லப்பானே. (1)

பானுகுரு மால்கேது சனியேராகு
பகாறிய புகரிந்து குசனேமுற்றும்
வானுமதி குசன்வெள்ளி குருமால்பானு
மகத்தான சனிராகு கேதுமுற்றும்
தேனுசேய் புகரிந்து புலவன்பானு
செம்பொன்னுக் தமங்கேது சனியேமுற்றும்
தானுபுத னிரவிகுரு ராகுகேது
சனிசெவ்வாய் புகரிந்து முந்திதாமே, (2)

முத்திகுரு புதனிரவி மந்தன்ராகு
முறைகேது பிறைசெவ்வாய் வெள்ளிமுற்றும்
வெத்திபுகர் சசியார விரவிபொன்மால்
விஷமான கேதுசனி ராகுமுற்றும்
அத்தியுள சனிராகு கேதுவிந்து
ஆரல்புகர் குருமாலோ டருக்கன்முற்றும்
சுத்தியே தமகேது சனிசேய்சுங்கன்
சோமனெடு புதனிரவி குருமுத்தாச்சே, (3)

ஆச்சிந்தக் கேதுசனி ராகுவெள்ளி
அம்புலிசேய் பானுகுரு புதனேமுற்றும்
வாச்சிந்த அடிமூன்றும் நடுமேலிட்டு
வகையாகத் தலைமூன்று மதின்கீலிட்டு
ஓச்சிந்த நடுமூன்று மதின்கீழிட்டு
வுள்ளரைமூ வொன்பதுமிம் முறைகண்டேற்று
ஏச்சிந்த யிருபத்தா றிருபத்தேழு
மிருபத்தஞ் சிப்படிமே லேத்துக்தானே, (4)

தானான நவக்கிரக மடைந்தபின்பு
சாதகமா யவரவர்தன் பீசம்போடு
கோனான அகாரமுத லஞ்சும்போடு
குறிப்பான நகாரமுத லஞ்சும்போடு
வேனான யிரியோடு ஸ்ரீயும்போடு
மேவுசவ்வுங் கிலியோடு ஐயும்போடு
ஓனான பூதங்க ளஞ்சும்போடு
உத்தமனே யவரவர்தன் திசைகாள்போடே. (5)

போடப்பா ரேகைமுலை சூலமேத்திப்
புகழ்விந்து யிட்டுபிர ணவத்தாற்கட்டிச்
சூடப்பா விருத்தமொன்று மேலேயிட்டுத்
துலங்கவதில் காலிதழுஞ் சூழப்போடு
கோடப்பா விருத்தமதன் மேலொன்றிட்டுக்
குறிப்பாக யிதழாறுங் கூர்ந்துபோடு
நாடப்பா வட்டமதின் மேலொன்றிட்டு
நலமாகப் பத்திதழும் நவின்றிடாயே. (6)

நவின்றிடுவாய் விருத்தமதன் மேலொன்றிட்டு
நலமாகப் பன்னிரண்டு யிதழும்போடு
இவின்றிடுவாய் வட்டமதன் மேலொன்றிட்டு
யியல்பாக யீரெட்டு யிதழும்போடு
உவின்றிடுவாய் விருத்தமதன் மேலொன்றிட்டு
உபையயித ழுபையவட்டம் பானுவட்டம்
முவின்றிடுவாய் ஐம்பத்தோ ரெழுத்துமந்த
முறைவீத மிதழுறிந்து முட்டுமுட்டே. (7)

மூட்டிடுவாய் அஞ்சுவர்னக் கோட்டையிட்டு
முளைக்கநூற் றிருபத்தஞ் சிதழுமிட்டுக்
கூட்டிடுநால் வாசல்தே வதையுமிட்டுக்
குறிப்பாகப் பூசித்து ஓமம்பண்ணு
ஆட்டிடுவாய் வஸ்துவொடு சுத்திவைத்து
அங்கன்யாசங் கரன்யாச மறிந்துபண்ணு
பூட்டிடுவாய் பலமான பலகாரங்கள்
பூசுபரி மளசுகந்தம் பூசைக்கேற்றே. (8)

ஏற்றிடுவாய் மந்தனுடன் நகாரஞ்சேரில்
இருத்துகிற தம்பனமா யிகத்திலேதான்
தோத்திடுவாய் பாம்பிரண்டிற் சிகாரஞ்சேரிற்
சொற்பெரிய மாரணமாந் தோய்ந்துபாரு
பார்த்திடுவாய் குசனோடு வகாரஞ்சேரிற்
பழுயினுச்சா டனமாகும் பாருபாரு
காத்திடுவாய் பிருகோடு மகாரஞ்சேரிற்
காரியமோ கனமாகுங் கருதிப்பாரே. (9)

பாரப்பா குருவோடு யகாரஞ்சேரிற்
பாருலகில் நினைத்ததெல்லாம் வசியமாகும்
மாரப்பா மகாரமே நடுவெடுத்து
மாலறையி லிடவழைப்பு வித்தையாகும்
சேரப்பா சிகாரநடு வெடுத்தேபானு
சேர்ந்திடவே பேதனமாந் தெளிந்துபாரு
வேரப்பா வகாரநடு வெடுத்தேவிந்து
மேவியிட வித்துவே ஷணமதாமே. (10)

ஆமப்பா ரவிமுதலாய்க் கேதுமட்டும்
அவரவர்தன் திசைகள்நடு லக்கம்போடு
ஓமப்பா சாத்தியந்தான் நாமம்போடு
வுரைக்கரிய ஐங்காய மதிலேபூசு
தாமப்பா சோதனைக்கு விளக்கில்வாட்டச்
சலவியமு விகைவேரைத் தகட்டிற்பூசு
காமப்பா கண்டபடி யுலகிற சொன்னோம்
நாட்டுகிறேன வாவாதன் ஞானத்தானே. (11)

ஈஸ்வரி வாக்கிய சூத்திரம் ம்க.

முற்றிற்று.





குமாரகுருபரன்றுணை.

106-வது:

சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய

# குருநாடி ஞ்சு.

ஆதிபரா பரமாகி நின்றநாடி
அருளினேம் கன்னிகையே யானும்நீயாய்
சோதியரப் பிரமமது நீயேயானும்
துலங்குகின்ற துரியமது நானேநீயாய்
வாதியெனும் நீநானு மெங்குந்தானுய்
வகுத்தகுறி நீயறிவா யெந்நாளுந்தான்
காதியென்ற சகலவுயி ரெல்லாம்நாமாய்
கலந்தகுணம் நன்குணர்வாய் கன்னிப்பெண்ணே. (1)

ஆதியாம் வாத நாடி அருங்கலை பதினாறாகும்
சோதியாம் பித்த நாடி சுடர்கலை பனிரண் டாகும்
நீதியாஞ் சேத்ம நாடி நிகழ்கலை யெட்ட தாகும்
வாதியாய் நின்ற பேர்கள் வகுத்துரை செய்வார் தாமே. (2)

வேறு.

அடிநடு முடியாம் நாடி அறியவே சொல்வேன் கேளு
பிடியதாம் வாத வீட்டில் பிதற்றிய பித்தங் கூடில்
கடிசிலை யிருமல் தோன்றுங் காணுவாய் சாத்ய மென்று
வடிவதி சாரந் தோன்றில் வகுத்துரை மரண மென்றே. (3)

நடுவடி வான வீட்டில் நடுங்கிய சீதங் கூடிற்
படுவனும் புண்ர ணங்கள் பண்பதாங் கழிச்சல் காணில்
சுடுவதாங் காட்டில் சேர்வார் சொல்லினேன் கண்டு கொள்வாய்
மடிவதாய் மாத மூன்றில் வகுத்துரை செய்ய லாமே. (4)

பின்னிய பிரவிச் சோடு பிளவைபுண் ரணத்துக் கெல்லாம்
மன்னிய குருவாம் நாடி மயக்கமாய் நடுங்கி நிற்கில்
நன்னிய முப்பத் தேழாம் நாளினில் மரண மென்று
உன்னிய நிதானம் பார்த்தே யுரைத்திடா யுலகத் தோர்க்கே. ()

பித்தத்தில் வாதந் தானும் பிலத்துடன் கடிகை நின்றால்
அத்தது கலைதா னென்று அன்றியே நிற்கில் வாதம்
சித்தமாங் கலையே யாறு சிதைந்திடும் பெண்ணே கேளாய்
பத்தபின் கலைபத் தான பாக்கியுஞ் சிதையா தென்னே. (6)

என்னவே சீதம் நின்ற வெழில்பத்துங் குறையா தாகில்
மன்னுயர் சீவன் றானும் வாழுமே யிருப தாண்டு
சின்னமாங் கலைகள் தானும் திரண்டது வொன்பதற்றால்
பன்னுமாஞ் சீவன் றானும் பரிந்திடா திருக்குந் தானே. (7)

தானெனுங் கலைகள் யாவும் தனித்தனி குறைந்து தென்றால்
மானெனுங் கடிகை யாறில் மரணமே யாவர் சொன்னோம்
தேனெனும் பித்தந் தானும் தியங்கியே சீதஞ் சேரில்
கானென்ற கடிகை யொன்றிற் காண்பது மறலி யூரே. (8)

மறலியூர் போன சீவன் வந்திடுங் கணக்கங் கொன்று
சிறலிதன் பித்தந் தானும் சிதறிடாக் கலைக ளோடும்
வறலியாஞ் சீதந் தன்னில் வந்துடன் மூழ்கி யேறில்
பிறலியாந் தூலந் தன்னில் பிறந்திடுஞ் சீவன் பெண்ணே. (9)

பெண்ணேகேள் அடிபி னோடு பெருகிடு முடியே சேரில்
அண்ணேகேள் கபாலக் குத்து அணுகிடுஞ் சுரமுந் தாகம்
கண்ணேகேள் அச்சு ரந்தான் கடுகிய மருந்திற் றீரும்
திண்ணேகேள் நடுவி னோடு சிறந்திடு முடிதான் சேர்ந்தால்
நன்னுமே கிராணி யென்று நாடியுற் றுரைவாய் சொன்னேன். ()

சொன்னதைக் கருத்தி லுன்னிச் சூக்ஷமாங் குருவின் நாடி
கன்னிடும் வாதத் தோடே கடிகைபத் தாறி லேகும்
நன்னிய பித்த வீட்டில் நல்கிடும் பனிரண் டாகில்
சின்னமே சீத வீட்டில் சென்றிடுங் கடிகை ரெண்டாம். (11)

இப்படி கிசியில் நாடி யிருந்திட வியற்கை சொல்வோம்
அப்படி பித்தத் தின்மே லணுகிடுங் கடிகை பத்து
தப்படி வாதத் தின்மேல் தாண்டிருங் கடிகை பத்து
கப்படி சீதத்தின்மே லுறைந்திடுங் கடிகை பத்தே. (12)

பத்ததாய் நாடிஸ் தானம் பருகிடும் பகரக் கேளாய்
உத்ததாய் லலாடஸ் தானம் ஊன்றிடும் அமிஷம் நூறு
அத்ததாய்க் கண்ம தின்கீழ் அமிஷம்நூற் றிரண்டு பத்து
எத்தவான் குறியி னமசம் யிருநூறுங் குறிப்புத் தானே. (13)

தானெனும் வாதம் தயங்டுகிங் குறிகள்
சாற்றுவே னடியின தமிஷம்
வானென்றுங் கலைதான் ஒன்றதற் கமிஷம்
வழங்கிடு மாயிரத் தெட்டாய்
கானெனும் பித்தங் கண்டது னமிஷம்
கண்டித்தோம் நூறுபத் தெட்டாய்
தேனெனுஞ் சீதம் திரமதி னமிஷம்
செப்புதற் கரியதாம் பெண்ணே. (14)

அரியதாம் வாதம் அதனிடம் பித்தம்
அண்டினு லக்குறி கேளாய்
மரியதாங் தமுரில் வந்திடும் வாய்வு
வழங்குவோ மின்னமுங் கேளு
சரியதாம் வாதம் தனித்துக்கீ ழிரங்கிற்
றூண்டிடுஞ் சாந்தமென் றுரைநீ
கரியதாம் வாதங்கதித்துமே லேறில்
கண்டிடப் பெலத்ததென் றறியே, (15)

அறிந்திடுஞ் சீதம் அழலினில் வந்து
அணுகினு லக்குறி கேளாய்
சறிந்திடு மயக்கம் தாகமுங் காணும்
தனிமுதற் றேகமும் வலியாம்
கரிந்திடும் வெட்டை சலமதா யொழுகும்
காணுமே கடுப்புடன் குத்தும்
பரிந்துடன் மருந்து பாகமா யருந்தப்
பண்புடன் தீருமந் நோயே. (16)

தீருமிந் நூலிற் செப்பிடா துளவைச்
செப்பினேந் தீர்க்கம தாக
ஆருநாம் சொன்ன அதிசய நாடி
அருமையாங் குருவின்முன் னிலையில்
தேருநீ நானுய் செய்கைகள் யாவுந்
தெரிந்திட நீபதம் பெருவாய்
மாருகோ ளொன்றும் வந்திடா துனக்கு
வகுத்திடும் பதினாறு முற்றே. (17)

சிவபெருமான் குருநாடி ம்சு.

முற்றிற்று.





உ

கடவுள் துணை.

107-வது.

ஈஸ்வரன் திருவாய்மலர்ந்தருளிய

# மெய்ஞ்ஞான நாடி நூல்.

ஆதிபரா பராமாகி யகண்டமான
அமூர்த்தலிங்க ரருளாலே அந்நாள்வாம
பாதியிடத் தபிராம வல்லித்தாய்தான்
பரைமனே மணிக்குரைத்த ஞானநாடி
பூதலத்தோ ரிதையறிந்து நன்றாய்த்தேர்ந்து
பூதவகை நோய்வகைக ளுளவிற்காண
நீதலத்திற் சொல்லெனவே எனக்குச்சொன்னாள்
நேர்ந்துரைப்பேன் நாடியது மூலந்தானே. (1)

மூலமெழு பத்தீரா யிரமாம்நாடி
மூளைந்தெழுந்து வலைபோலே முடிந்தவோடே
கோலமாய்ப் பதிமூவா யிரநரம்பு
கோர்வையாய்ச் சூழ்ந்திருக்கும் கூட்டிற்குள்ளே
காலமாம் நாடிபத்து வாய்வுபத்து
கதித்ததெல்லாம் முக்கோர்வைப் பகையினாலே
நாலநா லாயிரத்து நானூற்றோடு
நவில்நாற்பத் தெண்ணோயாய் நாட்டலாமே. (2)

நாட்டிலுள்ள மானிடற்கு வருநோய்கண்டு
நாடிபத்து வாய்வுபத்தின் குறியுங்கண்டு
கூட்டிலுள்ள பிணிதீர்க்க வவிழ்தங்கண்டு
கொடுப்பதற்குச் சாத்தியம சாத்தியமுங்கண்டு
ஏட்டிலுள்ள நூல்முறைகை முறையுங்கண்டு
எண்ணரிய வயித்தியராய்ப் புகழும்பெற்றுத்
தேட்டமுள்ள சுகிர்தகுண முடையோனையுஞ்
சிறைமீட்டிப் பிழைக்கவைத்தா லவனேதாதா. (3)

தாதாவென் றுரைப்பதற்குத் தகுமோவிந்தச்
சாஸ்திரத்தை யிகழ்ச்சிசெயுஞ் சண்டாளர்க்கே
மாதாபி தாவினுட மனங்கோணாமல்
மகாபெரியோ ருரைக்கின்ற மொழிமீறாமல்
வேதாந்த மூர்த்திகளை யறிந்துபோற்றி
மேதைமிகு நீதிகளும் விளங்கத்தோற்றிக்
காதாரக் குருவினுப தேசங்கேட்டுக்
கைசிகிச்சை பெற்றவனே யோகசித்தன். (4)

சித்தன்றிப் பலநூலும் பார்த்துக்கொண்டு
சிந்தையுழல் வயித்தியரே யவிழ்தஞ்செய்து
குத்தமொடு கொடும்பாவஞ் செய்திடாமற்
குருமுறையா யவிழ்தங்கள் முடித்துக்கொண்டு
முத்தன்றிக் கொலைமுதல்மா பாவஞ்செய்து
முகியாத யெழுநரகில் விழுந்திடாமற்
கத்தனடி கண்டுபிணி தீர்க்கத்தானே
கண்டிதமாய்ப் பண்டிதத்தைக் கருதிப்பாரே. (5)

பாரப்பா நோயினுட பிராய நேர்மை
பகைத்துவந்த நாட்பிணியைக் கூர்ந்தறிந்து
தீரப்பா அவனிடத்திற் குறையுண்டானாற்
றிருவுளத்தை நோக்கியறஞ் செய்யவைத்துச்
சேரப்பா பகைவரைச்சி நேகமாக்கித்
தெளிவதா யிர்மனதோர் மனமதாக
நேரப்பா அவிழ்தங்கள் கையாலீய
நிச்சயமாய்ச் சித்திக்கு மிதுவேநீதி. (6)

நீதியா யவிழ்தங்கள் சேர்க்கும்போது
நிர்மலமாய்ச் சரக்குகளைச் சுத்திசெய்து
ஆதிமங் களவார முகூர்த்தங்கோலி
அளவுடனே அவிழ்தங்க ளரைத்தபின்பு
ஓதுதெய்வம் நமசிவய மென்றிறைஞ்சி
உயிரெழுத்தை யுருவேற்றி யுருண்டைபண்ணிப்
பாதியா யவிழ்தங்க ளீயும்போது
பரிகார நடத்தைதனைக் கூறுகிறேனே. (7)

வயித்தியருக்கு வேண்டியது.

கேளப்பா வயித்தியர்க்கு யோகம்வேணும்
கேட்குமுன்னே சொல்லுமெத்தக் கல்விவேணும்
தாளப்பா சரக்குவைப்புக் குணமுங்கட்டு
க்ஷணப்பொழுதில் நீத்துமுப்பூ அறியவேணும்
சூளப்பா வியாதிகண்டு அவிழ்தமீயச்
சூட்சுமமாம் புத்திதந் திரமும்வேணும்
நாளப்பா சீவர்கள்மே லிரக்கம்வேணும்
நற்குணமாம் வாதிமகன் கிரிகையிதே. (8)

வாதிமகன் வயித்தியன்றன் குணத்தையாயில்
வாகாகக் கைபார்த்து முகத்தைப்பார்த்துச்
சோதியுடன் மலஜலத்தின் பரீட்சைபார்த்துச்
சொல்லிடுவான் வியாதிகளை யறிந்துநன்றாய்ச்
சேதிகடா னவனுக்குத் தென்புசொல்லித்
தேகத்தைத் தொட்டுமெள்ளப் பார்த்துக்கொள்வான்
நீதியுடன் கடவுளைத்தான் பணிந்துகொண்டு
நிச்சயமா யவிழ்தவகை யீய்வான்கண்டாய். (9)

நாடிபார்க்க.

கண்டாயா டவர்க்குவலக் கரமுமாகும்
கருத்துளபெண் களுக்குமிடக் கரமாமென்றும்
மிண்டாமிடக் கையைவலக் கையாலேந்தி
மேல்வலது கையையிடக் கையாலேந்தி
கொண்டாடக் கைதேய்த்து நெட்டிவாங்கி
கூட்டுமூ விரலுக்கு விரலண்டாமே
அண்டாமல் நெல்லிடைக்குள் விட்டுப்பார்க்க
அசைவாகும் வாதபித்த மையமாமே. (10)

ஆமென்ற புலனுடைய வாதந்தானே
அப்பனே கோழியுட நடைபோலாகும்
ஏமென்ற உயிருடைய பித்தந்தானே
இரைமேயுங் காக்கையுட நடைபோலாகும்
ஓமென்ற சதமுடைய அய்யந்தானே
ஓட்டமில்லா மந்தியுட நடைபோலாகும்
நாமென்ற வாதபித்த சிலேற்பனத்தின்
நடையில்வா றென்றுண்மை நாட்டுங்காணே. (11)

காணப்பா வாதமுன்னும் பித்தம்பின்னும்
கடையாக ஐயமது தோற்றவேணும்
பேணப்பா கைத்தாதிப் படியேகண்டால்
பிணிதீர்ந்து போச்சுதென்று புகழ்ச்சிகூறு
ஊணப்பா மூவருமே வரிசைதப்பி
ஊணில்லாப் பறவையைப்போ லுயர்ந்துநின்றால்
தானப்பா யிப்படியே கண்டோர்க்கெல்லாம்
சத்தியமாய்ச் சீவிக்குந் தப்பாதுண்மை. (12)

உண்மையுள்ள மூவருமே ஒடுக்கமாகி
ஒப்பில்லா வாதமது உலாவிநின்றால்
திண்மைவினை யகற்றவே செயலுண்டாகிச்
செனித்து வயிறதனிற் பித்தம்நின்று
ஒண்மையாய்க் கனல்மூட்டித் தெளிவுதந்து
உயர்வான சிவமயம தாக்கிவைக்கும்
வண்மைமனங் கலங்காமற் றுணிவுகொண்டு
வலுவான அவிழ்தங்க ளறிந்துமூட்டே. (13)

மூட்டியே மூவருமே மூடமானால்
மூதண்டச் சன்னியுட மூர்க்கமாகும்
ஆட்டியே மூவருமே அணுகிநின்றால்
அத்தோஷஞ் செனிக்கின்ற முறமையாகும்
கோட்டியே வாதமது குளிர்ந்துநின்றால்
குணமில்லை மரணமதின் கூறதாகும்
வாட்டியே வாதமது மழுங்கிநின்றால்
மரிபடா மரணமென்று மதிக்கலாமே. (14)

மதிக்கலாம் மூவருமுன் னிட்டுதைத்தால்
வந்தநோய் தீர்ந்துவிடும் மரணமில்லை
பதிக்கலாம் மூவரும்பின் னிட்டுதைத்தாற்
பழியாகப் பிணிமீறும் பகைத்துக்கொல்லும்
குதிக்கலாம் வாதமது தொந்துநின்றால்
கொடுமைசெய்யுஞ் சுரங்களுட கூறதாகும்
விதிக்கலாம் வாதமது மெலிந்துநின்றால்
வேகமாய் நின்றசுரம் விட்டுப்போச்சே. (15)

போச்சுதப்பா நல்லோர்க்கு வந்தநோய்கள்
பொல்லாத பாவிகட்குத் தீராதப்பா
ஏச்சுதப்பா பகைத்துவந்த நோய்க்குணங்கள்
இதமறியா வயித்தியனின் னெளிமைகண்டு
வாச்சுதப்பா யிந்நூல்தான் வயித்தியர்க்கு
வகைதொகையாய் வயித்தியரைச் செயிக்கத்தானே
ஆச்சுதப்பா முன்சொன்ன இருநூற்றைந்தும்
ஆமிந்த நூலுக்கு ஆதிமூலம். (16)

மூலமெழு பத்திரா யிரமாம்நாடி
மூளத்தெழுந்து சுழித்திடத்தை மொழியொண்ணாது
தாலமீ திடருகின்ற நோய்கட்கெல்லாம்
சார்புடனே சுழியிருத்த கையினுள்ளே
காலையிலே வாதமது உதிக்கவேணும்
கடுமதியம் பித்தமது தோன்றவேணும்
மாலையிலே ஐயமது உதிக்கவேணும்
வளமான நாடியென்று மதிக்கலாமே. (17)

காலையிலே வாதமது மெலிந்துநின்றால்
கதிர்சாயும் பொழுதிலந்தி மரணமாகும்
பாலையிலே நடுப்பித்தம் மெலிந்துநின்றாற்
பானுதையந் தன்னிலேதான் மரணமாகும்
மாலையிலே அய்யமது மெலிந்துநின்றால்
மரணமில்லை வந்தநோய் தீர்ந்துபோகும்
கோலையிலே இப்படியே பகுத்துநன்றாய்க்
குறிப்பறிந்துக் கொள்வார்கள் பெரியோர்தாமே. (18)

ஆமேகேள் அடிநுடிதான் அசைந்துதைத்தால்
அசைவாகக் கடைநுடிதான் புதைந்துதைத்தால்
பூமாகேள் அவிழ்தமிட வியாதிதீர்ந்து
புணர்ப்பாக உணர்த்துகின்ற நாடியாகும்
ஓமாகேள் அடிநுடிதான் குறைந்துதைத்தே
உறமாகக் கடைநுடிதான் சுரந்துதைத்தால்
வீமாகேள் மணிமந்திர அவிழ்தத்தாலும்
மீளாது விதிமுடிந்த நாடியாகும். (19)

ஆகமுற்றும் நாடியது மொத்துவீழ்ந்தால்
அவிழ்தமிடு பிழைப்பார்கள் அதிஷ்டமுண்டு
சோகமுற்றும் நாடிபத மற்றுவீழ்ந்தால்
துலையாத மரணமென்று சொல்லலாகும்
யேகவிழுந் திருவர்களி லொருவர்நாடி
எழுந்தாலும் நின்றாலும் மரணமில்லை
வேகமுற்றும் நாடிபதம் விழுந்தபின்னே
விழுந்தாலும் நின்றாலும் பிழைப்பதில்லை. (20)

இல்லையாம் பித்தமுன்னும் வாதம்பின்னும்
எழும்பினா லசாத்தியத்தின் நாடியாகும்
எல்லையாம் வாதமுன்னும் பித்தம்பின்னும்
எழும்பிடவே சாத்தியத்தின் நாடியாகும்
மல்லையாம் வாதமது அமர்ந்துநின்றால்
வயிற்றிலே சோறிருந்து மந்தமாகும்
கல்லையாம் வாதமது கதித்துநின்றால்
களைப்புண்டாந் தீபனத்தின் நாடியாகும். (21)

ஆகமாஞ் சாஸ்திரத்தின் கூரைக்கண்டு
அறைகுவோம் அவனியதில் மானிடர்க்கு
மாகமாம் வாதத்தின் சரீரக்காரன்
வாலிப்பாய் தேகமுள்ள வடிவனாவன்
யோகமாம் பித்தத்தின் சரீரக்காரன்
உறுதியாந் தேகமுள்ள குணவானாவன்
பாகமாஞ் சேத்துமத்தின் சரீரக்காரன்
பருமமாந் தேகமுள்ள திடவானாவன். (22)

நாவனாம் வாதத்தின் சரீரக்காரன்
நாதமாங் குரல்நீண்டு பேசும்வண்ணம்
பாவனாம் பித்தத்தின் சரீரக்காரன்
பதறியே குரல்விண்டு துடியாய்ப்பேச்சு
கோவனாம் சிலேட்டுமத்தின் சரீரக்காரன்
குமிறியே குரல்விண்டு யிடியாம்பேச்சு
மூவனாம் சென்மித்த சத்தமல்லால்
மொழிந்தமற்ற சத்தமெல்லா மபத்தமாமே. (23)

ஆமப்பா வாதசுரம் மலந்தம்பித்து
அங்கமெல்லாம் நொந்துபுண்ணாய்க் குளிருண்டாகும்
ஏமப்பா பித்தசுரம் ஜலந்தம்பித்து
ஏற்றபித்தம் தேகமூற்று மெரிவுண்டாகும்
காமப்பா ஐயசுர மும்மீரற்றுக்
கணுவெலும்பைக் குடைந்துகப நீருண்டாக்கும்
ஓமப்பா யிச்சுரமூன் றல்லாதில்லை
ஒட்டுதாம் வாயுவினு லுதித்தவாறே. (24)

வாறுக மூரிக்கொட் டாவிகொண்டால்
வாதத்தால் வந்தசுரம் வலுத்ததாகும்
பேறுக வாயில்நீர் குழப்பங்கண்டால்
பித்தத்தால் வந்தசுரம் பெலத்ததாகும்
கூறுகச் சளிசெருமல் சினுக்குண்டானுற்
கொடுங்கபத்தால் வந்தசுரம் கோபமாகும்
மூறுக யிவையாமுச் சுரங்களாகும்
மூர்க்கத்தை யொடுக்கவல்லோ முறையைக்கூறே. (25)

கூறுமே உறைப்பான கலிக்கம்போட்டால்
குழைந்துநின்ற சுரம்பாதி ஒடுங்கிப்போச்சு
பாருமே வழலைசத்தி வாங்கிப்போட்டால்
பறந்துநின்ற சுரம்பாதி யொடுங்கிப்போச்சு
காருமே ஆக்கிராணப் பொடியைப்போட்டாற்
கலந்துநின்ற சுரம்பாதி யொடுங்கிப்போச்சு
தீருமே கருமசுத்தி மூன்றுஞ்செய்தாற்
செடத்திலுள்ள நோயையெல்லாந் துறத்துவோமே. (26)

ஓமென்ற மலக்கட்டைக் கழியவைத்தால்
உடலிலுள்ள வாதையெல்லா மோடிப்போச்சு
தாமென்ற சிறுநீரைத் தெளியவைத்தால்
சடத்திலுள்ள ரோகமெல்லாந் தணிந்துபோச்சு
கூமென்ற உமிழ்நீரை முறியவைத்தால்
கூட்டிலுள்ள பகையெல்லாம் குலைந்துபோச்சு
கோமென்ற யிவைமூன்றுங் களங்கமற்றால்
கொல்லவந்த காலனையும் வெல்லலாமே. (27)

ஆமேதான் பண்டிதர்க்குக் கல்வஞ்சொல்வேன்
அருமையுள்ள கண்மணியே அறிவுள்ளானே
தாமேதான் நீளமது சொல்லக்கேளு
சாற்றுகிறே னங்குலந்தான் பதினாறாகும்
நாமேதான் அகலமது ஆறதாகும்
நாலாகும் உயரமது ஆழஞ்சொல்வேன்
போமேலா னங்குலமு மிரண்டதாகும்
பொலிவான நன்னியென்ற கல்லுமாமே. (28)

கல்லான கல்லதுதான் சொல்லக்கேளு
கருங்குருநதை செங்குருந்தை நன்னியாகும்
சொல்லான சுற்றோரம் வரம்புக்கம்பி
சொல்லிவலங் குலமதுதா னென்றேயாகும்
வல்லசித்தர் புலிமுகமுங் கல்வம்வைத்து
வல்லசித்தர் சொற்படியே சித்தரித்து
நல்லான கல்லமைத்துச் செய்யும்யோகன்
நாட்டிலே தேவவயித் தியனும்முற்றே. (29)

ஈஸ்வர மெய்ஞ்ஞான நாடி ௫௰.

முற்றிற்று.





ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகம்மதுசாயபுபுரம் அருளானந்தப் பிடகர் அவர்கள் குமாரர் சங்கரலிங்கபண்டிதர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குமரன் றுணை.

108 - வது:

அல்லமாப்பிரபு திருவாய்மலர்ந்தருளிய

# நாடி சாஸ்திரம் கஉ.



வல்லவனும் பிர்மத்தின் மலர்த்தாள்போற்றி
வழுத்துகிறேன் ஐம்பூத நாடிநேர்மை
சில்லவனும் நானுமதை யறிந்தமட்டும்
செப்புகிறேன் மாந்தர்கண்டு தெளியும்வாராய்க்
கல்லல்செயும் பயல்களுக்குத் தெளிவுறாது
கண்டுரைப்போன குருவினிட மதனைக்காண்பான்
அல்லல்படா மனத்தோனே வுனக்காய்ச்சொன்னேன்
அரும்பொருளைப் புசுண்டாநீ அறிவாய்தானே. (1)

புசுண்டமா முனியேகேள் நாடிமுற்றும்
புதுமையதாய் விளங்குமதன் விபரங்கேளாய்
நசுண்டகுண முற்றிருக்கும் வாதநாடி
நன்குணரச் சொல்லுகிறேன் நளினமாகப்
பிசுண்டகுண முடைத்தான பித்தமையா
பிதற்றுமதன் முக்குணமும் பேருங்கேளாய்
தசுண்டகுண மானதொரு சேத்துமத்தின்
தாராதரங்க ளின்னதென்று சாற்றுவோமே. (2)

சாற்றுகிறேன் வாதஞ்சந் திரனேயாகும்
தனித்துநின்ற பித்தஞ்சூ ரியனேயாகும்
ஏற்றுகின்ற வாசியது சீதமாகும்
இயம்பிநேம் நாடியின்றன் னியல்புதன்னை
மாற்றுகின்ற வாதமது அடிதானென்றும்
வகுத்துரைப்பார் பித்தமது நடுத்தானென்றும்
போற்றுகின்ற சீதமது முடிதானென்றும்
புகன்றிட்டார் சித்தரெல்லாம் புகன்றிட்டாரே. (3)

புகன்றிட்ட படியாலே யானுஞ்சொன்னேன்
புண்ணியமா மடியினொடு முடிதான்சேர்ந்தால்
ககன்றிட்ட படுமூலக் கிராணியாகில்
கண்டுரைத்தோம் மூன்றுதிங்கள் மரணமென்று
மகன்றிட்ட சீதகபம் வந்துதோன்றில்
மரணமில்லை அவிழ்தமதிற் சாந்தமாகும்
சகன்றிட்ட வாதபித்த சுரங்களெல்லாம்
தானருந்தும் மருந்ததினாற் சாந்தமாமே. (4)

சாந்தமா மடிதானும் முடியிற்சேர
சன்னதமாம் மூலத்திற் கிராணிகண்டால்
மாந்தமாம் நடுவுடனே முடிதான்சேர்ந்தால்
நடுக்கமுடன் நீரேற்றம் மயக்கங்காணும்
காந்தமாந் தினவுடனே கைகால்வீக்கம்
காணுமொன் பான்மாதம் மரணமாவார்
வாந்தமாம் தப்பில்பதி மூன்றுதிங்கள்
வகுத்துரைப்பாய் மரணமென்று தீர்க்கஞ்சொல்லே. (5)

தீர்க்கமாய்ச் சொல்லுகிறே னடியினோடு
திறமான நடுவதுவும் முடியுமன்றாய்
மார்க்கமாய் நல்லவர்போல் நடக்கில்மூவர்
மறலியூர் புகுவதுவுந் திண்ணஞ்சொன்னேன்
ஏர்க்கவே நாளறுபத் தெட்டிற்சாவான்
என்றுசொன்னோம் பூரணத்தின் காலைக்கொண்டு
வார்க்கமாம் பூரணத்தின் காலையூன்றி
வருங்கடிமை பாத்தாரிற் காவுபோச்சே. (6)

போச்சென்ற பதினறு கடிகையடியதனிற்
பொருந்திய நிற்கிலவர் வயதுகேட்கில்
ஆச்சென்ற ஆண்டதுதான் நூற்றுப்பத்து
அரகரா அவன்வாழ விருந்துவாழும்
வீச்சென்ற பனிரண்டு கடிகைநடுவதனில்
விலாந்ததிலே யிருந்தேகிற் சொல்வேன்மைந்தா
காச்சென்ற வருடமொரு நூறுசொன்னோம்
கண்மணியே யிதுதிடமாய்க் கண்டுதேரே. (7)

தேரென்று சொன்னமொழி முடியிலேதான்
திறமாக இருகடிகை யிருந்துசென்றால்
வாரென்ற ஆண்டதுவும் எண்பத்தைந்து
வகுத்திருக்கும் வாணாளை வசனித்தோம்பாம்
காரென்ற பூரணந்தான் நடுவில்நிற்கிற்
கண்டிட்டோம் கடிகையது பதினாறாகில்
பூரென்ற வயததுதான் நாற்பதென்று
புகன்றிட்டா ரென்குருவாம் பிரமந்தானே. (8)

பிர்மமது தானாகி யடியில்நிற்கப்
பேதமெனுங் கடிகைபதி னெட்டேயாகிற்
கர்மமது மும்பத்தெட் டாண்டுவாணாள்
கண்டபடி நாம்சொன்னோங் கணக்கதாகச்
சர்மமது வேமுடியிற் கடிகைநாலாய்ச்
சார்ந்துநிற்கி லதன்சார்பு சாற்றக்கேளாய்
வர்மமது ஆண்டதுவு மிருபத்தேழாய்
வசனித்தோம் மரணமென்று வகுத்துச்சொல்லே. (9)

சொல்லென்று வாணாளை யறிவதற்குத்
தொகுத்திடுவோம் திதியனைத்தும் சுருதியாய்ந்து
அல்லென்ற தசமியதில் முன்னேதானும்
அறைந்தபடி அங்குதங்கி நடந்ததென்றால்
சில்லென்று முன்னுரைத்த படியேயாகும்
சீக்கிரத்தில் விநாடியதின் கணக்கறிந்து
மல்லென்று கொண்டாய்போற் சத்தமியில்
மயங்காதே காதேசி மகிழ்ந்துபாரே. (10)

பார்த்தபடி முன்கண்ட காட்சிபோலப்
பகர்ந்தபடி அந்திடத்திற் றங்கியோடில்
காத்தபடி கணக்கறிந்து கொண்டாயானால்
கயிலாய பதவியிலே கலந்துகொள்வாய்
ஏத்தபடி யிக்குறிகள் தப்பிற்றென்றால்
ஏர்க்குமோ உலகத்துக் கோக்காதப்பா
சாத்தபடி அத்திதியின் பலத்தைக்கண்டு
சாற்றுவாய் மாந்தருக்குச் சாற்றுவாயே. (11)

சாற்றினதால் வருவதென்ன போவதென்ன
சண்டாளப் பயல்களுன்னைத் தோஷஞ்சொல்வார்
ஆற்றினால் நீகண்டு ஒதுங்கிக்கொள்ளு
அறிவாளி நீயறிந்து அறிவில்நில்லு
மாற்றினாற் கலைகளது தானாய்மாறும்
மகிமையுற்ற நாடிகளின் மகிழ்ச்சிமைந்தா
காற்றினாற் றூற்றிவிட்டுப் பதரைநீக்கிக்
கனத்தநெல்லை யெடுப்பதுபோற் கருதுமுற்றே. (12)

அல்லமாப்பிரபு நாடி கஉ,

முற்றிற்று.





மதுரை வடக்குவாசல் யானைக்கல்தெருவிலிருக்கும் வித்துவான் மு. குழந்தைவேலுப்பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



குருவே துணை.

109 - வது:

அகப்பேய்ச் சித்தர் திருவாய்மலர்ந்தருளிய

# பூரணஞானம் ௰௫.

சுத்தபர வெளியான ஒளியைப்போற்றிச்
சுயம்புநிரா மயமான அருளைப்போற்றி
நித்தநிர் மலசுகுண பரையைப்போற்றி
நிகிலசரா சரம்படைத்த வஸ்தைப்போற்றி
அத்தனன்னை யானவன்றன் பாதம்போற்றி
யனுதினமுஞ் சித்தரரு ளதனைப்பெற்று
இத்தலத்தில் ஜீவபயிர் தழைக்கவேண்டி
இயம்பினேன் குருவருளே யேகமாமே. (1)

ஏகநிரா மயசோதி பூரணந்தான்
இன்னவையென் றுந்தனக்கு யியம்பக்கேளு
ஆகமமீ தல்லமெய்ஞ் ஞானமாகும்
அறிவாய்க்கேள் பூரணந்தான் பதினாறாகும்
சோகமுற்றா ரிதையறியா ருலகத்தோர்கள்
சுகாதீத பூரணத்தைக் கண்ணிற்காணார்
பாகமுட னதனையறிந் துய்யவென்றாற்
பரிவாகி யேறிச்சிவ யோகம்பாரே. (2)

பாரேநீ மானிலத்தில் வல்லோர்கூடிப்
பயனறி யரனயன்மால் தன்னைத்தானும்
சீரான தெய்வமென்னப் பலவாறாகச்
செப்பினா ரதைநீயும் நம்பிடாமல்
காரேநீ மவுனமுற்று யிந்தநூலின்
கலையறிந்து நாடிநின்று நினைவோடுற்று
நேரேநீ பூரணத்தைப் பார்த்தாயானால்
நிச்சயமாய்த் தெரியுமடா மையந்தானே. (3)

தானென்ற பூதலத்திற் சித்தர்முத்தர்
தன்மையுடன் பூரணத்தைக் கண்டுதானும்
நானென்னு முடலைநம்பா திருந்தமார்க்கம்
நன்மறைக ளோதுகின்ற வுண்மைதோணும்
வானென்று மேலான பதினெண்பேரும்
மதிரவியே தெய்வமென்னச் சாற்றினார்கள்
கோனென்றும் சாதிபல வுயர்தாழ்வென்றும்
குவலயத்தை மயக்கிவிட்டார் பிழைக்கத்தானே. (4)

பிழைப்பதற்கு நூல்பலவாய்ச் சொல்லாவிட்டால்
பேருலகில் ஜீவனத்திற் கிடமொன்றில்லை
தழைப்பதற்குப் பரிபாசை யில்லாதாகிற்
றரணியிற் சிவஞானம் வெளியாமென்று
கழைப்பாகச் சொன்னதன்றி மற்றொன்றில்லை
காரணமுங் காரியமுந் தெரியாதார்க்கு
அழைத்துரைக்க யாரிருக்கா ரொருவரில்லை
அறிந்தவர்போற் பேசிடுவா ரறியார்தானே. (5)

அறியாம லலைந்தவர்கள் கணக்குண்டோ
அறிந்தடங்கி நின்றவர்கள் சிலரேயாகும்
தெரிந்துமெய்ப் பொருளறியா திருந்தோர்கோடி
தெளிவாய்நீ யிவர்களைப்போ லாகிடாமல்
பிரியாமற் சுழிமுனையிலே மனத்தையூணி
பேசரிய பூரணத்தில் வாசியேற்றிக்
குறிப்பாயோர் நினைவாகப் பார்க்கும்போது
குணமாக விருநான்கில் நான்குங்கூட்டே. (6)

கூட்டியபூ தினவன்றான் சித்தனாகுங்
குலவுகின்ற யீரெட்டுந் தோற்றமாகும்
நாட்டியே யீரிரண்டு தலத்திலப்பா
நலமான சீவனுட திரமைதானும்
மேட்டிமையா யிதுமூன்றும் பூரணந்தான்
மெல்லினமாய்க் கண்டுநின்று பார்க்கும்போது
தாட்டிகமாய்ச் சுழிமுனையிற் றிரும்பமாறி
தன்னிருப்பாஞ் சிங்குவையிற் றங்கும்பாரே. (7

தங்கியங்கே மூலமதி லுதித்தெழுந்து
தப்பாமற் சுழிமுனைபோய் மனம்பின்பற்று
பங்கமில்லாப் பகுதிமதி யிரண்டுமாறி
பக்குவமாய்ச் சுழிமுனையி லூதும்போது
சங்கையில்லா அங்கென்று சிங்கென்றுள்ளே
தகமையுடன் பூரணமாய் நின்றுகொண்டு
பொங்கமுடன் உங்கென்று ரேசித்தேதான்
பொருமையுடன் நங்கென்று ஊதுவாயே. (8)

ஊதிடுவ திடகலைபிங் கலையதன்னில்
என்றாகக் கூட்டிடவே யுறுதியாகும்
ஏதொன்று மறியாதார் பிதற்றியேதா
னெதிர்த்துவா தாடிடுவார் மேலோரோடு
வாதிடுவார் காரணகா ரியங்கள்காணார்
வல்லமைகள் மிகப்பேசி மகிழ்ந்துநாவால்
ஓதுவதொன் றுஞ்செய்கை வேறுமான
உபதேசஞ் செய்குருக்க ளொவ்வாதென்னே. (9)

ஒவ்வாதார் பலவேடம் பூண்டுகொண்டு
உரைசெய்வார் வயற்பிழைக்கச் சிறிதுமாண்பர்
செவ்வையில்லா மனிதர்களை மிரட்டிப்பேசி
செடமறியாச் சண்டாளத் தீயரானோர்
பவ்வமுறு மவனுரைக்குஞ் சொற்கேளாதே
படுபாவி யுடலுயி ரறியமாட்டான்
கவ்வைபெற யிவர்களினு லென்னவாகுங்
காரணகா ரியந்தெரிந்து பார்த்திடானே, (10)

இடகலைபிங் கலைசுழினை மூன்றுமொன்று
இகத்தினிலே பலர்கள்வெவ் வேறாய்ச்சொல்வர்
இடகலைபிங் கலைசுழினை யெதுவென்றாக்கால்
இன்பமுறுஞ் சோடசத்தின் பொருளதாகும்
இடகலைபிங் கலைசுழினை அரியயனோடீசன்
இதையுணரா தேங்கினர்கள் மாந்தர்தானும்
இடகலைபிங் கலைசுழினை யுச்சிநடுவாதி
இக்கலையை யறிந்துணர்ந்தவ் விடத்தில்நில்லே. (11)

நில்லென்று சொன்னதொரு ஆசான்வாக்கை
நிலைதவற விட்டாலே பலிதமாகா
அல்லவிதன் விபரமதைத் தெரியக்கேளு
அண்ணாக்கை யுண்ணாக்கி லயிக்கப்பண்ணி
நல்லாய ரவிமதிபூ ரணங்கண்மூக்கு
நானிலத்தில் வாய்செவியும் பரிசமெட்டும்
சொல்லாதே நடுவணையென் றிதற்குநாமஞ்
சொல்லிடுவார் கயிலாசஞ் சொர்க்கமென்றே. (12)

என்றேபற் பலவாக யியம்புவார்கள்
இந்திரபுரி வைகுண்ட கயிலாசந்தான்
நன்றேகன் யாகுமரி காசிசேது
நலமான மேகமொடு நாதமென்றும்
மன்றாகு மவுனமுட னாதியென்றும்
வல்லதொரு காற்றுடனே சூட்சமென்றும்
குன்றாத ஆதிநடு முடிவீதென்றும்
குணமுடைய வஸ்துபதி யிதுவென்பாரே. (13)

இதனுடைய பேருடனே யூருஞ்சொன்னேன்
இடகலைபிங் கலையினுட யிறுதிசொன்னேன்
பதியென்ற யிடமறிந்து பார்க்கச்சொன்னேன்
பண்பான சிவயோக பருதிசொன்னேன்
நிதிப்பெருக்கைப் போல்வாசி சேர்க்கச்சொன்னேன்
நேரான வழிபலருன் னூலிற்சொன்னேன்
கதிர்பெருகுஞ் சூட்சமதை வகுத்துக்காட்டிக்
கலங்காமல் நத்தியிருப் பிடஞ்சொன்னேனே. (14)

சொன்னேன்மெய்ஞ் ஞானநிலை பன்னைந்துக்குள்
துயரகலத் தனித்தனியே தொடர்ந்துபார்க்கில்
வின்னமன்றி தோணுமா நூலின்மார்க்கம்
விளம்பாதே யாவருக்கும் வெளியதாக
நன்னயமாய்க் கலைமாறு தறிந்துகொண்டு
நானுரைத்த மார்க்கமதில் நாட்டமாகி
உன்மனதிற் றெளிவதற்குச் சுருக்கிநன்றாய்
உரைத்தேனிப் பாடலது மொன்பானாறே, (15)

அகப்பேய்ச் சித்தர் பூரணஞானம் ௰௫.

முற்றிற்று.





கடவுள் துணை.

110 - வது.

# அகப்பேய்ச்சித்தர் பாடல்.

நஞ்சுண்ண வேண்டாமே அகப்பேய்
நாயகன் றன்பெறவே
நெஞ்சு மலையாதே அகப்பேய்
நீயொன்றுஞ் சொல்லாதே. (1)

பராபர மானதடி அகப்பேய்
பரையாக வந்ததடி
தராதல மேழ்புவியும் அகப்பேய்
தானே படைத்ததடி. (2)

நாத வேதமடி அகப்பேய்
நன்னடங் கண்டாயே
பாதஞ் சத்தியடி அகப்பேய்
பரவிந்து நாதமடி. (3)

விந்து நாதமடி அகப்பேய்
மெய்யாக வந்ததடி
ஐந்து பெரும்பூதம் அகப்பேய்
அதனிட மானதடி. (4)

நாலு பாதமடி அகப்பேய்
நன்னெறி கண்டாயே.
மூலமான தல்லால் அகப்பேய்
முத்திய தல்லவடி. (5)

வாக்காதி யைந்தடியோ அகப்பேய்
வந்தவகை கேளாய்

ஓக்காள மானதடி — அகப்பேய்
உண்மைய தல்லவடி. (6)

சத்தாதி யைந்தடியோ — பய
சாக்கிர மானதடி
மித்தைய தாகுமடி — அகப்பேய்
மெய்யது சொன்னேனே.

வசனடி யைந்தடியோ — அகப்பேய்
வண்மையாய் வந்ததடி
தெசநாடி பத்தடியோ — அகப்பேய்
திடனிது கண்டாயோ. (8)

காரணமான தெல்லாம் — அகப்பேய்
கண்டது சொன்னேனே
மாரணங்கண்டாயே — அகப்பேய்
வந்தவிதங்க ளெல்லாம். (9)

ஆறாறு தத்துவமும் — அகப்பேய்
ஆகமஞ் சொன்னதடி
மாறாக மண்டலமும் — அகப்பேய்
வந்தது மூன்றடியே. (10)

பிருதிவி பொன்னிறமே — அகப்பேய்
பேதமை யல்லவடி
உறுவது நீரடியோ — அகப்பேய்
உள்ளது மில்லையடி. (11)

தேயு செம்மையடி — அகப்பேய்
திடனிது கண்டாயே
வாயு நீலமடி — அகப்பேய்
வான்பொருள் சொல்வேனே. (12)

வானமஞ் சடியோ — அகப்பேய்
வந்தது நீகேளாய்
ஊனம தாகாதே — அகப்பேய்
உள்ளது சொன்னேனே. (13)

அகார மத்தனையும் — பய
அங்கென் றெழுந்ததடி
உகாரங் கூடியடி — அகப்பேய்
உருவாகி வந்ததடி. (14)

மகார மாயையடி — அகப்பேய்
மலமது சொன்னேனே
சிங்கார மூலமடி — பய
சிந்தித்துக் கொள்வாயே. (15)

வன்னம் புவனமடி — அகப்பேய்
மந்திர தந்திரமும்
இன்னமுஞ் சொல்வேனே — அகப்பேய்
இம்மென்று கேட்பாயே. (16)

அத்தி வாரடியே — அகப்பேய்
ஐம்பத்தோ ரட்சரமும்
மித்தையாங் கண்டாயே — அகப்பேய்
மெய்யென்று நம்பாதே. (17)

தத்துவ மானதடி — அகப்பேய்
சகலமாய் வந்ததடி
புத்தியுஞ் சொன்னேனே — கப்பேய்
பூதவடி வல்லவோ (18)

இந்தவிதங்க ளெல்லாம் — அகப்பேய்
எம்மிறை யல்லவடி
அந்தவிதம் வேறே — அகப்பேய்
ஆராய்ந்து காணுயோ. (19)

பாவந் தீரவென்றால் — அகப்பேய்
பாவிக்கலாகாதே
சாவது மில்லையடி — அகப்பேய்
சற்குரு பாதமடி (20)

எத்தனை சொன்னாலும் — அகப்பேய்
என்மனந் தேறுதே

சித்து மசத்துவிட்டு அகப்பேய்
சேர்ந்துநீ காண்பாயே. (21)

சமய மாறுமடி அகப்பேய்
தன்னாலே வந்ததடி
அமைய நின்றவிடம் அகப்பேய்
ஆராய்ந்து சொல்வாயே. (22)

ஆராறு மாகுமடி அகப்பேய்
ஆகாது சொன்னேனே
வேறே யுண்டானால் அகப்பேய்
மெய்யது சொல்வாயே. (23)

உன்னையறிந் தாக்கால் அகப்பேய்
ஒன்றையுஞ் சாராயே
உன்னை யறியும்வகை அகப்பேய்
உள்ளது சொல்வேனே. (24)

சரிகை யாகாதே அகப்பேய்
சாலோகங் கண்டாயே
கிரிகை செய்தாலும்
கிட்டுவ தொன்றுமில்லை. (25)

யோக மாகாதே அகப்பேய்
உள்ளது கண்டாக்கால்
தேக ஞானமடி அகப்பேய்
தேடாதே சொன்னேனே. (26)

ஐந்தலை நாகமடி பய
ஆதாயங் கொஞ்சமடி
இந்தவிஷந் தீர்க்கும் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. (27)

இறைவ னென்பதெல்லாம் பய
எந்தவித மாகும்
அறையவே நீகேளாய் அகப்பேய்
ஆனந்த மானதடி (28)

கண்டுகொண் டேனே அகப்பேய்
காதல்விண் டேனே
உண்டுகொண் டேனே அகப்பேய்
உள்ளது சொன்னாயே. (29)

உள்ளது சொன்னாலும் அகப்பேய்
உன்னாலே காண்பர்யோ
கள்ளமுந் தீராதே அகப்பேய்
கண்டாருக் காகுமடி. (30)

அறிந்து நின்றாலும் அகப்பேய்
அஞ்சார்கள் சொன்னேனே
புரிந்த வல்வினையும் அகப்பேய்
போகாதே யுன்னைவிட்டு. (31)

ஈசன் பாசமடி அகப்பேய்
இவ்வண்ணங் கண்டதெல்லாம்
பாசம் பயின்றதடி அகப்பேய்
பரமது கண்டாயே. (32)

சாத்திர சூத்திரமும் அகப்பேய்
சங்கற்ப மானதெல்லாம்
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாழ்மலங் கண்டாயே. (33)

ஆறுகண் டாயோ அகப்பேய்
அந்த வினைதீர
தேறித்தெளி வதற்கே அகப்பேய்
தீர்த்தமு மாடாயே. (34)

எத்தனை காலமுந்தான் அகப்பேய்
யோகமிருந் தாலென்
முத்தனு மாவாயோ அகப்பேய்
மோட்சமு முண்டாமோ. (35)

நாச மாவதற்கே அகப்பேய்
நாடாதே சொன்னேனே.

பாசம் போனாலும் அகப்பேய்
    பசுக்களும் போகாதே. (36)

நாண மேதுக்கடி அகப்பேய்
    நல்வினை தீர்ந்தாக்கால்
காண வேணுமென்றால் அகப்பேய்
    காணக் கிடையாதே. (37)

சும்மா யிருந்துவிடாய் அகப்பேய்
    சூத்திரஞ் சொன்னேனே
சும்மா யிருந்தவிடம் அகப்பேய்
    சுட்டது கண்டாயே. (38)

உன்றனைக் காணாதே அகப்பேய்
    ஊனுள் நுழைந்தாயே
என்றனைக் காணாதே அகப்பேய்
    இடத்திலே வந்தாயே. (39)

வான மோடிவரில் அகப்பேய்
    வந்து பிறப்பாயே
தேனையுண் ணாமல் அகப்பேய்
    தெருவோ டலைந்தாயே. (40)

சைவ மானதடி அகப்பேய்
    தானாக நின்றதடி
சைவ மில்லையாகில் அகப்பேய்
    சலம்வருங் கண்டாயே. (41)

ஆசை யற்றவிடம் அகப்பேய்
    ஆசாரங் கண்டாயே
ஈசன் பாசமடி அகப்பேய்
    எங்ஙனச் சென்றாலும். (42)

ஆணவ மூலமடி அகப்பேய்
    அகாரமாய் வந்ததடி
கோணு முகாரமடி அகப்பேய்
    கூடப்பிறந் ததுவே. (43)

ஒன்று மில்லையடி அகப்பேய்
உள்ள படியாச்சே
நன்றிலை தீதிலையே அகப்பேய்
நாணமு மில்லையடி. (44)

சும்மா யிருந்தவிடம் அகப்பேய்
சுட்டது சொன்னேனே
எம்மாய மீதறியேன் அகப்பேய்
என்னையுங் காணேனே. (45)

கலைக ளேதுக்கடி அகப்பேய்
கண்டார் நகையாரோ
நிலைக ளேதுக்கடி அகப்பேய்
நீயார் சொல்வாயே. (46)

இந்து வமிர்தமடி அகப்பேய்
இரவி விஷமடியே
இந்து வெள்ளையடி அகப்பேய்
இரவி சிவப்பாமே. (47)

ஆணல்ல பெண்ணல்லவே அகப்பேய்
அக்கினி கண்டாயே
தாணுவு மிப்படியே அகப்பேய்
சற்குரு கண்டாயே (48)

என்ன படித்தாலும் அகப்பேய்
எம்முறை யாகாதே
சொன்னது கேட்டாயே அகப்பேய்
சும்மா யிருந்துவிடு. (49)

காடு மலையுமடி அகப்பேய்
கடுந்தவ மானாலென்
வீடுவெளி யாமோ அகப்பேய்
மெய்யாக வேண்டாமோ. (50)

பாரத்திலே சென்றாலும் அகப்பேய்
பாரிலே மீளுமடி

பரத்துக் கடுத்தவிடம் அகப்பேய்
பாழது கண்டாயே. (51)

பஞ்ச முகமேது அகப்பேய்
பஞ்சு படுத்தாதே
குஞ்சித பாதமடி அகப்பேய்
குருபாதங் கண்டாயே. (52)

பங்க மில்லையடி அகப்பேய்
பாத மிருந்தவிடம்
கங்கையில் வந்ததெல்லாம் அகப்பேய்
கண்டு தெளிவாயே. (53)

தானற நின்றவிடம் அகப்பேய்
சைவங் கண்டாயே
ஊனற நின்றவர்க்கு அகப்பேய்
ஊனமொன் றில்லையடி. (54)

சைவ மாருக்கடி அகப்பேய்
தன்னை யறிந்தவர்க்கே
சைவ மானவிடம் அகப்பேய்
சற்குரு பாதமடி. (55)

பிறவி தீரவென்றால் அகப்பேய்
பேதம் பண்ணாதே
துறவி யானவர்கள் அகப்பேய்
சும்மா யிருப்பார்கள். (56)

ஆ ரலைந்தாலும் அகப்பேய்
நீயலை யாதையடி
ஊ ரறிந்தவர்கள் அகப்பேய்
ஒன்றையும் நாடாரே. (57)

தேனாறு பாயுமடி அகப்பேய்
திருவடி கண்டவர்க்கே
ஊனாறு மில்லையடி அகப்பேய்
ஒன்றையும் நாடாதே. (58)

வெள்ளை கறுப்பாமோ அகப்்பேய்
வெள்ளியுஞ் செம்பாமோ
உள்ளது வுண்டோடி அகப்பேய்
உன்னாணை கண்டாயே. (59)

அறிவுண் மன்னுமடி அகப்பேய்
ஆதார மில்லையடி
அறிவு பாசமடி அகப்பேய்
அருளது கண்டாயே. (60)

வாசியி லேறியடி அகப்பேய்
வான்பொருள் தேடாயோ
வாசியி லேறினும் அகப்பேய்
வாராது சொன்னேனே. (61)

தூராதி தூரமடி அகப்பேய்
தூரமு மில்லையடி
பாராமற் பாரடியோ அகப்பேய்
பாழ்வினை தீரவென்றால். (62)

உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்
வுள்ளது சொன்னேனே
கண்டார்கள் சொல்லாரே அகப்பேய்
கற்பனை யற்றதடி. (63)

நாலு மறைகாணு அகப்பேய்
நாதனை யார்காண்பார்
நாலு மறைமுடிவில் அகப்பேய்
நற்குரு பாதமடி. (64)

மூல மில்லையடி அகப்பேய்
முப்பொரு ளில்லையடி
மூலமுண் டானால் அகப்பேய்
முத்தியு முண்டாமே. (65)

இந்திர சாலமது அகப்பேய்
எண்பக் கொருபகமம்

மந்திர மப்படியே அகப்பேய்
வாயைத் திறவாதே. (66)

பாழாக வேணுமென்றால் அகப்பேய்
பார்த்ததை நம்பாதே
கேளாமற் சொன்னேனே அகப்பேய்
கேள்வியு மில்லையடி. (67)

சாதி பேதமில்லை அகப்பேய்
தானவ னானவர்க்கு
ஓதியுணர்ந் தாலும் அகப்பேய்
ஒன்றுந்தா னில்லையடி. (68)

சூழ வானமடி அகப்பேய்
சுற்றி மரக்காவில்
வேழ முண்டகனி அகப்பேய்
மெய்யது கண்டாயே. (69)

நானு மில்லையடி அகப்பேய்
நாதனு மில்லையடி
தானு மில்லையடி அகப்பேய்
சற்குரு வில்லையடி. (70)

மந்திர மில்லையடி அகப்பேய்
வாதனை யில்லையடி
தந்திர மில்லையடி அகப்பேய்
சமய மழிந்ததடி. (71)

பூசை பாசமடி அகப்பேய்
போதகங் கோஷ்டமடி
ஈசன் மாயையடி அகப்பேய்
எல்லாமு மிப்படியே. (72)

சொல்ல லாகாதே அகப்பேய்
சொன்னாலுந் தோஷமடி
இல்லை யில்லையடி அகப்பேய்
யேகாந்தங் கண்டாயே. (73)

தத்துவந் தெய்வமடி அகப்பேய்
சதாசிவ மானதடி
மற்றுள்ள தெய்வமெல்லாம் அகப்பேய்
மாயை வடிவாமே. (74)

வார்த்தை யல்லவடி அகப்பேய்
வாசாம கோசரத்தில்
ஏற்ற தல்லவடி அகப்பேய்
என்னுடன் வந்ததல்ல. (75)

சாத்திர மில்லையடி அகப்பேய்
சலனங் கடந்ததடி
பார்த்திட லாகாதே அகப்பேய்
பாவனைக் கெட்டாதே. (76)

என்ன படித்தாலென் அகப்பேய்
ஏதுதான் செய்தாலென்
சொன்ன விதங்களெல்லாம் அகப்பேய்
சுட்டது கண்டாயே. (77)

தன்னை யறியவேணும் அகப்பேய்
சாராமற் சாரவேணும்
பின்னையறிவ தெல்லாம் அகப்பேய்
பேயறி வாகுமடி. (78)

பிச்சை யெடுத்தாலும் அகப்பேய்
பிறவி துலையாதே
இச்சை யற்றவிடம் அகப்பேய்
எம்மிறை கண்டாயே. (79)

கோல மாகாதே அகப்பேய்
குதற்கமு மாகாதே
சால மாகாதே அகப்பேய்
சஞ்சல மாகாதே. (80)

ஒப்பனை யல்லவடி அகப்பேய்
உன்னுணை சொன்னேனே

அப்புட னுப்பெனவே அகப்பேய்
ஆராய்ந் திருப்படியே. (81)

மோட்சம் வேண்டார்கள் அகப்பேய்
முத்தியும் வேண்டார்கள்
தீட்சை வேண்டார்கள் அகப்பேய்
சின்மய மானவர்கள். (82)

பாலன் பிசாசமடி அகப்பேய்
பார்த்தாக்கால் பித்தனடி
கால மூன்றுமல்ல அகப்பேய்
காரிய மல்லவடி. (83)

கண்டது மில்லையடி அகப்பேய்
காண்பவ ருண்டானுல்
உண்டது வேண்டடியோ அகப்பேய்
உன்னுணை சொன்னேனே (84)

அஞ்சையு முண்ணுதே அகப்பேய்
ஆசையும் வேண்டாதே
நெஞ்சையும் விட்டுவிடு அகப்பேய்
நிஷ்டையிற் சாராதே. (85)

நாதாந்த வுண்மையிலே அகப்பேய்
நாடாதே சொன்னேனே
மீதான சூதானம் அகப்பேய்
மெய்யென்று நம்பாதே. (86)

ஒன்றோ டொன்றுகூடில் அகப்பேய்
ஒன்று கெடுங்காணே
நின்ற பரசிவமும் அகப்பேய்
நில்லாது கண்டாயே. (87)

தோன்றும் வினைகளெல்லாம் அகப்பேய்
சூனியங் கண்டாயே
தோன்றுமற் றேன்றிவிடும் அகப்பேய்
சுத்தவெளி தனிலே. (88)

பொய்யென்று சொல்லாதே அகப்பேய்
போக்கு வரத்தானே
மெய்யென்று சொன்னக்கால் அகப்பேய்
வீடுபெற லாமே. (89

வேத மோதாதே அகப்பேய்
மெய்கண்டோ மென்னாதே
பாதகம் பாதே அகப்பேய்
பாவித்துப் பாராதே. (90)

அகப்பேய்ச் சித்தர் பாடல் கூ௰,

முற்றிற்று.





ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகம்மதுசாயபுபுரம் அருளானந்தப் பிடகர் அவர்கள் குமாரர் சங்கரலிங்கபண்டிதர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

குருவே துணை.

111 - வது:

கடேந்திரநாதரென்ற
விளையாட்டுச் சித்தர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான சூத்திரம் ௰அ.

சுத்தநிர்க் குணசுகிர்த சொரூபானந்த
சுயஞ்சோதி வடிவமதாய்ச் சொல்லற்கெட்டா
தத்துவிதத் துற்றமெய்ப் பொருளதாகி
அண்டபிண்ட வைம்பூதத் தோற்றமாகி
சத்திசிவ ஜீவபர வான்மாவாகித்
தன்மயமாந் தந்தைதா யாவுமாகிச்
சித்தரகத் தேற்றியநற் றீபமாகித்
திகழ்பிர்ம வஸ்தெனையுங் காப்பதாமே. (1

ஆமப்பா பராபரமே நாதவிந்தென்
றறிந்தேனான் ஜீவனாயி ரதுவேயாச்சு
போமப்பா புத்தியினா லறிந்தோன்சித்தன்
பூதலத்திற் கோடியிலே யொருவனப்பா
காமப்பால் தனையொடுக்கி நிலையில்நின்று
கருத்துடனே பூரணத்தை மனதிலுன்னி
நேமப்பா நின்றதுவே சூட்சம்பார்த்து
நேரான முத்தியின்ற னிலையைக்காணே. (2)

காணப்பா ஞானமது தெரியவென்றால்
கண்மணியே பொய்களவு கொலைசெய்யாதே
தோணாமற் கடுங்கோபம் புலைசெய்யாது
துன்மார்க்கர் நேசமதைத் தள்ளுதள்ளு
வீணான காரியத்திற் சென்றிடாமல்
மெய்ஞ்ஞானங் கண்டறியும் வழியைப்பாரு
நாணாமல் வஞ்சகங்கள் செய்திடாது
நானிலத்தில் யோகமதைத் தெரிந்துதேறே. (3)

தேறப்பா நால்வேத சாஸ்திரத்தைத்
திறமாகப் பார்த்துநீ தெளிந்துகொள்ளு
பாரப்பா சூட்சநிலை யொருவர்காணார்
பக்குவமாய்க் கண்டுகண் டுணர்ந்துதேறு
ஆரப்பா அறிவார்க ளுண்மைதன்னை
அறிந்துணர்வன் கோடியிலே யொருவனுண்டு
நேரப்பா கலைமுழுது முணர்ந்தேனென்று
நீநிலத்திற் றெருத்தெருவாய்ப் புலம்புவாரே. (4)

புலம்புவார் வெகுபேர்க ளுண்மைகாணார்
புத்தியுள்ளோர் கண்டுகொள்வார் சூட்சமார்க்கம்
நலம்பெறவே தெய்வமதை வணங்கவேண்டும்
நாட்டினிலுந் தமனாக நடக்கவேண்டும்
தலம்புகழத் தன்மமது செய்யவேண்டும்
தவத்தருமை யின்னதென வறியவேண்டும்
பெலம்பெறவே யோகவழி யறியவேண்டும்
பேரான குருவருளைப் பேணுவாயே. (5)

பேணவே யோகவழி மார்க்கமப்பா
பேசியமுன் பெரியோர்க ளருளினாலே
காணுவா யவர்களெல்லா மெங்கேசென்றார்
காடேறிக் கூடழிந்து போய்விட்டாரோ
தோணார்கள் மாயையெலாம் வெளிமயக்கு
சுத்தமுடன் சிவபரம் நிலையைக்காணார்
தாணுவாய் உயிர்பரத்தி லேகும்போது
தங்காமற் போனதுயிர் சடத்தைவிட்டே. (6)

சடத்தைவிட்டுப் போமுயிரை யாருங்காணார்
சாகசமாய் நரகசொர்க்க மிரண்டுங்காணார்
இடமறிந்து நின்றபடி யிருக்கமாட்டார்
யெம்பிரான் திருநடன மெவருங்காணார்
திடமுடனல் வழியதனைக் கண்டுதேறித்
தெளிந்தறிந்து சாஸ்திரத்தைத் திறமாய்ப்பாரு
கடத்திலுற்ற கருவதனுக் கமைந்தவிந்து
கண்டவர்க ளறிவார்மற் றோர்காணாரே. (7)

மற்றவர்க ளறிவாரோ வாசிமார்க்கம்
மைந்தனே சொல்லுகிறேன் மர்மமாக
உற்றதொரு பிறவிகளோ கோடாகோடி
உயிர்பரத்திற் சேருமடா வுண்மையாக
நற்றவர்சொல் வாக்கியத்தா லெளிதாய்க்கண்டு
நாடிநிற்பாய்ப் புழுக்கூட்டை நம்பிடாதே
பெற்றதுபின் டத்திலுள தண்டத்தாகும்
பேச்சறிந்து குருவருளி லிருந்திடாயே. (8)

இருந்திடுவ தெதனிலென்றால் மைந்தாகேளு
ஏகபர வஸ்துவிலே கவனமுற்று
அருந்தவமாய் வாசிகொண்டு சுழினையேறி
அனுதினமு மனதுகொண்டு பரத்தைநாடிப்
பொருந்தவே குண்டலியி னிடத்தைப்போற்றிப்
போற்றரியப் பூரணத்தில் மனதைநாட்டித்
திருந்தமதி யமுதமுண்டு வாசியேறித்
தினந்தினமும் யோகநிலை மார்க்கம்பாரே. (9)

பாரேநீ தந்தைதாய் விளையாட்டாகும்
பத்தினியும் புத்திரரும் விளையாட்டாகும்
நேரேதான் வீடுமனை விளையாட்டாகும்
நேர்த்தியாம் பதார்த்தபண்டம் விளையாட்டாகும்
காரேநீ மாடாடு விளையாட்டாகும்
காசுபணம் பொன்முதலாம் விளையாட்டாகும்
சீரேநீ யென்பதுவும் விளையாட்டாகுந்
தெரிந்துசெய்யுந் தொழிலனைத்தும் விளையாட்டாமே. (10)

ஆமேதான் கண்டதெல்லாம் விளையாட்டென்று
அறிந்துகொள்வாய் புத்திரனே யறிவுள்ளோனே
நாமேதான் சொல்லுகிற மார்க்கந்தன்னை
நன்மையுட னேயறிந்து நடக்கவேணும்
வாமேநீ வாசியென்ற புரவியேறி
மகத்தான சுழினைபற்றி யறிவிற்சேர்த்து
தாமேதா னவ்வறிவிற் சொக்கிநின்று
சந்ததமு மெய்ஞ்ஞான யோகம்பாரே. (11)

யோகமது பார்க்கையிலே கனலெழுந்தால்
உத்தமனே சொல்லுகிறேன் சாந்தமாக
வேகமுடன் மூதண்டக் கணுவைநீக்கி
வேரதன்மே லுற்றதொரு தோகைபோக்கிப்
பாகசுத்தி செய்துபன்னூற் பலந்தானப்பா
பண்பாக யிடித்தெடுத்துப் பாண்டத்திட்டு
தாகமுடன் படிநாலு தண்ணீர்விட்டு
தன்மையுடன் படியரையாய் வற்றக்காய்ச்சே. (12)

காய்ச்சியதோர் கசாயமதை வடித்தெடுத்துக்
காராவின் பாலிலரைப் படியுங்கூட்டி
கூச்சமின்றி சீனியது பலந்தானைந்து
குணமுள்ள கற்கண்டு பலமதைந்து
தாச்சியிலா பேரீச்சமுந் திரியினோடு
தானெடுப்பாய் விரைநீக்கி பலமொன்றொன்று
பாச்சியே கரைத்துநன்று யடுப்பிலேற்றி
பக்குவமாய்ப் பாகுபத மாகத்தானே. (13)

தானேதான் நிலப்பனைசக் கரைக்கிழங்கு
தன்மைகச கசாவகைக்கு அரைப்பலந்தான்
மானேதா ளிசப்பத்திரி வாய்விளங்கம்
வல்லதொரு அரத்தைதிரி கடுகினோடு
கோனேநீ யிவையாறும் வகைக்கரைக்கால்
குணமான வால்மிளகு திரிபலாதி
நானேசொல் சாதிக்காய் சாதிபத்திரி
நலமல்லி சீரகமு மோமங்கூட்டே. (14)

கூட்டடா மாச்சக்காய் சிறுதேக்கோடு
கோஷ்ட மக்ராகாரங் கருவாப்பட்டை
வெட்டுசடா மஞ்சிகஸ் தூரிமஞ்சள்
உழுவைசன லவங்கம்வகைக் கிருவிராகன்
போட்டிடா யேலமொன்று சோம்புமூன்று
பொங்கமுடன் வறுத்திடித்து வடியேசெய்து
ஆட்டிதனிற் கல்மதமுங் குங்குமப்பூ
அப்பாகோ ரோசனையும் வறக்கிடாகே. (15)

வறுத்திடா திம்மூன்றும் பொடித்துக்கொள்ளு
மற்றமருந் தின்றானைப் பாகிற்றாவி
சிறுத்தடா கொள்ளமட்டு மாவினெய்வார்
சிறந்தபதந் தனிலிரக்கிக் கொம்புத்தேனிற்
பொருத்துகோ ரோசனையுங் குங்குமப்பூ
பொங்கமுடன் றானெடுத்துப் போட்டுக்கொண்டு
திருத்தமுடன் கல்மதமுஞ் சேர்த்துத்தேனை
செல்லமட்டும் விட்டுநன் றாய்ப் பிசைந்துதீரே. (16

தீரேநீ லேகியத்தைப் பதனம்பண்ணித்
தீரமுடன் மண்டலந்தான் கொண்டாரானால்
பாரேநீ வாதமெங்கே குன்மமெங்கே
பழியான காசமெங்கே சூலைநோயெங்கே
வாரேனா னென்றுவரு மூலமெங்கே
வயிற்றுளைவு காச்சலெங்கே தலைநோயெங்கே.
நேரேதான் லேகியத்தைக் கண்டபோதே
நின்றவிடந் தெரியாம லோடுந்தானே. (17)

தானேதா னைவென்று சமாதிகூடி
தனலெழுந்து நந்திதனிற் சாடும்போது
பானான வுடல்மெலிந்து வாசியேற்ற
பலங்குறைந்தா லென்னசெய்வார் பாழேபோவார்
ஆனால்நாம் சொல்லியலே கியத்தைக்கொண்டு
அனுதினமும் வாசியிலே யேறலாகும்
பானான ஞானிக்கோ பத்தியமில்லை
பாருலகோர்க் கிச்சாபத் தியந்தான்முற்றே. (18)

விளையாட்டுச் சித்தர் ஞான சூஸ்திரம் ௰௮,

முற்றிற்று.



மதுரை பாத்திரக்கடைவியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இச்சாஸ்திரம் அச்சிடலானது.



உ

முருகன்றுணை.

112-வது:

கடேந்திரநாதரென்ற

# விளையாட்டுச்சித்தர்பாடல்

———:(o):———

கண்ணிகள்.

ஆதிசிவ மானகுரு விளையாட்டை - யா
னறிந்துரைக்க வல்லவனோ விளையாட்டை
சோதிமய மானசத்தி யென்றாத்தாள் - சுய
சொரூபத் தடங்கிநின்ற விளையாட்டை. (1)

பார்தனி லுள்ளவர்க்கு விளையாட்டாய் - ஞானம்
பற்றும்வழி யின்னதெனச் சொன்னதினால்
சீர்பெறுஞ் சித்தர்களு மென்னைவிளை - யாட்டுச்
சித்தனென்றே அழைத்தார்க ளிவ்வுலகில். (2)

இகபர மிரண்டுக்குஞ் சரியாகும் - இதை
இன்புடன் சொல்லுகிறேன் தெம்புடனே
சகலமும் விளையாட்டாய் பிர்மமுனி - முன்பு
சாற்றினு ரெந்தனுக்கி துண்மையுடன். (3)

நானென்று சொல்வதும் விளையாட்டே - இந்த
நானிலத் திருப்பதுவும் விளையாட்டே
தானென் றறிவதுவும் விளையாட்டே - பெற்ற
தாயென் றுரைப்பதுவும் விளையாட்டே. (4)

தாய்தந்தை கூடுவதும் விளையாட்டே - பூவிற்
றநயனாய் வந்ததுவும் விளையாட்டே
மாயையாய் வளர்ந்ததும் விளையாட்டே - பத்து
வயது தெரிந்ததுவும் விளையாட்டே. (5)

பெற்றபிள்ளை யென்றதுவும் விளையாட்டே - தந்தை
பேரிட் டழைத்ததுவும் விளையாட்டே

மற்றதை யுணர்வதுவும் விளையாட்டே - இந்த
வையகத் திருப்பதுவும் விளையாட்டே. (6)

பெண்டுபிள்ளை யென்பதுவும் விளையாட்டே - எங்கும்
பேரோங்க வாழ்வதுவும் விளையாட்டே
கண்டுபொருள் தேடுவதும் விளையாட்டே - பணம்
காசுவட்டி போடுவதும் விளையாட்டே. (7)

மாடிமனை வீடுவாசல் விளையாட்டே - என்றன்
மனைவிமக்க ளென்பதுவும் விளையாட்டே
தேடிவைத்த பொருளெல்லாம் விளையாட்டே - இச்
செகத்திற் றிரிவதுவும் விளையாட்டே. (8)

ஆடுமாடு தேடுவதும் விளையாட்டே - சதுர்வே
தாகமநூ லாய்வதுவும் விளையாட்டே
கூடுவிட்டுப் போகுமுயிர் விளையாட்டே - உற்றார்
கூடியிகப் பேசுவதும் விளையாட்டே. (9)

பிணமா யிருப்பதுவும் விளையாட்டே - அதைப்
பெற்றோர்கண் டழுவதும் விளையாட்டே
குணமாய்க் கழுவியதும் விளையாட்டே - யிமங்
கொண்டுபோய்ச் சுட்டதுவும் விளையாட்டே. (10)

செத்தோர்க் கழுவதுவும் விளையாட்டே - சுடலை
சேரும்வரை யழுவதும் விளையாட்டே
மெத்தஞானம் பேசுவதும் விளையாட்டே - குளித்து
வீடுவந்து மறப்பதும் விளையாட்டே. (11)

வீணாட் கழிவதுவும் விளையாட்டே - மிக
வெட்கமற்றுத் திரிவதும் விளையாட்டே
தோணாமற் சுற்றுவதும் விளையாட்டே - எல்லாம்
சுதந்தர மென்பதுவும் விளையாட்டே. (12)

கனவுநினை வென்பதுவும் விளையாட்டே - இக்
காசினியோ ருழல்வதும் விளையாட்டே
நினைவாய்ச்செய் வஞ்சகமும் விளையாட்டே - மிக்க
நிதிநிலம் பெண்ணென்பதும் விளையாட்டே. (13)

பெண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - அவர்
பின்னூற் றிரிவதுவும் விளையாட்டே
மண்ணாசை யென்பதுவும் விளையாட்டே - நல்ல
வயல்தோட்டம் புஞ்சையெல்லாம் விளையாட்டே. (14)

சீராக வாழ்வதுவும் விளையாட்டே - செப்பொன்
சேகரித்து வைப்பதுவும் விளையாட்டே
நோய்ப்பொய் சொல்வதுவும் விளையாட்டே - நெஞ்சில்
நினைக்காமற் செய்வதுவும் விளையாட்டே. (15)

பந்துஜன மென்பதெல்லாம் விளையாட்டே - லோகப்
பற்றுடனே வாழ்வதுவும் விளையாட்டே
சொந்தநிதி தேடுவதும் விளையாட்டே - இதைச்
சொற்பனம்போ லெண்ணுவதும் விளையாட்டே. (16)

யோகம்வந்து மகிழ்வதும் விளையாட்டே - அத
னுண்மைதெரி யாததுவும் விளையாட்டே
சாகசஞ் செய்வதுவும் விளையாட்டே - ஒருவர்
தஞ்சமென்று நினைப்பதும் விளையாட்டே. (17)

கோடிபணந் தேடுவதும் விளையாட்டே - அதைக்
குழிவெட்டிப் புதைப்பதுவும் விளையாட்டே
தேடியலைவதும் விளையாட்டே - மனந்
தேறுதலாய்த் திரிவதுவும் விளையாட்டே. (18)

கற்பனையுங் கபடமும் விளையாட்டே - அதைக்
காணாமல் மறைப்பதுவும் விளையாட்டே
சற்பங்க ளாட்டுவதும் விளையாட்டே - ஒரே
சாதனையாய்ப் பேசுவதும் விளையாட்டே. (19)

நம்பினோருக் காசைசொல்லல் விளையாட்டே - பின்பு
நட்டாற்றிற் கைவிடுதல் விளையாட்டே
கும்பிக விறைதேடுதல் விளையாட்டே - கடன்
கொடுத்தாரைக் கெடுத்தலும் விளையாட்டே. (20)

இச்சையால் மயங்குவதும் விளையாட்டே - அதை
இயல்பாய்ப் பறப்பதுவும் விளையாட்டே

பிச்சையெடுத் துண்பதுவும் விளையாட்டே - பொல்லாப்
பேய்போ லலைவதுவும் விளையாட்டே. (21)

முத்தி யறியாததும் விளையாட்டே - மேலாம்
மோட்சங் கருதாததும் விளையாட்டே
பத்திகொள் ளாததுவும் விளையாட்டே - மனம்
பாழிற் செலுத்தினதும் விளையாட்டே. (22)

கேடு வருவதுவும் விளையாட்டே - எதற்கும்
கெம்பிரம் பேசுவதும் விளையாட்டே
பாடு வருவதுவும் விளையாட்டே - மனப்
பற்றுதலாய் நிற்காததும் விளையாட்டே. (23)

பாசவினை போக்காததும் விளையாட்டே - பெண்
பாவாயென் றழைப்பதும் விளையாட்டே
நேசமாய்த் தேடுவதும் விளையாட்டே - காணாமல்
நிமிஷமிரே னென்பதுவும் விளையாட்டே. (24)

நித்திரையிற் சொக்குவதும் விளையாட்டே - அதில்
நினைவுதடு மாறுவதும் விளையாட்டே
சித்தியடை யாததுவும் விளையாட்டே - ஞானம்
சிந்தியா திருப்பதுவும் விளையாட்டே. (25)

சொற்பனமுண் டாவதுவும் விளையாட்டே - மனம்
சொக்கா திருப்பதுவும் விளையாட்டே
விற்பனங்கண் டறிவதும் விளையாட்டே - வந்த
விதமறி யாததுவும் விளையாட்டே. (26)

பகலிர வென்பதுவும் விளையாட்டே - இகப்
பயனடைந் திருந்ததும் விளையாட்டே
சகவாழ்விற் சிக்குவதும் விளையாட்டே - யோக
சாதன மறியாததும் விளையாட்டே. (27)

புத்திமா னென்பதுவும் விளையாட்டே - இப்
பூதலத்தோ ரேத்துவதும் விளையாட்டே
வெற்றி யடைவதுவும் விளையாட்டே - நான்
வீரனென்று சொல்வதுவும் விளையாட்டே. (28)

தவநிலை தோணாததும் விளையாட்டே - ஞான
தத்துவந் தெரியாததும் விளையாட்டே
பவமது போக்காததும் விளையாட்டே - ஏக
பரவெளி காணாததும் விளையாட்டே. (29)

யோகந் தெரியாததும் விளையாட்டே - அத
னுண்மைதனைக் காணாததும் விளையாட்டே
பாக மறியாததும் விளையாட்டே - இகப்
பற்றறுக்கா திருப்பதுவும் விளையாட்டே. (30)

பெரியோரைக் காணாததும் விளையாட்டே - கண்டு
பேரின்பஞ் சாராததும் விளையாட்டே
தெரியா திருந்ததுவும் விளையாட்டே-சிவ
தேகநிலை பாராததும் விளையாட்டே. (31)

அஞ்ஞானமுட் கொண்டதுவும் விளையாட்டே - பே
ரறிவாற் றெரியாததும் விளையாட்டே
மெய்ஞ்ஞானங் காணாததும் விளையாட்டே - இந்த
மேதினியே போதுமெனல் விளையாட்டே. (32)

விளையாட்டுச் சித்தர் பாடல் கூஉ,

முற்றிற்று.





மதுரை வடக்கு லயன் தெரு, இரண வைத்தியம் பெரியசாமிப் பண்டிதரிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இச் சாஸ்திரம் அச்சிடலானது.

முருகன் றுணை.

11-வது:

கடேந்திரநாதரென்ற

# விளையாட்டுச்சித்தா பாடல்

## கண்ணிகள்.

ஆதியான மூலத்தி லமர்ந்திருந்த சோதிதான்
வாதியானோன் கண்டறிய வாய்க்குமிது மந்திரம். (1)

சுக்குச்சுக்கு வெள்ளைக்கல் சுண்ணாம்பு வெள்ளைக்கல்
காசுக் கிரண்டுகல் கருணைக்கிழங்கடா கருணைக்கிழங்கடா. (2)

குடுகுடு வானைக்கல் கோமான்கும் பானைக்கல்
தேசதேச வாசக்கல் தெக்குநல்ல சீமைக்கல். (3)

பக்குவ மாகாமுன் பார்த்தெடுத்துக் கொண்டபின்
சுக்குச்சுண் ணாம்புக்கல் சோதிக்கல் சோதிக்கல். (4)

வாகடதோகட மதூரக்கல் வைப்புச்சுண் ணாம்புக்கல்
பாகுடன் செய்தால் பசுமைக்கல் பசுமைக்கல். (5)

மேலாஞ்சாதி பாரடா வெட்டவெளியைத் தோடா
நாலாஞ்சாதி யாகாது நமக்குப்பருப்பு வேகாது. (6)

தாய்போலு மாகுமே தங்கைபோலு மாகுமே
சேய்போலு மாகுமே திரும்பப்பெண்டி ராகுமே. (7)

வாலையான சிறுபெண்ணும் வயதுவந்த தோர்பெண்ணும்
பாலைமங்கை தானடா பருவம்வந்த வழலைதான். (8)

வழலைவாங்கிக் கொள்ளடா மருந்துகூடன் போடடா
குழலியர்க்கு உணர்வதாகக் கொடுத்ததைநீ வாங்கடா. (9)

வாங்கினமு லத்தையே மருந்துபோட்டு வைப்பையே
தூங்கிடாமற் சேநீர்கொண்டு சுருக்கினிலுப் பாக்கடா. (10)

நீறுநீ ரெடுத்துமே யிரண்டையுமொன் றாக்கியே
சீறுடனே காய்ச்சியே செய்தகொரு உப்படா. (11)

கோவானூர் தன்னிலே கொழுந்துபோல் முளைத்ததை
ஏகாளிகள் போகுமுன் னெடுத்துவந்து காய்ச்சடா. (12)

காய்ச்சியுப் பெடுத்துநீ கஞ்சியுப்பு சேர்த்துநீ,
மாட்சிமையாய் மல்லிகை மலர்ந்ததுபோ லாமடா. (13)

ஆதியுப்பு மந்தவுப்பு மிந்தவுப் பெடுத்துநீ
சோதியுப்பு மாச்படா சுருக்கமிது தானடா. (14)

கண்டறிந்து கொள்ளடா கணக்கறிந்து விள்ளடா
கொண்டறிந்து தள்ளடா குருவறிந்த கள்ளடா. (15)

சூதங்கட்ட லாகுமே சொர்ணஉப்பு மாகுமே
வாதம்வாத மென்றறிந்த வாதியேநீ பாரடா. (16)

விட்டகுறை யானவன் மேதினியில் வந்தவன்
தொட்டகுறைக் காரனுக்குத் தோற்றுமேமெய்ஞ் ஞானமே. ()

வேறு.

ஏகாந்தம் பழம்பழம், எழுத்தில்லாதவன் தலைச்சுமை.
பெண்டில்லாதான் பெருவழி, பிள்ளையில்லாதான் கைவீச்சு.
காய்த்தவாழை பூப்பூக்கும், காயாதவாழை தானுமில்லை.
பாய்ச்சினபயறு தலையெடுக்கும், பாய்ச்சாதபயறு தானுமில்லை.
இறைத்தகிணறு தானூறும், இறையாக்கிணறு தானுமில்லை.
விதைவிதைத்தால்முளைத்தேறும், விதையாநிலத்திலொன்றுமில்லை
அழுதபிள்ளை பால்குடிக்கும், அழுகாதபிள்ளைக் கேதுமில்லை.
உழுதநிலந்தான் பயரேறும், உழுகாதநிலத்தி லொன்றுமில்லை.
ஆசையுள்ளானுக்கு ரோசமில்லை, ஆசையிலானுக் கொன்றுமில்லை

---

இன்னு மற்றவைகளை மறுபதிப்பிற்சேர்த்து அச்சிட்டு வெளியிடக்கூடும்

மதுரை வடக்கு லயன்தெரு இரணவைத்தியம் பெரியசாமிப் பண்டிதரிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதிபின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

பரமபதி துணை.

114 - வது:

பிடிநாக்கீசர் திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய சூத்திரம் ௱௪.



சித்திதரு மூல விநாயகன் காப்பு
முத்திதரு ஞான மோனமே காப்பு
புத்திதரு வேதப் பொருளே காப்பு
வெத்திதரு மோன விமலிகாப் பாமே. (1)

ஊக்கம தென்னவென் றுணர்வுட னூர்ந்து
ஆக்கையின் செல்வத்தை யறிந்து தெளிந்திடு
நோக்கையிற் கண்டு நடங்கா திருந்திடு
தாக்கையி லெல்லாந் தளராது தானே. (2)

தால மிசையில் தழைத்திட தேகந்தான்
கால மிசையிற் கண்டுஉண் டவர்க்கு
ஆல மிசையில் அடர்ந்ததோர் நோய்கட்கு
சீல மிசையில் சீர்த்துவ மென்னதே. (3)

எண்ணிடச் சுக்கு யிலகுஞ் சதகுப்பி
வண்ணமாந் திப்பிலி வதிசெய மாஞ்சியும்
கண்ணலங் கார கருஞ்சீ ரகமும்
தண்ணிடநற் சீரகந் தான்குரோ சாணியே. (4)

குரோசாணி பத்திரி குணமுள்ள யேலக்காய்
விரோதம தில்லா வியலுருஞ் சர்க்கரை
நிரோதட மாக நிருப்பதோர் களஞ்சிடை
சிரோதன மாகச் சேர்த்து வறுத்திடே. (5)

துவளப் பொன்னிறம் போலாக்கிப் பொடித்துத்
தவளம தான ஆவின்னெய் யரைப்படி
பவள மருந்தைப் பதமாகத் தூவியே
நவளம் பெருக நடத்தி யெரிப்பதே. (6)

தீயே கொடுத்துத் திறமாய் வடித்தபின்
நீயே மெதுவாம் நிதானித்துச் செய்திடு
தாயே பணிந்து தாஞெரு பரணியில்
ஆயே நினைத்து அடைத்து மகிழ்ந்திடே. (7)

மகிழ்ந்தொரு வார்த்தை வசனித்தல் கேளு
முகிழ்வித மான முயன்றஜீ வராசி
புகழ்சிறு சான்ப ழும்பல மைந்து
இகழ்விலா கற்கண் டிசைப்பதோ ரினிதே. (8)

இனிப்புற வைந்து பலமது வாகும்
கனிப்புற யாவும் கலந்திவை தனிலே
முனிவுட னூட்டி முயர்ச்சிய தாகத்
தனிவுடன் களஞ்சி தன்னள வாமே. (9)

தன்னிறை கொண்டால் தடுத்திடும் பித்தத்தை
வன்னிரை யான வலிமை யின்னனும்
சொன்னிறைப் படியே துலேவது நியாயம்
பொன்னிரை யென்று போதித்த லாகுமே. (10)

போதித்தல் குன்மம் பொருமவிரைச்சலும்
சாதித்த வர்க்கு க்ஷபத்துக்கோ ரேணியாம்
மாதித்த லாக வருஷிக்கும் பாகத்தால்
சோதிக்க லாக்ச் சொல்லுமிப் பாகமே. (11)

பாலும் நெய்யும் பலன்பெற வுண்டிடு
மேலுக வந்த பிணியழல் சீரலும்
ஏலுக வென்ன விருக்கில் நலமாம்
நூலுஞ் சொல்லும் நுவண்டிட யாவுமே. (12)

யாவென வென்று யருளதைத் தேடு
கோவென வொன்று குடிகொண் டிருக்குமாம்
தாவென நித்தந் தனித்தது பேரின்பம்
போவென நாமத்தால் புகாதது வினைகளே. (13)

வினைப்பய னாலே விளைந்தது தேகம்
தனையறிந் தோர்க்குச் சகலமுஞ் சித்தியாம்
அனைதனைத் தெரிந்தோ ரருளுடன் றானும்
மனைதனி லிருந்து மகிழ்வது முற்றே. (14)

பிடிநாக்கீசர் வைத்திய சூத்திரம் ௰௪,

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடைவியாபாரம் ந. ரா. ம. கணபதியாபிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

பரமேஸ்வரி துணை.

115 - வது.

காசிபமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# சூத்திரம் உச.



காப்பு.

ஆதியாம் வேதாந்தப் பொருளாய்நின்ற
அன்பான மயேஸ்பரனைத் தொழுதுபோற்றிச்
சோதியாய் விளங்குகின்ற ஆயியாதம்
துணையாகக் கருத்தில்வைத்துச் சூத்திரம்போல்
நீதியாய் நடக்குமெந்தன் குருவின்பாதம்
நினைவுதனில் மறவாமல் நேர்மையோடு
வாதியெனும் பேர்படைத்துச் சித்தர்கட்கு
மனுமுறையின் படியாக வசனித்தேனே. (1)

வசமான மிங்கிலியம் விராகன்ரெண்டு
வளமான பூரமது விராகன்ரெண்டு
எசமான வீரமது விராகன்ரெண்டு
இதமான சூதமது விராகன்ரெண்டு
நிசமான செந்தூரம் விராகன்ரெண்டு
நிறுத்தொன்ருய் அயக்கரண்டி தன்னிலிட்டு
புசமான சென்னெருஞ்சி ரசமுந்தானும்
பொடடெனவே முருங்கைப்பூ ரசமுஞ்சேரே. (2)

சேர்க்கவே முலைப்பாலுங் கூடக்கூட்டித்
திறமாக வொருசாமம் சுருக்குத்தாக்கு
மார்க்கமாய்ச் சுண்டியே மெழுகுபோலாம்
மைந்தனே வழித்தெடுத்துக் கல்வத்திட்டு
தீர்க்கமா யொருசாமம் தேன்விட்டாட்டி
திறமான மயனம்போ லாகும்பாரு
மார்க்கமாய்க் கொம்பினுட சிமிழிலேதான்
வைத்துநீ மருந்ததனைப் பதனம்பண்ணே. (3)

பண்ணியே கணபதிக்கு மயேஸ்பரிக்கும்
பாங்காகப் பூசைசெய்து யெடுத்துக்கொண்டு
என்னமோ வென்றுநீ மயங்கவேண்டாம்
இதமான பஞ்சகுத மெழுகுதன்னை
உன்னிதமாய்ச் சித்தரெல்லாம் ஒளித்துவைத்தார்
உண்மையுட னுந்தனுக்குச் சொல்லிவிட்டேன்
ஜன்னியென்ற பதின்மூன்று மிதன்பேர்சொல்ல
தலைகாட்டா தோடுமப்பா அறிந்துபாரே. (4)

பாரப்பா வனுப்பானம் சொல்லக்கேளாய்
பாங்காக முலைப்பாலில் கொடுப்பாயாகில்
நேரப்பா சன்னிபதின் மூன்றுந்தீரும்
நிச்சயமாய்த் தோஷங்க ளேழுந்தீரும்
சாரப்பா பிசுவுமுத லோடிப்போகும்
சகலசுரம் பித்தமுதல் சாந்தமாகும்
கூரப்பா யென்மகனென் றுனக்குச்சொன்னேன்
கூறாதே மூடருக்குக் குறிப்பாய்த்தாமே. (5)

ஆமப்பா வச்சரவல்லிக் கியாசந்தன்னில்
அப்பனே சூலைமுதல் முடக்குவாய்வு
வேமப்பா கிரந்தியொடு அரையாப்பெல்லாம்
வெகுசுருக்காய் மிளகுபொடி தன்னிற்கொள்ள
தாமப்பா தீர்ந்துவிடும் பத்தியந்தான்
சரியான கறப்பானின் பதார்த்தமாகா
நாமப்பா சொல்லிவிட்டோம் வெளியதாக
நவகோடி சித்தர்களு மெச்சுவாரே. (6)

மெச்சியதோர் அவிழ்தத்தைக் கொண்டபேர்க்கு
வேதனைக ளில்லையப்பா உலகிற்றானும்
உச்சிதமாய் மார்நோயும் குண்டலியின்வாய்வு
ஒருபக்கஞ் சூலைமுதல் யெண்பதுந்தான்
அச்சமுற்று பயந்தோடு முலகிற்றானும்
அப்பனே யிதைவெளியிற் சொல்லிடாதே
பச்சமுடன் பாவிகட்குக் கிடையாதப்பா
பாலகனே இன்னம்நான் சொல்லக்கேளே. (7)

கேளப்பா வலியஞ்சுந் தீர்ந்துபோகும்
கெடியான காசிகா பிடைவாய்வு
மீளப்பா வெள்ளுள்ளித் தயிலந்தன்னில்
விதமான பணவிடைதான் கொடுத்தாயானால்
கோளப்பா மகருஜன்னி தொண்ணூற்றாறும்
கொடியஜன்னி பிரமிப்பு தோஷந்தீரும்
நாளப்பா வனுப்பான மறிந்துசெய்தால்
நாடாது பலபிணிகள் பயந்துபாரே. (௮)

பயந்துபார் சூதவலிக் கிரதந்தன்னில்
நன்றாகப் பத்துநாள் கொடுத்தாயானால்
பயந்துபார் யிளையொடு யிருமல்காசம்
நாடாது மந்தாரை காசம்போகும்
பயந்துபார் விக்கலொடு கக்கல்காசம்
நலமான ரத்தமுதற் காசந்தீரும்
பயந்துபார் வாதசிலேற் பனரோகங்கள்
நடுங்கிடுமே சுபவாத சன்னிதானே. (௯)

தானென்ற திப்பிலிதேன் தசனுட்கொள்ள
தவறாது வண்கெடி குஷ்டந்தீரும்
கானென்ற புண்சூலை கிரந்திசூலை
கருமவியா திகளெல்லாங் கழன்றுபோகும்
மானென்ற குழம்பொன்று சொல்லுகின்றேன்
மைந்தனே யின்னூலை மடையருக்கு
கோனென்ற ஆணுவத்தாற் கொடுத்திடாதே
நலமாக சொல்லிவிட்டேன் கருதியோடே. (10)

சுருதிதனிற் சொன்னபடிக் கரியநாத
சுத்தமுள்ள குழம்பதனைப் புகலக்கேளு
நிருதியைப்போற் பிரகாச மாகநோயை
நீக்கிவிடுங் கண்டறிந்துக் கொள்வாயப்பா
கருதியதோர் காரியம் ரசமும்நேராய்க்
கணக்குடனே வகைக்கொரு பலமதாக
பெருகிவிட உருக்கிநன்றாய்ச் சேர்த்துக்கொண்டு
பின்பதனில் பெருங்காயங் கூடச்சேரே. (11)

பெருங்காயம் நாபியொடு காந்தங்கெந்தி
பேசரிய நெரிவிஷமும் கரியசிரம்
திருந்தசுக்குத் திப்பிலியும் வாயுவிளங்கம்
தென்புடனே வகைக்கிவொரு பலமதாக
விருந்ததுபோல் சுத்திசெய்து யெல்லாங்கூட்டி
வியல்புடனே நேர்வாள மிடையேசேர்த்து
வருந்தமே வுத்தமத்தா ளிசச்சாற்றுலே
வயணமுடனொருசாம மரைப்பீர்தானே. (12)

அரைத்தபின்பு தேங்காய்ப்பால் விட்டுநன்றாய்
அதிவிதமா யொருசாம மரைத்தபின்னர்
உரைத்ததொரு தேங்காயின் வோட்டைச்சுட்டு
வுயர்பெறவே முன்பாலி லுரைத்துமைபோல்
விரைத்துவிடக் கலக்கமட்டும் விட்டு ஆட்டு
வினவுடனே யெடுத்துநல்ல சிமிழில்வைத்துக்
கரைத்துவிடா தபடிக்குப் பார்த்துமேலாய்க்
கண்ணுற்றே பதனமிடு பகர்வதாமே. (13)

பகர்வுடனே சன்னிபதி மூன்றுக்குந்தான்
பாய்ச்சிவிடு அளவாக இஞ்சிச்சாற்றில்
சுகம்பெறவே குமரகண்ட வலிக்குத்தானும்
சுகுணமுடன் தேனதிலே நீட்டிப்பாரு
தகமையுடன் சுரங்கள்முத லானதிற்குத்
தப்பாமல் சுக்குக்கியா ழத்திலீய்வாய்
அகமகிழ நாய்கடிகள் விஷத்துக்கெல்லாம்
அன்பான சம்பழத்தின் சாற்றில்தானே. (14)

சாற்றிவிடு குன்றியிடை கண்ணிலிட்டுச்
சர்வபரம் பரையருளால் நீங்கிப்போகும்
போற்றியே குளிர்சுரத்துக் கப்பாநீயும்
பிரபலிக்க கொடேர்வலிக்கிக் கியாழத்தீய்வாய்
மாற்றிவிடு மனந்தநோய் வணுகிடாது
மறவாம லனுப்பானந் தெரிந்துசெய்வாய்
ஏற்றியென சொற்றவறு து நடந்தோர்கட்கு
எப்போதுங் குறைகளில்லை பத்தியம்பாரே. (15)

பாரப்பா மிளகுநீர் சாதமூட்டுச்
பலமான வுப்பதனை வறுத்துக்கூட்டு
பேரப்பா கோதுமையின் கஞ்சிகூட்டு
பிரியமுடன் வெந்நீரைச் சேர்க்கச்சொல்லு
நேரப்பா கடுகுநெல் லெண்ணெயாகா
நிதானித்துக் கைபாகம் நேர்ந்துபாரு
ஆரப்பா வறிவார்க ளிம்முறையை
அகமகிழ வுந்தனுக்குச் சொல்லினேனே. (16)

அகமகிழ முன்சொன்ன மருந்துக்கெல்லாம்
அப்பனே சுத்திசெய்யும் விதத்தைக்கேளு
இகமுடனே நேர்வாளம் நெரிவிடந்தான்
எருமையின்றன் சாணத்திற் சுத்திசெய்து
தகமையுடன் யெலுமிச்சம் பழத்தின்சாற்றில்
தப்பாது ஊறவைத்து யெடுத்துக்கொண்டு
சுகமான காந்தத்தைப் பதனமாகச்
சூட்டியே கொல்லனுட உலையிற்காய்ச்சே. (17)

காய்ச்சியே கோமயத்தில் வைத்துக்கொண்டு
கருவான கெந்தகத்லைதச் சட்டிவிட்டு
மாட்சிமையாய் வெள்ளாட்டுக் கொழுப்பெடுத்து
வசமாக வுருக்கியே பசுவின்பாலில்
வாச்சுதென வூற்றியே சூதந்தன்னை
மைந்தனே கற்கண்டி லரைத்துக்கொண்டு
பேச்சென்ன வென்றுசொல்லிக் காரியத்தைப்
பெருமையுள்ள கற்றாழை ரசத்திற்றனே. (18)

தானென்ற கற்றாழைச் சாற்றிலேதான்
தகமையுடன் காரீயங் காய்ச்சிவூத்து
வேனென்ற சரக்குகளில் விதமாய்த்தானே
விகசிதமாய்ச் சுத்திசெய்து யெடுத்துக்கொண்டு
மானென்ற கரியநா தக்குழம்பை
வகையுடனே செய்தெடுத்துப் பதனமாகத்
தேனென்ற படியுள்ளே கொடுக்கத்தானுந்
திறமான பெரியநோய் தீர்க்குந்தானே. (19)

பெரியதோர் சன்னிகட்குப் பேர்பெறக் கலிக்கங்கேளு
சிறியநற் கலிக்கமொன்று சிறப்பதாய்ச் சொல்லுகின்றேன்
அறியவே நேர்வாளத்தை ஆடவுடன் சுத்திசெய்து
உரியநற் பருப்புதன்னை உண்மையா யுரைப்பீர்தாமே. (20)

உரைத்திடுசெம் பழச்சாற்றி லுற்பன மாகவேதான்
விரைவுடன் சன்னிகட்கு வியல்புடன் கண்ணில்தீட்டு
மறைத்திடுங் குணத்தைமாற்று மலறிடுஞ் சீரல்போகும்
திறையிலா தகலுமப்பா சீர்பெற அறிவீர்தாமே. (21)

சீர்பெற விண்ணோர்பாகஞ் செப்புவேன் மகனேஐயா
பார்பெற வெற்றிலைச்சாறு பண்புட னெடுத்துக்கொண்டு
கார்பெற நேர்வாளத்தைக் கனிவுட னுரைத்துத்தானும்
தார்பெறக் கண்ணிற்போட சன்னிபோ யறிவுண்டாமே. (22)

அறிவுடன் விரட்டிதன்னில் ஆடவுட னெருக்கம்பாலை
உரியதோ ராட்டியூட்டி உலரவே ரவியிற்போட்டு
பிரியமாய்க் காயவைத்து பலமுறைப் பாலையூட்டி
நெறியுடன் புடத்தைப்போட்டு நிலைக்கவே யெடுப்பீர்தானே.()

எடுத்துநற் பற்பந்தன்னை யிணக்கமாய் சிமிழில்வைத்து
அடுத்திடும் சன்னிதோஷம் அதிவிதத் தலைநோயிற்கும்
தொடுத்திடு ரேணுவாகத் துரிதமாய் நாசிக்கேற்ற
சடுத்தம தானநோயை சாதித்து விரட்டுமுற்றே. (24)

காசிப முனிவர் சூத்திரம் உச,

முற்றிற்று.





மதுரை வடக்குவாசல் யானைக்கல்லெதரு வித்வான் மு. குழந்தைவேலுப்பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

முருகன் துணை.

116 - வது:

பதஞ்சலியார் திருவாய்மலர்ந்தருளிய

# சூத்திரம் ௰௱.

ஆதியாய் வந்துதித்த தேவிபாதம்
　　அனுதினமும் போற்றிசெய்து அஷ்டபாகம்
சோதியாம் பூரணத்தின் விபரங்கேளு
　　சுகமான எச்சினிபின் கொடிவேர்தன்னைப்
பேதியா தாக்கினையாங் கழலைவாங்கி
　　பிசகாம லண்டமுக டதனிலேதான்
வேதியா தேநீயுந் தமரைப்போட்டு
　　விடுமதிலே ஐந்துபலச் சூதந்தானே. (1)

தானென்ற நாகவல்லிச் சாற்றையூற்றித்
　　தருகாதே வாளப்ப தாலேமூடி
ஏனென்ற சிலையது யேழுஞ்செய்து
　　இதமாக வாலைதனைத் தியானம்பண்ணிக்
கோனென்ற நவகோண மிட்டுநன்றாய்க்
　　குறிப்பாகச் செவ்வரளிப் பூவைச்சாத்தி
வானென்ற சுத்தியுடன் வாமம்வைத்து
　　வளமான ஆக்கினையால் பூசைபண்ணே. (2)

பண்ணியிதை யெடுத்துகல சத்தில்வைத்துப்
　　பரிவாகப் பூப்புடத்திற் றயிலம்வாங்கி
ஒண்ணியே தயிலமதைப் பதனம்பண்ணி
　　உத்தமனே பனுக்கமது செய்யக்கேளு
எண்ணிவே ரசமதுதான் கழஞ்சிக்கப்பா
　　இதமாகச் சாதிலிங்கம் பாதிகூட்டி
வண்ணியதோர் தம்பனமாம் யமனியாகும்
　　மற்குறித்துப் பேதனத்தைச் சொல்லக்கேளே. (3)

கேளப்பா பேதமரி தாரங்கூட்டுக்
கெடிகூனி மித்திரியாம் நாவிகூட்டு
ஆளப்பா ஏவமஞ்ஞ சிலையைக்கூட்டு
அழுகாம்வே டனைகோரோ சனையுங்கூட்டு
நாளப்பா மோகனங்கெந் தகத்தைக்கூட்டு
நலமான கெவுனமது துருசுதானும்
வாளப்பா முன்னுரைத்த தெரிசகாரி
வளமான மித்துருவைக் கூட்டியாட்டே. (4)

ஆட்டையிலே நவசுத்தி யாகும்பாரு
அப்பனே சூதமிடை தயிலந்தானும்
நீட்டையிலே வெண்ணெய்தான் கையில்வைத்து
நேராகக் காரமிட்டே வுருக்கிக்கொண்டு
மாட்டையிலே குளிகையது ஜெயமேயாச்சு
மகத்தான எட்டெட்டுத் தொழிலுமாகும்
பூட்டையிலே வேதையது நூற்றுக்கொன்று
புகழ்படவே மாத்துமது பத்துமாச்சே. (5)

ஆச்சப்பா தொடக்கினியைச் சொல்லலாகா
தறிவுடையோர் தங்களுக்கே யாகுமுண்மை
மாச்சப்பா கண்டுதெளி மதங்கரேநீ
மற்றொருத்த ருக்குமுரை யாதேபாரில்
ஏச்சப்பா வியாக்கிரம ரிதுவேசெய்தார்
இதமான அகஸ்தியரும் யானுங்கண்டேன்
மூச்சப்பா வெளியிலிதைச் சொன்னாயாகில்
மூதண்டம் வேகுமடா நரகந்தானே. (6)

தானான திதுவல்லோ சித்தர்யோகி
தாண்டவமே புரிவர்பெரி யோர்களப்பா
வானான மதங்கரேநா னுனக்குச்சொன் னேன்
வாய்திறந்து சொல்லார்நா தாக்கடானும்
ஏனான வாலைதிரி புரையைத்தானும்
இதயமதி விதமாகப் பூசிப்பாய்நீ
கோனான குமரியவ ளாட்டஞ்செய்வாள்
குறிப்பறிந்து வாலையுட பூசைபண்ணே. (7)

பண்ணிவிக் குளிகைசெந் தூரமாகும்
பரிவாகக் குன்றிமணி யிடைதோறும்
மண்ணிலே மண்டலந்தா னுண்டபோது
வருவான காயசித்தி வழுத்தப்போகா
தண்ணிலே மலசலமும் வேதையாகும்
தாம்பூர மொருகோடி ரதிதமாகும்
கண்ணியே சமாதந்து விருக்குமென்று
நாதாந்த மனநிலைமை யடங்கும்பாரே. (8)

நிலைமைபெற்ற வச்சிரகண்டி மாத்திரைதன்னை
நிலையான பெரியோர்கள் செய்தபாகம்
கலையாமற் சித்தரவின் பாகம்போற்றிக்
களிக்கவே விளம்புகிறேன் கருத்துள்ளோர்க்கும்
சிலையான தேகத்தைத் தேற்றுதற்குச்
சிவசிவா மாத்திரைதா னொன்றுவேணும்
அலையாமற் செய்துவைத்துக் கொண்டால்தன்னை
யாகுமென்றே செப்புகிறே னாசிற்றுமே. (9)

செப்புதற்கு லகுவதா யிருக்குமப்பா
செய்துபா ரப்பவல்லோ தெரியும்பாகம்
ஒப்புதற்கு லிங்கமது விராகனெட்டு
ஓதரிய பூரமது விராகனொன்று
வெப்புதற்கு வீரமரைக் கால்விராகன்
வினையமாய்த் தவறாமல் முடிக்கப்பாரு.
தற்புதற்கு இல்லையப்பா ரசசெந்தூரம்
தயவாக விராகனிடை யிரண்டதாமே. (10)

இடைகண்டு தப்பாமற் கல்வத்திட்டு
எலுமிச்சம் பழச்சாற்றால் சாமமாட்டித்
தடையின்றி யிருசிபதை நன்றாய்ச்சிவித்
தானடித்த சாறதனு லரைத்தோர்சாமம்
விடையிதற்கும் பேச்சுமுண்டோ சொல்லுதற்கு
விருதுகொடிக் கட்டிநின்று ஆடலாம்பார்
படையான நோய்களது தீர்வதற்குப்
பட்சமாய்ச் சொல்லுகின்ற பாகங்கேளே. (11)

பாகமுள்ள விரைவாத மைந்துநாளாம்
பகர்மேகக் குடைச்சலுக்கு மூன்றுநாளாம்
வேகமுள்ள சுரத்துக்கு மூன்றுவேளை
வினையான புண்புரைக்குப் பத்துநாளாம்
தாகமுள்ள நடுக்கத்துக் கிரண்டுநாளாம்
தடங்கல்செய் மூர்ச்சைவாய் வதனுக்கப்பா
நேகவளைக் கின்றகணு வாதத்திற்கு
நீயுஞ்சர்க் கரையதனிற் கொடுத்துப்பாரே. (12)

கொடுத்துவிடு வெள்ளையரை யாப்புதீரக்
குணங்கண்ட மாலையுட தோஷத்திற்கும்
எடுத்ததொரு சன்னிபதி மூன்றுக்குந்தான்
இதையெடுத்துக் கொடுத்துப்பார் சீக்கிரத்தில்
அடுத்ததொரு பிணிகளெல்லா மகன்றுபோகும்
அனுப்பானந் தன்னிலின மறிந்தேயீய்ந்தால்
சடுத்தமிட்ட வெகுநோய்கள் நீங்குமப்பா
தரணியிற்சா தித்துநின்ற வர்க்குத்தானே. (13)

பத்தியம்.

நின்றபடி சிறுபயறு அவரையாகும்
நிதானித்து ஆட்டிறைச்சி வத்தலாகும்
நன்றியுள மிளகுநீர் துவரையாகும்
நலமான காடைமுருங் கப்பிஞ்சாகும்
கன்றுள்ள ஆவின்பாற் கஞ்சியாகும்
கனத்ததொரு கோதும்பைக் கஞ்சியாகும்
வென்றியரைக் கீரைச்சர்க் கரையுமாகும்
விளங்கவே பார்த்தறிந்து கொடுக்கலாமே. (14)

இதற்கு ஸ்நான எண்ணெய்.

அறிந்தபடி சொல்லுகிற விபரங்கேளு
அன்பான நல்லெண்ணெய் படிகாலப்பா
செறிந்ததொரு நறுப்பட்டை துளசிப்பட்டை
செவ்வையுள்ள வெள்ளுள்ளி மிளகுமஞ்சள்
செறிந்ததொரு கரியவேப் பிலையினீர்க்கு
சேகரித்து வகைக்கொவ்வோர் பலமதாகச்
சிறந்ததொரு மருந்தையெல்லா மிடித்தரைமைபோல்
சீராக எண்ணெய்தனி லிட்டுக்காய்ச்சே. (15)

காய்ச்சியே தலைக்கிட்டுச் சீக்காய்தேய்த்துக்
    களிக்கவே வெந்நீரில் ஸ்நானஞ்செய்ய
ஏச்சிநின்ற தேகத்தைக் குணமதாக்கும்
    எம்பிரான் றுணையதனாற் குறைவொன்றில்லை
ஆச்சுதே அதிசயமா மிந்தப்போக்கு
    ஆரறிவார் பெரியோர்க்குத் தெரிந்தவித்தை
பூச்சியமாய் வைத்திதனைக் கொடுத்தபேர்க்குப்
    புண்ணியமும் நன்மைமிகப் பொருந்துமாதி. (16)

பதஞ்சலியார் சூத்திரம் யசு.

முற்றிற்று.





மதுரை பாத்திரக்கடை வியாபாரம் ந. ரா. ம. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

பரமேஸ்வரி துணை.

117 - வது.

சட்டைமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# வாதசூத்திரத்திரட்டு உா.

காப்பு.

சூத்திர மோது முன்னே சொல்கிறேன் கணேசன் காப்பு
சாத்திரம் நிறைந்து பொங்கிச் சராசர மெங்குந் தானுய்த்
தோத்திரப் பொருளுந் தானுய்ச் சொல்லற்ற மவுன மற்றுப்
போத்துறப் புறம்பு முள்ளான் பூரணன் காப்புத் தானே.

குருவான பூரணின் மயமேலியா
குவட்டிலுள்ள சித்தரெல்லாங் கூடிக்கொண்டு
தருவான யெந்நாலிற் றீட்சைமார்க்கம்
சாதகமா யிருநூறுங் கிழித்தாரையா
உருவான வாதத்திற் பத்துநூறு
உறவான நிகண்டில்பனி ரண்டுநூறு
கருவான கற்பத்தி லொன்றேநூறு
கைவிட்ட ஞானத்தி லிரண்டுநூறே. (1)

நூறுன இருபத்தி யைந்துநூறு
நூலுமொரு கோர்வையதாய் வைத்துக்கொண்டு
தேறுன சித்தருடன் வாதுசெய்தார்
திறந்தப்பா பாடினர்கள் திருட்டுவாதம்
கூறுன வாதத்தில் வழலைமார்க்கம்
குழிவெட்டி மூடியேயுப் பெடுக்கச்சொன்னார்
வீறுன மடபதிகள் கருவையெல்லாம்
வெட்டவெளி யாய்த்திறந்து வீசலேனே. (2)

விசுகிறேன் சூத்திரத்திற் சங்கராமிகள்
    விதியெல்லாம் வாதமய மாசூட
விசுகிறேன் உலகெலாம்பொன் மயமாய்ப்போக
    விளைந்துகித்த ருலகத்தில் மெத்தவாக
விசுகிறேன் சித்தரெல்லா மிதைத்துமேக்க
    வேதாந்த மூலகுரு மிகவேமெச்ச
விசுகிறேன் வாதத்தி லாதியென்ன
    வெட்டவெளி சவுக்காரம் விளம்பக்கேளே. (3)

சவுக்காரவைப்பு.

கேளப்பா சவுக்காரஞ் செய்யுமார்க்கம்
    கெடியான ஊசரமோ படிதானெட்டு
நீளப்பா கற்சுண்ணம் படிதானிரண்டு
    நேராகக் கல்லுப்புப் படிதானொன்று
ஆளப்பா அமுரிபடி பதினறுக்குள்
    ஆச்சரிய மிதையெல்லாங் கரைத்துவைத்துக்
கேளப்பா சொல்லுகிறேன் தெளிவைவாங்கிக்
    குமுறவே காய்ந்தபின்பெள் ளெண்ணெய்வாரே. (4)

வார்த்தெரிக்கத் திரண்டுவரும் பலத்தில்நீகேள்
    மக்களே எடுத்துருட்டி விளாங்காய்போலக்
கோர்த்தெரிக்க வெண்ணெய்சவுக் காரமாகும்
    குறுகாதே கெடுகாதே உண்டைசெய்து
பார்த்தெரித்துப் பதத்தோடே பாங்காய்ப்பண்ணு
    படபடத்துப் பண்ணுதே இளகிப்போகும்
மூர்த்தெரிப்பு முதிர்ந்தாக்கா லுதிர்ந்துபோகும்
    முறையோடே சவுக்கார வுண்டைசெய்யே. (5)

செய்கையிலே சித்தருமிப் படியேசெய்வார்
    ஜெகத்திலே இதைவிட்டு உலகத்தோர்கள்
மைகையிலே விளக்கெண்ணெய் இலுப்பையெண்ணெய்
    வாகான குருத்திஎண்ணெய் புங்கிஎண்ணெய்
கைக்கையிலே சவுக்காரஞ் செய்வாரப்பா
    காசுக்கா காதுகல கலத்துப்போகும்
வைகையிலே தப்பும்வண்ணானுக்காகும்
    வாதத்துக் காகாது மக்காள்பாரே. (6)

பாரப்பா யிதையெடுத்து வாதியெல்லாம்
பாங்காகக் கட்டிச்சுண் ணாத்தில்வைத்து
நேரப்பா தண்ணியிட அரக்குப்போல
நிமிஷத்தில் கலகலத்து உருகிப்போகும்
சேரப்பா சாத்திரங்கள் பொய்யென்பார்கள்
செகத்திலே தேவியுட தீட்சைபெற்ருேர்
தூரப்பா அவருடைய பிலத்தினுலே
சூட்சமாய் யெண்ணெயைத்தான் கழற்றுவாரே. (7

சவுக்காரச் சுண்ணம்.

கழத்தியல்லோ வெண்கருவா லரைத்துக்கட்டிக்
கைமுறையாய்ச் சுண்ணும்பிற் புடமுந்தீர்ந்து
தழத்தியல்லோ சீனத்தின் சுண்ணமூட்டிச்
சாதகமாய்ப் புடம்போட்டுச் சுண்ணஞ்செய்வார்
உலத்தியல்லோ யெடுத்துகடுங் காரமேற்றி
ஊதியல்லோ வீரமிட்டுச் சுண்ணும்பாக்கி
வழத்தியல்லோ உப்பெடுத்துக் கட்டுவார்கள்
மகத்தான தேவியுட வாதங்காணே. (8)

காணப்பா இத்தனைதான் பாடுபட்டுக்
கைமுறையாய் வழலைநன்ருய் வெளுப்பேருது
தோணப்பா உப்புநன்ருய்ச் சுண்ணமாக
தொடுகுறிக்கோ செயநீர்க்கோ சுருக்குப்போதா
ஊணப்பா யிதனுலே சரக்குக்கட்டி
ஓட்டினு லாறேழு மாத்துக்காணும்
தூணப்பா துரும்பாகுந் துரும்புந்தூணுஞ்
சொற்பெரிய தேவியுட வரத்தாலாச்சே. (9)

சுண்ணம்.

வரம்பெற்ற வாமியல்லோ மகத்தாம்வாதி
வைத்தெடுக்க நல்லெண்ணெய் சவுக்காரத்தை
உறம்பெற்ற கடுஞ்சுண்ண மாகச்சொல்வேன்
ஓடுகிற சித்தரெல்லா மொளித்துயேங்கத்
தரம்பெற்ற சவுக்காரம் பாண்டத்திட்டுச்
சாதகமாய்க் கற்சுண்ணங் கீழ்மேலிட்டுக்
கரம்பெற்ற குழிவெட்டிக் கடுகவைத்துக்
கைமுறையாய்ச் சட்டிகொண்டு கவிழ்த்துமூடே. (10)

மூடியல்லோ மண்போட்டுத் தண்ணீருந்து
மூன்றுதிங்க ளானபின்பு திறந்துபாரு
நீடியல்லோ யெண்ணெயெல்லாஞ் சுண்ணமுண்ணும்
நேரான சவுக்கார மிருகிநிற்கும்
ஊடியல்லோ யிதையெடுத்துக் கிளிபோற்கட்டி
உத்தமனே சுண்ணாம்புக் கல்லில்வைத்துக்
காடியல்லோ தெளித்திடுவாய் வேகவேகக்
கருக்கிறது எண்ணெயெல்லாங் கறுக்கும்பாரே. (11)

பாரப்பா கறுத்ததென்று மயங்கவேண்டாம்
பரிவாக வெடியுப்புச் செயநீர்தன்னை
நேரப்பா சீனத்தி லூத்திப்பாரு
நிமிஷத்திற் சோறுபோற் கொதித்துவேகும்
காரப்பா வெயிலதனில் வைக்கச்சுண்ணம்
கடுஞ்சுருக்கு கடுஞ்சுருக்கு யெண்ணெயுண்ணத்
தூரப்பா யெடுத்துவெண் கருவாலாட்டிச்
சுகமாக வழலைக்குக் கவசம்போடே. (12)

கடல்நுரைச் சுண்ணம்.

போட்டல்லோ ரவியில்வைத்துக் காய்ந்தபின்பு
புகழாகச் சுண்ணாம்பு பொடியில்வைத்து
நீட்டியல்லோ புடம்போடு திரும்பிநன்றாய்
நேராகப் பதினொன்றே புடமுந்தீர்ந்து
மூட்டியல்லோ விதையெடுத்துக் கவசம்வாங்கி
மூதண்டச் சுண்ணாம்பின் கவசஞ் சொல்வேன்
பூட்டியல்லோ கடல்நுரைச்சுண் ணாம்பாயூதிப்
புகழாகப் பலம்ரெண்டுந் தூக்குதூக்கே. (13)

தூக்கப்பா யிவ்விடைக்கு வெடியுப்பைத்தான்
சொற்பெரிய உப்பிடைக்குச் சூடன்போடு
தாக்கப்பா சூடனிடை சீனக்காரம்
சாதகமாய்ச் சீனமிடை கல்லுப்புத்தான்
போக்கப்பா அஞ்சும்வெடி யுப்புநீரால்
புகழ்பெறவே அறைத்துநன்றாய் வில்லைதட்டி
வாக்கப்பா சுண்ணாம்பு நீருள்வைத்து
மயங்காதே கனபுடமாய் மாட்டிப்போடே. (14)

போட்டதொரு வில்லைபெவெண் கருவாலாட்டிப்
புகழாகக் காசுபோல் வில்லைதட்டி
நீட்டதொரு கரியோட்டில் வைத்தூது
நேராக வெளுப்போடிச் சுண்ணமாகும்
மூட்டதொரு மூட்டிதான் சுண்ணமார்க்கம்
முலைறகோடி துரைகோடி சுண்ணமாகும்
ஆட்டதொரு சுண்ணம்வெண் கருவாலாட்டி
அரகரா சவுக்காரத் தப்பிலையே. (15)

அப்பியல்லோ கவசமிட்டு ரவியிற்போடு
அப்பனே மூன்றுக்ச் சீலைசெய்து
ஒப்பியல்லோ கரியோட்டில் வாட்டிவாட்டு
ஓகோகோ வெண்ணெயெல்லா முரிஞ்சிக்கொள்ளும்
தப்பியல்லோ எடுவுள்ளே சத்தேநின்றுற்
சாதகமா யப்பிப்பின் கவசம்போட்டுச்
செப்பியல்லோ கரியோட்டி லூதிப்போடச்
சிவசிவா சவுக்காரச் சுண்ணமாச்சே. (16)

சுண்ணமடா சவுக்காரக் கட்டிகட்டி
சொல்லாத கருவையெல்லாஞ் சொன்னேன்சொன்னேன்
கன்னமடா போடுதற்கு வாதங்கூடக்
கைக்கேத்த கன்னக்கோல் வழலைச்சுண்ணம்
இன்னமடா சொல்வேன்சுக் காமேஅய்யா
இதையெடுத்துக் கடுங்கார மேத்தக்கேளு
முன்னமடா அண்டமது முப்பத்தொன்று
முந்தியதோர் வெண்கருவை யூத்துஊத்தே. (17)

ஊத்தியல்லோ பீங்கானில் மாணுக்கள்நீர்
உற்றுநின்று கேளுங்கள் கடுங்காரத்தைப்
போத்தியல்லோ வீரமொரு காசுபோடு
புகழான பூரமொரு காசுபோடு
ஆத்தியல்லோ அண்டநீர் காசுப்போடு
அதனோடே அஞ்சுசுண்ணக் காசுபோடு
மாத்தியல்லோ பொடித்துவெண் கருவிற்போட்டு
மத்திப்பாய் குச்சியினால் தாத்திப்பாயே. (18)

மத்தித்துக் கடைந்தாக்கால் வெண்ணெய்போலாம்
வைத்துவைத்து மூன்றுநாட் பாருபாரு
நித்தித்துச் சலமாக உள்ளேநிற்கும்
நேரான சலத்தினுட ஆண்மைகேளு
மத்தித்த லவணமுதற் காரசாரம்
மகத்தான உபரசமுஞ் சரக்குத்தோய்த்துச்
சத்தித்து வாட்டநிலே சுண்ணமாகும்
சவுக்கார மதிற்றோய்த்து ரவியிற்போடே. (19)

போடப்பா மூன்றுநாள் தோய்த்துத்தோய்த்துப்
புகழான சலத்தைசவுக் காரமுண்டு
ஊடப்பா கடுங்கார மேறுமேறும்
உற்றவஞ்சு சுண்ணத்தில் வைத்துமூடி
நீடப்பா புடம்போடப் பூப்போல்நிற்கும்;
நேரான கோபத்தாற் சொல்லிவிட்டேன்
ஆடப்பா யிதனாலண் டாண்டமாடும்
அரகரா சிவசிவா அறிந்திலேனே. (20)

அரியாத சவுக்காரச் சுண்ணந்தானும்
அரிதரிது கட்டியினாற் செய்யமாட்டார்
பிரியாத கோபத்தால் வெளியிற்போட்டேன்
பேசாதே சுந்தராசூஸ் திரத்தைநீதான்
முரியாத சித்தர்வந்தால் பிடித்துக்கொண்டு
மூச்சாட வொட்டாமல் வேதைபோட
மரியாதை சொல்லுகிறேன் லவணக்கட்டு
மகத்தான மடந்தோறு மில்லைக்காணே. (21)

இல்லையென்ற உப்பினுட கட்டைச்சொல்ல
இதனாவின் றெருக்காற்கோட் சொல்லுவாரோ
அல்லவென்று முன்போலே சண்டையாமோ
ஆதிகுரு சின்மயந்தான் கோபமாமோ
தொல்லையென்று விடுவோமோ சொல்லுவோமோ
சொற்பெரிய சுந்தரமே சொல்லுவாயே
கல்லையின்று பரிசனத்தில் வேதைபோட்டுக்
காட்டுகிறேன் பாட்டர்முன்னே காட்டுவேனே (22)

காட்டுகிறேன் சின்மயந்தான் மெச்சமெச்சக்
கருணையுடன் மூலகுரு மெச்சமெச்ச
ஆட்டுகிறேன் மச்சமுனி மெச்சமெச்ச
அருகிருந்த கொங்கணர்தான் மெச்சமெச்ச
மூட்டுகிறேன் தூமசந் தானவேதை
மூதண்ட சித்தரெல்லா மேங்கிநிற்கப்
பூட்டுகிறேன் அண்டரண்டம் பொன்னேயாகப்
போதிப்பீ ரென்குருவே போதிப்பீரே. (23)

போதியென்று கேட்டசுந் தரமேஐயா
போட்டாட உப்புக்கு விருதுநீதான்
வாதியென்று வந்தாக்கால் தர்க்கித்தாடும்
மற்றவர்கள் வந்தாக்கால் தள்ளுதள்ளு
ஆதியென்ற குருக்கேளு வர்மங்கேளு
அனுகையிலே வேதையுறுங் கட்டுக்கேளு
சாதியென்ற செந்தூர முறையைக்கேளு
சமரசமாய்ச் சொல்லாட்டாற் சண்ணியாடே. (24)

[உப்புக்கட்டு.]

ஆடுகிற உப்பெடுத்துக் கட்டக்கேளு
அப்பனே சவுக்காரச் சுண்ணமொன்று
நீடுகிற சாரமொன்று கூட்டியாட்ட
நிமிஷத்திற் சலமாகும் நேர்ந்துபாரு
ஊடுகிற வீரமொன்று பூரமொன்று
உத்தமனே அமுரியுப்புக் காலுங்கூட்டிப்
போடுகிற யிடையேது பலந்தான் தூக்கிப்
புகழாக அரைத்தெல்லாங் குழம்புபண்ணே. (25)

பண்ணியதோர் குழம்புக்கு உப்புக்கேளு
பாறையுப்புப் பாக்குப்போ லுடைத்துக்கொண்டு
நண்ணியதோர் நாலுபத்துப் பலாந்தான் தூக்கு
நலமான குழம்பையெல்லாம் பூசிப்போடு
தண்ணியதோர் ரவியினுள்ளே காயப்போடு
சாதகமாய் மூன்றுதினங் காய்ந்தபின்பு
ஒண்ணியதோ ரஞ்சுசுண்ணம் பலந்தான்பத்து
உத்தமனே சாரமஞ்சு பலந்தான்கூட்டே. (26)

கூட்டியல்லோ வெண்கருவா லரைத்துக்கொண்டு
    கூசாதே உப்புமேற் பூசுபூசு
நீட்டியல்லோ ரவியிலிட்டு காயப்போட்டு
    நேராகத் தினமேழு காய்ந்தபின்பு
பூட்டியல்லோ ஊசாரமும் உப்பும்நேரே
    பொடித்துநன்றாய்ச் சிறுநீரிற் பிசைந்துகொண்டு
மூட்டியல்லோ பாப்பியதி லுப்பைவைத்து
    முழுக்கவே மேலுமிந்தப் பொடியைப்போடே. (27)

போட்டல்லோ சட்டியிலே சட்டிமூடிப்
    புகழாகச் சீலைசெய்து புடத்தைப்போடு
சாட்டல்லோ லவணமது வாய்பேசாமற்
    சரசமாய்ச் சாருமப்பா தன்னைவாங்கி
நாட்டல்லோ சாரமஞ்சு சுண்ணங்கூட்டி
    நலமாக உப்பிலே பூசிப்போட்டு
மூட்டல்லோ பின்னொருக்காற் புடத்தைப்போட
    முழுக்கட்டாய்க் கட்டுமிந்த லவணந்தானே. (28)

காணப்பா கட்டினுட வர்மஞ்சொல்வேன்
    கரியிலே வைத்துமெள்ள ஊதும்போது
தோணப்பா பிணம்போலே நின்றுகாயும்
    சுருக்காக ஊதிடவே கரிதானுண்ணும்
பூணப்பா புத்துப்போல் நெட்டிப்பாயும்
    புகழாகச் சேர்ந்துமைபோற் பொருமிப்போகு
வீணப்பா சலம்போலே உருகவைத்து
    வெளுப்பாகப் பளபளத்து விரியும்பாரே. (29)

பாரிந்தக் குணங்கண்டா லாகாதுப்புப்
    பருவத்தைச் சொல்வேன்சுந் தரமேஐயா
நேரிந்த உப்பெடுத்து வுருக்கிப்பாரு
    நிர்மலம்போற் கரியில்நின்று ஆடும்ஆடும்
சாரிந்தப் படியுருக்கக் கெம்பிச்சாறுற்
    சலியாதே பின்னொருக்காற் புடத்தைப்போடு
காரிந்த வாதத்தி லாயிபாதம்
    கருணையினு லுப்படங்கிக் கட்டுந்தானே. (30)

[உப்புக்கடுங்காரம்.]

தானென்ற உப்பெடுத்து உருக்கிப்பாரு
தவளநிற மாகவது மணியாய்நிற்கும்
வானென்ற சூதத்தின் மணியோவென்பார்
மாசற்ற ரத்தினத்தின் மணியோவென்பார்
கோனென்ற மூத்திலுட மணியோவென்பார்
கொடுங்கவன மோடுகிற மணியோவென்பார்
தேனென்ற வயிரத்தின் மணியோவென்பார்
சிவசிவா நாதாக்கள் மயங்குவாரே. (31)

மயங்கியதோ ருப்பெடுத்து வேதையாட
மகத்தான கடுங்கார முப்பிலேத்தித்
தயங்கியதோ ரஞ்சுசுண்ணக் குகையிலூதித்
தவளநிற மாகவுந்தான் சுண்ணமாக்கி
முயங்கியதோர் சுண்ணத்தில் வீரங்கூட்டி
முறையாக மத்திக்கச் சிவந்துபோகும்
நயங்கியதோ ரிதனோடே சவாதுகாரம்
நலமாக மத்தித்து நன்றாய்க்கேளே. 32)

[சத்துவகை.]

கேளப்பா மடற்றுத்தம் பலந்தான்வாங்கிக்
கெடியாக யிதைப்பூசி யுருக்குநீதான்
நீளப்பா சூதம்போற் சத்தேயாகும்
நேரான கடினமல்ல மிருதுவாகும்
தாளப்பா நிமிளைக்குப் பூசியாட்டத்
தங்கம்போல் மெருவாகத் தானேயாகும்
சூளப்பா அண்டோட்டிற் பூசியாட்டச்
சுகமாக வங்கம்போற் சத்துமாமே. (33)

ஆமப்பா யிப்படிப்பூ நாகத்தோடு
அணைத்துமெள்ள உருக்கநல்ல சத்தேயாகும்
தாமப்பா நண்டோட்டிற் பூசியாட்டச்
சரிகைவெள்ளி போலதுவுஞ் சத்தாய்நிற்கும்
ஓமப்பா அஞ்சுரூப ரசத்துக்காதி
ஒவ்வொன்று காசிடைதா னெடுத்துக்கொண்டு
சேமப்பா தங்கமது காசுகூட்டிச்
சிறக்கவே ஆறையுந்தா னுருக்கிடாயே. (34)

உருக்கையிலே சூதமிடச் சொல்லக்கேளு
உப்பிரண்டு சூதமஞ்சு அண்டநீராம்
அரைக்கையிலே சவ்வைப்போ லாகுமப்போ
ஆதரவா யாட்டியிந்தச் சூதந்தானும்
பருக்கையிலே அஞ்சுகா சிடையைப்போடு
பத்தியுள்ளே வாங்கியது மணிபோலாடும்
செருக்கையிலே யிதையெடுத்து வைத்துக்கொண்டு
சிவசிவா குருமுறையைச் செப்புவேனே. (35)

செப்புகிறே னிதன்மேலே பூசக்கேளு
சிறப்பான பூரமொடு வீரஞ்சீனம்
ஒப்புகிறேன் வெண்கண்டர் வழலைச்சுண்ணம்
ஒவ்வொன்று காசிடைதான் கருவாலாட்டி
அப்புகிறேன் மணிமேலே காயக்காய
அடைவான அஞ்சுசுண்ணக் குகையில்வைத்து
நப்புகிறேன் குகையிலிட்டுச் சீலைசெய்து
நலமாகக் கெசபுடத்தில் நாட்டுநாட்டே. (36)

நாட்டியதோர் புடமாறில் பூசைபண்ணி
நலமாக வெடுத்துப்பார் குருவாய்நிற்கும்
தீட்டுமிதன் பேருஞ்சிற் பரைகுருத்தான்
சின்மயமே வாதமடந் திறந்துபோச்சு
மூட்டியதோர் வேதையெட்டு மிதிலேயாடும்
மூன்றுயுகம் விரிந்தாட முடிவெய்யாதே
ஓட்டியதோர் சங்கவரை தொந்தமேறும்
உத்தமனே முடிவையின்னங் கண்டிலேனே. (37)

கண்டிலே னென்றுசொன்ன குருவிநாட்டுக்
கைலாசச் சின்மயந்தா னடியேனுக்கு
ஒண்டியிலே யெனையழைத்து உபதேசித்தார்
உத்தமனே எத்தனைநாள் ஒளித்தேனையா
தண்டியிலே மச்சருடன் வேதைபோட்டேன்
சாதகமாய் மூலருடன் வேதைபோட்டேன்
அண்டியிலே இதனாலே கிழித்தாரோடு
அவருடைய மரபிலிந்தக் குருக்காணேனே. (38)

[தாமிரம்.]

குருவிலொடு குன்றியிடை யெடுத்துக்கொண்டு
கொழுத்துகிறேன் தாமிரத்தா லண்டம்பொன்றாய்
கருவிலே மடலத்துத்தம் பணந்தான்ரெண்டு
கைமுறையாய் வீரமது பணந்தான்மூன்று
தருவிலே சூதமது பணந்தான்நாலு
சாதகமாய்க் குருவோடே பொடித்துக்கொண்டு
திருவிலே பஞ்சிலிட்டுத் திரித்துநன்றாய்ச்
சேர்த்தாவின் நெய்யதனாற் சிறக்கத்தோயே. (39)

தோய்த்ததொரு திரியெடுத்துத் தாழிதன்னிற்
சுகமாகக் கடம்போலே கூண்டதாக
வாய்த்ததொரு ஆள்மட்டுங் கூடுகட்டி
வைத்திடுவாய் அஞ்சுதுலாந் தகட்டைமேலே
ஓய்த்ததொரு திரிக்கொழுத்தி அவித்துத்தீபம்
ஓட்டியல்லோ தகடெல்லாங் கருத்துப்போகும்
காய்த்ததொரு கனல்காட்ட நூறுமாத்துக்
கண்டீரோ தாமிரத்தின் கருவைத்தானே. (40)

[ஈயம்.]

கருவாக எடுக்கெடுக்கக் கோடிதுரையாகும்
கைமுறையாய்ப் பரிசனத்திற் கோடிதுரையாகும்
உருவாகப் பாஷாணந் தொட்டுப்போட
ஓடுமே சங்கவரை தொந்தந்தானும்
திருவாகச் சந்திக்கல் மரமும்வேதை
தேகமோ வாசனைக்குக் காயசித்தி
குருவாக யீன்றசின் மயத்தின்வாக்குக்
கோடான கோடிதுரைக் கரைகாணேனே. (41)

காணாத குருவதனில் வீரம்போட்டுக்
காற்பணந்தான் வாய்நீர்மத் திச்சுக்கொண்டு
பூணாத தங்கங்காற் பலத்திற்பூசி
போடுநீ புடமொன்று பொலித்துநீராம்
தோணாத குருவிதசுந் தரமேஐயா
தொட்டெடுத்த தற்கெல்லாந் தூரவேதை
ஊனாத உபசாரத்தைத் தொட்டுப்போட
ஓடுமே கோடிவரை யுருக்கிப்பாரே. (42)

பாரப்பா யிக்குருவில் வீரஞ்சினம்
பாய்ச்சியல்லோ புனுகிட்டாற் சுண்ணங்கோடி
வேரப்பா யிக்குருவிற் சவாதுகாரம்
மிகவீர மிட்டாலுருக் கினமோகோடி
சீரப்பா யிக்குருவிற் காணிகொள்ளச்
க்ஷணத்திலே சட்டைதள்ளிச் சித்தியாகும்
சாரப்பா வெகுசுருக்கு தங்கச்சுண்ணம்
சதாசிவன்போல் நின்றாடுந் தாயினாட்டே. (43)

தாயான தங்கத்தில் வீரங்காரம்
தாக்கியல்லோ சவாதிட்டு மத்தித்தப்பா
ஓயாத பாறையுப்பிற் பூசிநன்றாய்
உருக்கிடாய் மணிபோலே கனலிட்டாடும்
பாயாத ஒன்பதிலே நூற்றுக்கொன்று
பாய்ச்சிடாய் பத்திரண்டு மாத்துக்காணும்
மாயாத உப்பெடுத்துக் காரமேத்தி
மாசறவே ஊதிநன்றாய்ச் சுண்ணம்பண்ணே (44)

பூரம்.

பண்ணியதோர் சுண்ணமிடை சாரங்கூட்டிப்
பருவமா பாட்டையிலே சலமுமாகும்
கண்ணியதோர் சலத்தினுள்ளே பூரம்போட்டுக்
கைமுறையாய் வாரியிட்டு ஊதுஊது
தண்ணியதோர் பூரமது தவளநீராம்
சர்க்கேது மலையேது எல்லாஞ்சுண்ணம்
புண்ணியமே செய்தோர்க்கு எந்நூல்கிடைக்கும்
புகல்கோடி யுருக்கினநீத் தினமுமாமே. (45)

தாளகச் சுண்ணம்.

ஆமப்பா பூரநீ ராட்டைச்சொல்ல
அலைகடலு மயக்காப்புக் கப்பாபோதா
ஓமப்பா பூரத்தில் வீரஞ்சினம்
உத்தமனே புழுகிட்டு மத்தித்தேநீ
தேமப்ப தாளகத்திற் பூசிப்பாரு
சிமிட்டுமுன்னே கொக்கிறகு போலேயாகும்
நாமப்பா பார்த்ததில்லை சுண்ணவேகம்
நாட்டடா தணல்மேலே சுண்ணந்தானே. (46)

தானென்ற தாளகத்திற் சகலசுண்ணம்
சதகோடி உருக்கினமாம் வேதைகோடி
வானென்ற குளிகைமுதற் கோடாகோடி
வைத்தெடுக்கத் தாமிரமோ கோடாகோடி
கானென்ற சந்தான பரிசைவேதி
கணக்கில்லை கரையில்லை காணுங்காணும்
ஊனென்ற உபசரசெந் தூரங்கோடி
உரைக்கரிது தாளகத்தி னுறுதிதானே. (47)

வங்கச்சுண்ணம்.

உறுதியென்ற தாளகத்தில் வீரஞ்சீனம்
உத்தமனே புழுகிட்டு வங்கத்தூட்டிப்
பெறுதியென்று புடம்போட வங்கம்நீறும்
பேசாதே சொல்லரிது வங்கத்தாண்மை
அருதியென்ற வங்கத்திற் சாரங்கட்டி
ஆட்டையிலே வாருதிபோற் சலமுமாகும்
சுருதியென்ற செயநீரை சூதத்தூத்திச்
சுடவைக்கச் சூதமது தோசையாமே. (48)

(ரசகுளிகை.)

தோசையென்ற சூதத்திற் காரங்குத்தி
துடியாக உருக்கிடவே மணிபோலாகும்
ஆசையென்ற குளிகையெல்லா மீதிலேயாகும்
அண்டாண்டம் பேதிக்கக் குருவுமாகும்
காசையென்று வெள்ளியிட்டுக் குருவேசெய்தாற்
கரையேது வரையேது வெள்ளியாட்டு
மாசையென்ற பொன்னிட்டுக் குருவேசெய்தாற்
மலைகளெல்லா மேமலை மண்பொன்னாமே. (49)

பொன்னான ஜெயநீரிற் சரக்குத்தோய்த்துப்
புகழாக வாட்டியதையுருக்கிப்பாரு
பண்ணான அந்தமிகு வர்ணத்தோடே
பார்மக்காள் மணிபோலே உருகிநிற்கும்
ஒண்ணான உபரசங்கள் தோய்த்துவாட்ட
ஓகோகோ ஈயம்போ லுருகியாடும்
மண்ணான ஒவ்வொன்றிற் கோடாகோடி
மதிபோல விரிந்தாடும் மதிகொள்ளாதே. (50)

கொள்ளாத ஒவ்வொன்றிற் சுண்ணங்கோடி
　　கூட்டுகிற செந்தூரங் களங்கங்கோடி
தள்ளாத மெழுகோடு ஜெயநீர்கோடி
　　தனித்தனியே கட்டுகிற குளிகைகோடி
துள்ளாத காயசித்தி அனந்தங்கோடி
　　தொடுகுறிபோற் பரிசனத்தில் வேதைகோடி
விள்ளாத ஒவ்வொன்றிற் றெருந்தங்கோடி
　　வேறேது கூறேது வங்கத்தாட்டே. (51)

நிமிளைக்கூறு.

ஆட்டான வங்கத்தில் வீரஞ்சீனம்
　　அப்பனே புழுகிட்டு ஆட்டிக்கொண்டு
நீட்டான நிமிளையிலே பூசிக்கொண்டு
　　நேரான அஞ்சுசுண்ணக் குகையிலூது
பூட்டான நிமிளையது சுண்ணமாகும்
　　பொற்கொடியாள் முதல்நாதம் புலிபோற்பாயும்
மூட்டான நிமிளைதொட்டாற் சுண்ணங்கோடி
　　மூச்சடா ஓட்டாம லாடும்பாரே. (52)

பாரப்பா பரிசசந் தானங்கோடி
　　பறக்கிறதோர் குளிகையென்றால் லெக்கோயில்லை
நேரப்பா தாமிரமும் பரிசவேதி
　　நிரைநிரையா யங்கமெல்லாங் கோடிக்கோடும்
ஆரப்பா கரைகண்டார் கொங்கணர்தான்
　　ஆடினார் காலுயுக மவர்காணாமற்
சீரப்பா என்னுடசூத் திரத்தைப்பார்த்துத்
　　தேறினார் திரிகாண்டந் திரட்டினாரே. (53)

திரட்டினார் எனதுசூத் திரத்தைப்பார்த்துச்
　　செய்தொரு சித்தருட பேரைக்கேளு
திரட்டினார் மச்சமுனி அஞ்சுகாண்டம்
　　செகமறியக் கோரக்க ரஞ்சுகாண்டம்
திரட்டினார் மூலகுரு வொன்றுங்காண்டம்
　　சிதம்பரத்தில் பதஞ்சலிதா னேழுகாண்டம
திரட்டினார் காலாங்கி யிரண்டுகாண்டம்
　　சிவசிவா சித்தர்சொன்னார் கரைகாணேனே. (54)

கரைகாணு நூலாக விரிந்ததப்பா
காரணமா மிந்தநூல் பார்த்தேசித்தர்
வரைகாணுச் சாஸ்திரங்கள் கட்டிப்போட்டார்
வாய்வாத மல்லவல்ல மருவிப்பார்த்துத்
துரைகாணு மெனதுரூத் திரந்தான்மக்காள்
சொல்லாதே சீடனுக்கு யாருக்குந்தான்
பரைகாணுள் சின்மயந்தா னடியேனுக்குப்
பக்குவத்திற் கைக்கொடுத்த பரிசதாமே. (55

சாரச்சுண்ணம்.

பரிசான நிமிளையுட சுண்ணத்தோடே
பாய்ச்சடா வீரமொடு சீனந்தானும்
உரிசான புழுகிட்டு மத்தித்தப்பா
உறுதியாய்ச் சாரத்தின் மேலேபூசிக்
கரிசான கருவெடுக்கு முன்னேநீதான்
கருமணலிற் பொதிந்துநன்று யெரித்துப்போடு
வரிசான சாரமது சுண்ணமாச்சு
வார்த்தரைத்து வெண்கருவால் வில்லைகட்டே. (56)

கட்டியல்லோ அஞ்சுசுண்ணக் குகையில்வைத்துக்
கனலிட்டு ஊதிடவே கடுசுசுண்ணம்
ஒட்டியல்லோ யிதைத்தொட்டு ராமதேவர்
யுகாந்தம்வரை யாடியல்லோ முடிவுகாணுர்
எட்டியல்லோ சாரத்திற் காரங்கூட்டி
யெழுந்ததடா ஜெயநீர்தான் யேதோயேதோ
அட்டியல்லோ ஒன்றுமில்லை தூமம்தொட்டு
ஆறுபத்து நாலுமுக மாடும்பாரே. (57)

பாரிந்தச் சுண்ணத்தி லாடும்வேதை
பணபேதி சணபேதி சத்தபேதி
நேரிந்தச் சந்தான நிமிஷபேதி
நிமைக்குமுன்னே மலைபழுக்க நின்றபேதி
காரிந்த வேதைக்கு ஒன்றுமொவ்வா
கைமாத்து நூற்றுமேலைம்பதாகும்
ஊரிந்த வாதமல்லோ சாரவாதம்
ஓடுங்காத பூரணம்போ லோடுந்தானே. (58)

ஓடுகிற சாரத்தில் வீரஞ்சினம்
உத்தமனே புழுகிட்டு ஆட்டிக்கொண்டு
தேடுகிற தருசதன்மேற் பூசிப்போடச்
க்ஷணத்திலே சுக்காகுஞ் சிவன்போலாகும்
ஆடுகிற அஞ்சுசுண்ணக் குகையிலூது
அரகரா சிவசிவா அகண்டம்போலே
நீடுகிற தருசல்லோ அநுதிவித்தை
நின்மலமே யிதன்போக்கு நிலைகாணேனே. (59)

காணாத தருசிதனாற் சிங்கிகோடி
கைமுறையாய்ச் செந்தூரஞ் சுண்ணங்கோடி
தோணாத சொரூபமெத்த குளிகைகோடி
சொல்லடங்காத் திராவகமோ செயநீர்கோடி
பூணாத வேதையிதிற் சொல்லவென்றாற்
புத்திக்குஞ் சித்திக்கு மெட்டாதையா
ஆணாத தருசதுபூ ரணத்தோடொப்பு
ஆருக்காந் தசதீட்சை யானார்க்காமே. (60)

ஆயிந்த அங்கஞ்சின் மயத்தின்வாக்கு
ஆதியிலே சிவன்றூலிற் பிறந்தவித்தை
ஓயிந்த நூல்பார்த்துச் சித்தர்கோடி
உளன்றுளன்று வெகுநூலாய்க் கட்டிப்போட்டார்
வாயிந்த வாமத்திற் பத்துதீட்சை
மகத்தான சிவனுக்குப் பத்துதீட்சை
சேயிந்த தீட்சைவிதி சொன்னவட்டைச்
சித்தரெல்லாங் கிழித்ததினாற் றிறந்திட்டேனே. (61)

திறந்திட்டேன் வாதத்தில் வழலையாதி
செகமறிய வாதத்தி லனுதியுப்பு
பிறந்திட்ட ரெண்டாற்கட் டினங்களாச்சு
பேராக இதிலடக்கங் காரசாரம்
கறந்திட்ட வர்ணங்கா ரணமாஞ்சூதம்
கைமுறையாய்ச் செந்தூரங் கெந்திகெந்தி
நிறைந்திட்ட விந்ததுவே புடத்துக்காதி
நேராக ஐந்தையுந்தா னறிந்திடாயே. (62)

அறிந்துகொள்ளும் வாதமங்கே யிம்மட்டாச்சு
அப்பனே காயசித்திக் கடியைக்கேளு
நெறிந்துமுன்னே வாதத்தில் வழலைகேளு
நேரான காயசித்தி வழலைகேளு
பிறிந்துநின்ற அங்குஷ்ட விரலினாலே
பேரான அண்ணாக்கிற் பிரளவேத்து
வறிந்துநின்று பழகியல்லோ பின்புநீதான்
மருந்தோடே செய்யுகிற வரிசைகேளே. (63

கேளப்பா கரிசலாஞ் சாத்திறோடு
கெடியாக நெய்கலந்து வைத்துக்கொண்டு
தாளப்பா பெருவிரலிற் றேய்த்துக்கொண்டு
சாதகமா யண்ணாக்கி லேத்திவாங்கு
நீளப்பா சங்கிலிபோற் கபந்தான்வீழும்
நிலையாத மண்டலந்தான் வாங்கிவாங்கு
நாளப்பா உதயத்தே வாங்கித்திரு
நாளொன்றுக் கொருநேரம் நாட்டிப்பாரே. (64)

நாட்டியல்லோ வழலைதன்னை வாங்கும்போது
நலமாகக் கடுக்காயை உண்டுவர்நீ
மூட்டியல்லோ யிருபதுநாள் கடுக்காயுண்ண
முதிர்ந்துநின்ற ஆமமெல்லா முடியத்தள்ளும்
காட்டியல்லோ காயசித்தி எண்பதுக்குள்
கைகடந்தா லாகாது கடினமெத்த
ஆட்டியல்லோ கடுக்காய்க்கு மலம்போகாட்டால்
ஆகாது வாதபித்த தேகமாமே. (65)

ஆமப்பா சிலபேர்க்கு மலச்சிக்காகில்
அடவான காயசித்தி யில்லையில்லை
ஓமப்பா சிவதைதன்னைப் பாலிற்போட்டு
உறக்காய்ச்சி யிருத்துலர்த்தி யிடித்துக்கொண்டு
சேமப்பா கடுக்காய்க்குப் பாதிகூட்டி
தினமுண்ண வெருகடிதான் சிறக்கும்பேதி
தாமப்பா கழியாட்டால் கடுக்காயைப்போற்
சமனாகக் கூட்டியுண்ணு தள்ளியேறே. (66)

தள்ளிவிட்டுக் கடுக்காயை மிளகையுண்ணு
சாதகமா யஞ்சுமூல லேத்தியேத்திப்
பள்ளிவிட்டுப் பிராணாயம் பண்ணும்போது
பாடாத கருவையெல்லாம் பாடினேன்யான்
கொள்ளியிட்ட அண்டமா மூலத்தின்மேல்
குறிப்பான முக்கோணம் நன்றாய்ப்பாரு
அள்ளியிட்ட வாசிரெண்டு யிடைபின்றாக
ஆடுதடா ஆடுதடா அறிந்துபாரே. (67)

அறிந்துபா ரிருகோணஞ் சுழியேநிற்கும்
அதுக்குள்ளே வங்குசிங்கு இரண்டும்நிற்கும்
நெறிந்துபார் சிவசத்தி யிரண்டெழுத்து
நேராக இதன்பேரு நந்திநந்தி
பிரிந்துபார் வம்போனால் பிரேதமாச்சு
பிறக்கையிலே அவன்புகுந்தாற் பிறக்குஞ்சீவன்
இருந்துபா ரிரண்டிலிறப் பொடுபிறப்பாம்
இதையெல்லாம் பாடார்கள் சித்தர்தானே. (68)

தானென்ற நந்தியில்வங் கென்றுவாங்கிச்
சாதகமாய்ச் சிங்கென்று கும்பித்தேற
வானென்ற நாவிதழி லெழுத்துத்தோணும்
வந்துதடா வாதசித்தி ஞானசித்தி
கோனென்ற சுழிமுனையுங் குப்பென்றேறும்
கோடிரவி போலொளிகாண் சூட்சம்கண்தான்
ஊனென்ற உடம்புக்குள் நாடியெல்லாம்
உருவாகத் தெரிந்துவிடும் பாங்காயூணே. (69)

பாங்கான பிராணாயம் பண்ணும்போது
பரிவான பிராணத்தி லபானந்தங்கில்
தாங்கான உதரவுந் தியிலேநோவாம்
சாதகமாய் மருந்துகொண்டால் ரெட்டித்தேறும்
ஓங்கார லட்சியத்தை அதிலேவைத்து
உற்றுப்பார் மூச்சையுள்ளே வாங்கிநின்று
ஆங்கான அபானமது பிரிந்துபோகும்
அதற்கேற்ற கற்பமினி அமர்ந்துகேளே. (70)

### அபானன் தங்கில் மருந்து.

கேளப்பா கடுக்காய்தான் பலமும்நாலு
செடியான திப்பிலியுஞ் சுக்கோடொக்க
நாளப்பா சீரகமும் நன்றாமோமம்
நலமான யிந்துப்பு நருக்குமூலம்
வேளப்பா வகையொன்று பலந்தானொன்று
விரையவிடி கடுக்காயின் விரையைத்தள்ளு
தூளப்பா செய்துவெண் ணீரிற்கொள்ள
சுகமாகப் பேதித்து அபானன்போமே. (71)

போகுமே கீழ்நோக்கி அபானன்சாடிற்
போட்டுண்ண அன்னத்திற் பொடிநீகேளு
வாகுமே மிளகொடுதிப் பிலியுஞ்சுக்கும்
மருவியதோர் சீரகமு மதியிலுப்பு
தாகுமே கருவேம்பி லிலையினோடு
சமனாக வகையொன்று பலந்தானொன்று
ஆகுமே காயமது பலமுங்கால்தான்
அப்பனே சூரணித்து நெய்யோடுண்ணே. (72)

உண்ணையிலே அபானமது கீழ்நோக்கும்
உற்றுப்பார் லட்சியத்தை யொன்றுமில்லை
நண்ணையிலே வாசியைத்தான் மூலத்தூணி
நடக்கையிலு மிருக்கையிலும் நலமாய்ப்பாரு
பண்ணையிலே சூட்சமாய்ச் சமாதியாகும்
பரவியதோர் நோய்களெல்லாம் பறந்துபோகும்
விண்ணதுவாஞ் சுழிமுனையி லேறிற்றானால்
வேதாந்த சமாதியிலே யிருத்துந்தானே. (73)

### மூலாதாரம்.

தானென்ற மூலமுன்னே சித்தியானால்
சகலசித்து மாடலாந் தாய்தான்சொல்வாள்
வானென்ற யீசனங்கே வார்த்தைசொல்வார்
வந்துதடா ஞானசித்தி குளிகைபோட்டுக்
கானென்ற மலைதோறு மாடித்தேறிக்
கைமுறையாய் வாசியென்ற கருவைக்கேளு
கோனென்ற மூலம்விட்டுச் சுவாதிஷ்டானம்
கூறுகிறேன் ஆறுதலங் கோடுநாலே. (74)

### சுவாதிஷ்டானம்.

காலான கோணத்திற் பிரமன்வாசம்
நகாரமடா அவ்வெழுத்து நன்றாய்க்கேளு
காலான தனில்வைத்து நங்கென்றானு
கன்னியடா சரஸ்பதியும் வார்த்தைசொல்வாள்
கோலான ஆறிதழில் எழுத்துத்தோணும்
கொடியதொரு செனனமெல்லா மிவராலாச்சு
சேலான செனனமில்லை யுணிப்பாரு
சேர்ந்துமேல் மணிபூரஞ் சிறக்கும்பாரே. (75)

### மணிபூரகம்.

பாரப்பா மணிபூரம் பிறைபோல்நிற்கும்
பாங்காகப் பத்திதழுஞ் சூழநிற்கும்
நேரப்பா மாலொடுலெட் சுமியும்நிற்பாள்
நிலையாக மங்கென்று நேரேபாரு
தாரப்பா காயசித்தி கற்பசித்தி
தாரகமாய்ப் பொக்கிஷத்துத் தனமுமீவாள்
ஊரப்பா கடக்கிலனு கதத்தின்வீடு
உற்றுப்பார் முக்கோண முரைக்கக்கேளே. (76)

### அனுகதம்.

கேளப்பா வதற்குளிதழ் பனிரெண்டேதான்
கெடியாக அட்சரங்கள் நிற்கும்நிற்கும்
நீளப்பா ருத்திரன்ருத் திரியும்நிற்பாள்
நேராகுங் கோடிரவி போலேகாந்தி
ஆளப்பா வென்றுசொல்லி சிங்கென்றானு
அஷ்டமா சித்தியிதி லாடலாகும்
நாளப்பா சங்கார கர்த்தன்கர்த்தன்
நம்பினுர் சடத்தையென்று மழித்திடாரே. (77)

### விசுத்தி.

அழித்திடா ரவர்மேலே விசுத்திவீடு
அறுகோணம் பதினாறு இதழோநிற்கும்
ஒழித்திடார் மயேஸன்மயேஸ் பரியும்நிற்பாள்
உத்தமனே வாசிநின்று பரிந்தவீடு
தளித்திடார் சத்தமொடு பொசிப்புத்தாகம்
சண்டாளக் கோபமங்கே யிருந்தவீடு
வளித்திடார் வங்கென்று ஊதுஊது
வாசியெல்லா முள்ளடங்கி வெளிபோகாதே; (78)

போகாத வீட்டிலாக் கினைதானையா
புகைபோலாம் வட்டமிரண் டிதழாய்நிற்கும்
ஏகாத அசவையது அங்கிஷாவென்று
இருக்குமடா ரெண்டிதழில் நடுவேகேளு
சாகாத சிவனுமனோ மணியும்நிற்பாள்
தாரகத்தின் லெட்சயந்தா னங்கேயாகும்
சாகாத இடமதுதா னங்கென்றானு
சாதாசிவன்றான் வார்த்தைசொல்வார்தாய்சொல்வாளே.

சொல்லுவாள் வாதசித்தி சூட்சமெல்லாம்
சுகமாக ஞானத்தின் துறையுஞ்சொல்வாள்
கொல்லுவாள் வாமத்தைப் பழித்தபேரைக்
கூப்பிடுவாள் வாமத்திற் கூடினோரை
மல்லுவாள் பிள்ளைகளை மேலேயேத்த
மனமான திரோபவத்தின் மாயைநீக்கி
அல்லுவா ளகண்டமெல்லா மயந்தானென்பாள்
ஆதியென்ற மனோமணிக்கு அடித்தவாறே. (80)

சந்திரன்வீடு.

வாறான ஆக்கினைசந் திரன்றன்வீடு
வட்டமடா சத்தியெட்டு சம்புநிற்பார்
கூறான சத்தியெட்டின் பேரைச்சொல்லக்
கொடியசத்தி யாயிளைசா மளையினோடு
தாறான உன்மனையும் உன்மனதை
சாதகமா யோமியொடு வியோமரூபி
பேறான நீக்களையோ டெட்டுச்சத்தி
பிறந்தவர்கள் செய்ததொழில் பேசுவேனே. (81)

அஷ்டசித்தின் பெயர்.

பேசுகிறேன் அணிமாவு மகிமாவோடு
பிலத்ததொரு கரிமாவும் லகிமாவோடு
மாசுகிறேன் பிரார்த்திபிர காமியோடு
வளமீசு த்துவமும் வசித்வம்பண்ணு
ஓசுகிறே னிதுவெட்டு மிவர்கள்செய்யும்
உத்தமமாந் தொழிலிதுதா னுறத்துப்பாரு
தூசுகிறே னெட்டுமகஸ் தியர்க்குச்சித்தி
சுருக்கடா யோகத்தின் சித்திதானே. (82)

தானென்ற அஷ்டசத்தி சூழ்ந்துநிற்கச்
சம்புவல்லோ ரவிபோலே நடுவேநின்றார்
வானென்ற பவுரணையைத் தொட்டேசம்பு
வாங்கினார் தினமிரண்டிற் சத்தியொன்று
கோனென்ற பட்சத்திற் சம்புவொன்று
குறியாக நின்றதினம் அம்மாவாசி
வேனென்ற தினந்தொட்டு விட்டாற்சத்தி
விண்ணுலகிற் பவுரணையாய் விளங்கும்வாறே. (83)

வாறான யோகத்திற் காணவேணும்
மைந்தனே சம்புவுண்டு விழுகும்மார்க்கம்
கூறான திருகுறிதான் யோகத்துக்குக்
குருடனைப்போற் கண்மூடி வாசிபார்த்தால்
பேறான தொன்றுமில்லை பொய்மையாகும்
பிறக்காது சித்தியொன்றும் பேணிப்பாரு
தாறான சம்பினுட களையைக்கண்டால்
தாரையா யோடுமடா அமுதந்தானே. (84)

தானான அமுதமுண்டாற் காயசித்தி
தப்பாது மண்டலத்தில் மருந்துவேண்டாம்
வானான திவ்வளவும் யோகமார்க்கம்
வந்தாக்கா லெட்டெட்டுஞ் சித்தியாகும்
கோனான யோகத்தி லமுதமுண்ணக்
கோடியிலே ஒருவரடா கூர்ந்துகேளு
ஊனான காயத்தைச் சித்திபண்ணி
ஓடினவர் வெகுகோடி யுரைக்கிறேனே. (85)

உரைக்கிறே னுலகில்கடுக் காயைத்தொட்டு
உண்டல்லோ கற்பங்க ளேறியேறி
நிரைக்கிறேன் கைகடந்த சித்தர்கோடி
நேராக நூலோடே பிழைத்தோர்கோடி
திரைக்கிறேன் நாலஞ்சு கற்பமுண்டு
செடத்திலுள்ள நோய்களெல்லாம் போனபின்பு
தரைக்கிறேன் பெண்ணோடு சினேகித்தாக்கால்
தப்பாது சயரோகஞ் சண்ணும்பாரே. (86)

பாரப்பா கற்பமுண்டோன் பத்யம்விட்டுப்
பயறோடு பலவகைகள் தின்றானால்
நேரப்பா நீர்க்கட்டும் மலமுங்கட்டும்
நிலையாகாத் தோளோடு கைகால்சோரும்
தோரப்பா தும்பைச்சாறு கொள்ளுகொள்ளு
துளிதுளியா யிறங்கிறது துறந்துவீழும்
ஊரப்பா கற்பமுண்டு புளிதின்றாக்கால்
உதரத்திற் பெருவயிறு மாகுந்தானே. (87)

ஆகுமே கற்பமுண்டோன் கிழங்குதின்றால்
அவனுடம்பிற் சோகைமுத்தி பாண்டுவாகும்
மாகுமே மாங்கிஷங்கள் மீறித்தின்றால்
மயக்கமொடு சுரத்தோடு மரணமாகும்
தாகுமே தாகத்தில் மோருகொண்டால்
சண்ணுமடா குன்மவலி தப்பாதப்பா
போகுமே பச்சையுப்புத் தின்றானாற்
போச்சுதடா கண்கள்ரெண்டும் புகழ்ந்துகாணே. (88)

காணப்பா யிப்படித்தான் கற்பமுண்டு
கைதப்பி யிறந்தவர்கள் கோடாகோடி
பூணப்பா யிதையாய்ந்து தெளிந்துகொண்டு
புகழாக அடிதொடுத்துக் கற்பமுண்டு
தோணப்பா பிழைத்தவர்கள் கோடாகோடிச்
சுகமாகப் பிழைத்தபின்பு குளிகைகட்டி
ஊணப்பா சாரணையை யிட்டுத்தீத்து
உலகத்தி லோடினவர் கோடியாமே. (89)

பஞ்சதீக்ஷைபெற்று கற்பமுண்ணவும்.

ஆமப்பா விக்கினங்கள் வருவதேது
அறைகிறேன் சுந்தரமே நன்றாய்க்கேளு
ஓமப்பா வாலையுட தீட்சைகேட்டு
உண்டிடுவாய் கற்பத்தை உயரொட்டாது
போமப்பா திரிபுரையும் புவனைகேட்டுப்
பொலிவாகக் கற்பத்தை யுண்பாளுகில்
நாமப்பா ஒளிக்சரியோஞ் சித்தியில்லை
நலமாக அஞ்சுவித தீட்சைகேளே. (90)

கேளாமற் றீட்சையஞ்சு கற்பமுண்டு
கெட்டோர்கள் கோடான கோடியுண்டு
வாளாமல் வாசியிலே மூலம்பார்த்து
மயக்கத்தே அலைந்தவர்கள் கோடாகோடி
நீளாமல் மதியளவும் பார்க்கவுன்னி
நிலையாமற் கெட்டோர்கள் கோடாகோடி
தாளாமல் மதிகடந்தப் புறமேகேளு
சாற்றுகிறேன் குருபதத்தின் தன்மைதானே. (91)

தத்துவ தெரிசனம்.

தன்மையென்ற குருபதந்தா மரைப்பூப்போல
சகஸ்திரத்தி ரெட்டிதழாய் நிற்கும்பாரு
வண்மையென்ற நடுவேதான் வட்டமாக
வாகான ஐங்கோணம் நிற்கும்பாரு
உண்மையென்ற நடுவேசிவ சத்தியொன்றாய்
உருவமற்று அருவமற்று ஒளியாய்நிற்கும்
கண்மையென்ற ரவிகோடி காந்தியாகும்
கண்கூசுங் காண்கூசுங் காணுங்காலே. (92)

காணப்பா தத்துவங்கள் சூழநிற்குங்
கைமுறையாய்த் தத்வதெரி சனையைப்பாரு
பூணப்பா ஞானத்துக் காதிபீடம்
போகுதடா அண்டமெல்லா முருவித்தாண்டி
வீணப்பா ஞானமென்பார் வாய்ப்பேச்சாலே
வெறுங்குருக்கள் பணம்வாங்க விந்தப்பேச்சு
ஊணப்பா வெணுறுதி காட்டமாட்டார்
ஒருகோடி சாஸ்திரத்தைப் படிப்பார்பாரே. (93)

பாழான சாஸ்திரத்தின் ஞானமுண்டோ
பணியாத மூடருக்கு வாதமுண்டோ
கோளான திருடருக்குச் சித்தியுண்டோ
கொடியதொரு பாதகர்க்குக் குளிகையுண்டோ
தேளான பாவியர்க்கு மோட்சமுண்டோ
தேவியுட பூசைவிட்டால் யோகமுண்டோ
நாளான அம்பரத்தைப் பாரார்பாவி
நாய்போலே கோடிசென்ம மெடுப்பார்பாரே. (94)

பாரப்பா கோடிசென்மஞ் சுகிர்தத்தாலே
பரிவாக நரசென்ம மாகவந்து
நேரப்பா யென்னூலைக் கண்டுபார்த்து
நிச்சயமாய் வைத்திருந்தோர் பதத்தைப்போற்றிக்
காரப்பா தொண்டுகைக் கொடுத்தால்வாசி
கருணையுடன் தாரசட்டாற் காருகாரு
ஊரப்பா சித்தர்சொன்ன வாதமெல்லாம்
ஒருசொல்லுந் தவறாத சித்தர்தானே. (95)

சித்தியாம் யோகமிது யென்னூல்பாரு
தேவிமெச்சுஞ் சிவன்மெச்சும் யிந்தநூல்தான்
முத்தியாஞ் சீவன்முத்தி முப்பாழ்தாண்டும்
மோசமில்லை பூரணத்தி லேத்துமேத்தும்
பத்தியாம் நூல்கொடுத்தோன் மனம்நொந்தாக்கால்
பாழாச்சு யோகமுதல் வாதமெல்லாம்
அத்தியாங் குருபதத்தைத் தொட்டுமேலே
ஆறுவரை ஞானமெல்லா மறைகிறேனே. (96)

சீவதேரிசனம்.

அறைகிறேன் குருபதந்தத் துவத்தைத்தாண்டி
அப்பனே சீவன்றெரி சனத்தைக்கேளு
நிறைகிறேன் சீவகளை கோடியெல்போல்
நின்றுதடா நின்றுதடா நன்றாய்ப்பாரு
மறைகிறே னென்றுசொல்லும் உற்றுப்பாரு
மகத்தான சீவனென்ன சிவமேயாச்சு
உறைகிறே னென்றுநின்று லுறையொட்டாது
உயரவல்லோ தூக்கிமெள்ள யிழுக்குந்தானே. (97)

பரதேரிசனம்.

இழுக்குமடா பரமென்ற பரத்தினுள்ளே
யென்னசொல்வேன் படும்பாடு ஏறவென்றால்
அழுக்குமடா மனமெத்த அஞ்சவேண்டாம்
அரகரா யேகவெளி யாருமில்லை
முழுக்குமடா மனமுன்னே முன்பின்பார்த்தால்
மோசமடா ஒருநினைவாய் யேறுயேறு
பழுக்குமடா வெறும்வெளியில் ஞானதீபம்
பரத்தைவிட்டுச் சிவத்திலே பாய்ந்திட்டாயே. (98

பாய்ந்தாக்கால் சிவத்தினுட காந்திகேளு
பருகியதோர் ரவிகோடி மதிதான்கோடி
ஆய்ந்தாக்கா லகண்டசிவ மொன்றுமில்லை
அப்பனே சுந்தரமே அறிந்துபாரு
ஓய்ந்தாக்காற் சிவத்தினுள்ளே சித்திகேளு
ஒப்பான மேருவுக்குத் தெற்கேசொல்வேன்
வாய்ந்தாக்கால் மலைதோறும் பூமிதோறும்
மகத்தான லிங்கமாய் முளைத்திட்டாரே. (99)

முளைத்திட்ட வல்லோர்கள் கோடாகோடி
மூட்டியல்லோ சொரூபத்தி லேறினுக்கால்
வளைத்திட்ட மனமெங்கே நின்றதென்றால்
மைந்தனே குருபதத்தில் நின்றுபோச்சு
கிளைத்திட்ட அறிவல்லோ ஏறிற்றப்பா
கெட்டியடா கெட்டியடா அறிவில்நில்லு
அளைத்திட்ட சொரூபத்தி லடங்கிப்போனால்
அம்பரத்தே சேர்ந்தவர்கள் கோடியாமே. (100)

கோடியென்று சொன்னேனெத் தனையோகோடி
குறியேது நெறியேது லக்கமில்லை
நீடியென்ற சொரூபத்தின் காந்திசொல்ல
நிகரொன்றுங் காணகிலனே நிறைந்தசோதி
ஆடியென்ற பாரிற்சுந் தரமேஐயா
ஆட்டாற் சித்தரென்ற ஆண்மைபோச்சு
ஊடியென்ற சமாதியிலே யிருந்துபார்த்து
உறத்தபின்பு குளிகையிட்டு உன்னியேறே. (101)

ஏறடா சொரூபத்தைத் தாண்டித்தாண்டி
எட்டாத ஆறுவரை யாச்சானந்தம்
தேறடா ஆனந்த வெள்ளந்தானும்
திரும்பாமல் விழுங்குமடா திடமாய்நில்லு
வீறடா அதுமேலே நடனவோசை
வெகுகடின மேறினவர் மீளவிட்டார்
தாறடா யிவ்வளவும் ஞானவீதி
சமர்த்துண்டோ பிள்ளைகளே சார்ந்துபாரே. (102)

யாரப்பா சமாதியிலே யிருந்துமுன்னே
பழக்கமுற்றுப் பழக்கமுற்றுப் பழுத்தீர்ந்து
நேரப்பா குளிகையிட்டுப் பின்போர்பாங்காய்
நேரான சொரூபமென்ற குளிகையேற்றுக்
காரப்பாச் சித்தருண்டு கள்ளச்சித்தர்
கைக்குளிகை கேட்பார்க ளீயவேண்டாம்
சேரப்பா மூலகுரு குளிகைவாங்கித்
திசைமீதாறு மலைந்தார்கள் திருடர்தானே. (103)

திருடருண்டு யெனையாண்ட குருவேஐயா
சிவசிவா பூரணமாங் கண்டத்துள்ளே
திருடருண்டு யென்றசுந் தரமேஐயா
சித்தருட மரபெல்லாஞ் சொரூபமில்லை
திருடருண்டு சொரூபமென்ற குளிகைக்கேதான்
திரமாக வார்த்தைசொல்லி உபசரித்துத்
திருடருண்டோ ஞானத்தோ ரென்றுசொல்லிச்
சிறப்பாகப் பார்க்கின்றேன் தாவென்பாரே. (104)

தாவென்று குளிகைதன்னை வாயிலிட்டுச்
சணத்திலே ஆனந்தத் துள்ளேசெல்வார்
கூவென்றால் வெகுகோடி குளிகையீய்ந்து
கொள்ளையிட்ட வெருவெளிக்கு ளாரைக்காண்பாய்
கோவென்று மூலகுரு துடர்ந்துவாங்கிக்
கொடுங்கீர்த்தி பெற்றதொரு குறிகேளாயோ
ஆவென்று அறியாதே மவுனத்துன்னி
அறிவோடே யேறியல்லோ மலைந்துகானே. (105)

காணடா சித்தருக்குச் சிரேஷ்டனுவாய்
கைமுறையாய்க் குளிகையிட்டு அறிவோடேறி
ஊணடா அங்கங்கே யுறுதியாக
உற்றுப்பார் வெட்டவெளி யொளிகண்கூசும்
பூணடா நிர்க்குணத்தில் ராகமுணிப்
பொய்யாத சிலம்பொலியைக் கேளுகேளு
ஆணடா வென்றுசொல்லி யுன்னைப்பெற்ற
அவளுடநின் பிதாகுலமேழ் முத்தியாமே. (106)

முத்தியாம் பிர்மகுலத் துதித்தோர்புத்தி
மோசமில்லை வேதநூல் பார்த்தாலெய்தும்
சத்தியாஞ் சத்திரிய ஜென்மத்தோர்கள்
சகசமாய்த் தென்புபண்ணி வருவார்கள்
மத்தியாம் வசியகுலத் துதித்தோரானால்
மயங்கியல்லோ வியாபாரம் போலேசெய்வார்
பத்தியாஞ் சூஸ்திரர்க்கு யென்னூல்கிட்டில்
பண்ணுவான் காயசித்தி பார்ப்பான்தானே, (107)

தானென்ற காயசித்தி பண்ணித்தீர்ந்து
சாதகமாய்க் குளிகைச்சா ரணையேசெய்து
வானென்ற வீதியிலே யாடிப்பார்த்து
வருமளவும் பட்டணத்தே யிருக்கநன்று
வேனென்ற மலையினிலே போனாரானால்
வேண்டாத சித்தர்விக் கினங்களுண்டு
பானென்று கொண்டமா யையைத்தான்போற்றிப்
பதருமற் கற்பமுண்டு பரிந்துயேறே. (108)

ஏறென்று சொன்னதினா லேறுவாரோ
என்மக்காள் விட்டகுறை வந்தாலெய்தும்
மீறென்று சாஸ்திரத்தைப் பார்த்துவிட்டு
மிகவுழன்று செத்தவர்கள் கோடாகோடி
வேறென்று பலநூலைப் பார்த்துப்பார்த்து
விதியளவாய் மதிமயங்கி விழுந்தோர்கோடி
கூறென்று எந்நூலைப் பார்த்தோரெல்லாம்
கோடான கோடிசித்தர் கூடினாரே. (109)

கூடினதோர் சித்தரென் மரபேயென்பார்
கூப்பிட்டுச் சுந்தரமே வைத்துக்கொண்டு
ஊடினதோர் கற்பநூல் கொடுத்ததாரு
உன்னுடைய சாதியென்ன வென்றுகேட்டு
ஆடினதோர் குளிகைகட்டி னவர்களாரு
ஆதியிலே யோகத்தை யளித்திட்டார்யார்
நீட்டினதோர் மூலத்தின் ஒளியைத்தொட்டு
நிறையான ஆறுதலம் நிறையைக்கேளே. (110)

நிறையாருஞ் சொன்னக்கால் மதியைக்கேளு
நேசமுடன், குருபதத்தை நினைவாய்க்கேளு
வறையாரு மிதுகடந்து கண்டதுண்டோ
மைந்தரே சொல்லுமென்று வார்த்தைபேசு
கறையாருங் கண்டதில்லை யென்றானால்
கைகொடுத்துச் சூஸ்திரத்தின் கருவைச்சொல்லு
அறையாரு முழுப்பெருக்காம் மரபுதன்னை
ஆதரித்து வாதமுறை யாதிகேளே. 11)

ஆதியென்ற வழலையுட கருவைச்சொன்னால்
ஆமடா மைந்தனென்று முதுகுதட்டி
ஓதியென்ற யோகத்தி லாதியென்ன
உத்தமனே வாசிநிலை சொன்னானிற்
சாதியென்ற ஞானத்துக் காதியென்ன
சாதகமாய் மனமடங்கி யறிவேசென்றால்
வாதியென்றால் நீவாதி ஞானவாதி
மைந்தனே மதுவுண்ண வாவாவென்னே. (112)

வாவாநீ யென்றழைத்துச் சமாதிக்குள்ளே
வைத்தல்லோ அகண்டகே சரியைக்காட்டி
வாவாநீ யென்றழைத்து ஞானவீதி
வழியான ஆறுவரை நன்றாய்ச்சொல்லி
வாவாநீ யென்றழைத்து ஒளியினுள்ளே
மயங்காதே மயங்காதே யென்றுநீதான்
வாவாநீ யென்றழைத்து மேருதொட்டு
மரபான நம்முடைய மரபுசொல்லே. (113)

சொல்லியல்லோ நம்முடைய வேடம்போட்டுச்
சுந்தரமே கம்பளியின் சட்டைகட்டி
அல்லியல்லோ பிரம்போடு படிகமாலை
அப்பனே தூளிதமும் யோகவேஷ்டி
மல்லியல்லோ உப்பினுட சரந்தான்கையில்
மைந்தனே தங்கரவிக் கடயம்போட்டுந்
தில்லையல்லோ தசதீட்சை செம்புகாதில்
தேசமெல்லாங் கேசரத்தே திரியச்சொல்லே. (114)

கிரியையிலே யிப்படித்தா னென்னூல்பார்த்த
சித்தரடா வெகுகோடி சேருவார்கள்
அரியையிலே தருவகிலே அணுப்போலோடி
அண்டஞ்சித் தண்டம்பே ரண்டமுட்டிப்
பரியையிலே புவனமொடு பதமிரம்பிப்
பாங்கான சராசரங்கள் நிறைந்துநிற்பார்
கரியையிலே கயிலாச வர்க்கமென்றால்
கைகாட்டி அழைப்பார்கள் காணுகாணே. (115)

அழைக்கிறதோர் நம்முடைய மரபிற்சென்று
அந்தந்த அண்டத்தி லுள்ளதெல்லாம்
தழைக்கிறதோர் குளிகைச்சா ரணையைத்திரு
கூணத்திலே பேரண்டந் தாண்டியோடும்
இழைக்கிறதோர் குளிகைகம லணியின்வேகம்
யென்மக்காள் அஷ்டமா சித்திவேகம்
முழைக்கிறதோ ராறுவத்தின் முனையைத்தீர்க்கும்
முதண்ட சொரூபத்தின் குளிகைதானே. (116)

தானென்ற சித்தனையும் படித்தாலென்ன
தனக்குமே விட்டகுறை வந்தாலெய்தும்
வானென்ற சற்குருவைக் காத்தாலெய்தும்
வாசனையாய் மனமுறத்துப் பார்த்தாலெய்தும்
தேனென்ற மொழியுடையாள் சொன்னாலெய்தும்
தேவிபதம் போற்றிச்சே வித்தாலெய்தும்
கோனென்ற சிவபதத்தைப் பெற்றாலெய்தும்
குறையாது குறையாது நிறையுங்காணே. (117)

வஸ்துக்குறி.

காணப்பா ஆதியென்ற வஸ்துவித்தைக்
கைமுறையாய்ச் சொல்லுகிறேன் கபடுநீக்கி
ஊணப்பா பொற்சிலைபோல் வயதுப்பெண்ணை
உத்தமனே நோயில்லா தவளாய்ப்பார்த்து
ஆணப்பா மன்மதன்போன் றவனைப்பார்த்து
அவனுக்கும் நோய்களில்லா தறிந்துகொண்டு
பூணப்பா பெண்தானும் ருதுவதானாற்
புகழாகப் பீங்கானில் வாங்கவாங்கே.

வாங்கடா அவளுடைய அமுரிதானும்
மருவியதோர் மன்னனுட விந்துங்கூட
ஓங்கடா அவனுடைய அமுரிதானும்
ஒருதுள்ளி போகாமல் ஒன்றாயூத்து
தாங்கடா நாதவிந்து அமுரிகூடச்
சாதகமாய்ப் பாண்டத்திற் றினந்தான்விட்டு
ஆங்கடா அஞ்சுபத்துப் பலந்தான்சீனம்
அப்பனே பொடிசெய்து அதிலேபோடே. (119

போடடா ரெண்டுபத்துப் பலந்தான்பூரம்
புகழாகக்கலக்கியதை ரவியில்வைத்து
நீடடா தினந்தோறுஞ் சையோகித்து
நினைவாகச் சுக்கிலத்தை யதிலேவாரு
நாடடா பச்சரிசி பழமாவின்பால்
நலமாக நெய்யோடே பொங்கியுண்டு
ஊடடா தினந்தோறு மதுரசார
உத்தமனே பழவகைக ளெல்லாமாமே. (120)

ஆமப்பா சுண்ணாம்பிற் கற்பூரஞ்சேர்த்து
அடைவாக யிருவருந்தாம் பூலந்தின்னல்
ஓமப்பா தலைமுழுகல் நீருமாடல்
உத்தமனே பரிமளங்கள் பூசநன்று
காமப்பால் நாதமொடு அமுரிகூடக்
கலந்ததைத்தான் தினந்தோறும் ரவியில்வைப்பாய்
சேமப்பா வளர்பிறையிப் படியேதொட்டு
திறமாகப் பதினாறு தினந்தான்பண்ணே. (121)

பண்ணியபின் ரவியில்வைப்பாய் பாண்டத்தோடே
பரிவாகச் சுவரியெல்லாம் உப்பாய்நிற்கும்
ஒண்ணியபின் கிண்டியதைப் பாண்டத்தோடே
உத்தமனே வைத்திருக்கத் திரண்டுஉப்பாம்
கண்ணியது அமுரிவிந்து நாதத்தோடு
கற்பூரஞ் சீனமொடு கலந்தேஉப்பாம்
புண்ணியமே செய்தவர்க்கும் படிகம்போலப்
புகழாக உப்பாகும் புகழ்ந்துசெய்யே. (122)

செய்யடா உப்பையினிச் சுண்ணும்பாகச்
செப்புகிறேன் சுந்தரமே நன்றாய்க்கேளு
கையடா சவுக்காரச் சுண்ணத்தோடு
கலந்தல்லோ சவ்வீரம் புழுகுகூட்டி
மெய்யடா வஸ்துஉப்பு மேலேபூசி
வெயிலதிலே போடுசுண்ணமாகுமாகும்
பையடா பூப்போலே அலர்ந்துநிற்கும்
பாங்கான வுப்பதுதான் சுண்ணமாச்சே. (123)

நீத்தினம்.

சுண்ணமாம் வஸ்துவுப்பு விரிந்தபின்பு
தொடுகுறிபோல் வாதமுறை சொல்லக்கேளு
வண்ணமாஞ் சுண்ணத்தில் வீரங்கூட்டி
மைந்தனே புழுகிட்டு வைத்துக்கொண்டு
தண்ணமா மூபரசங்கள் சரக்குக்கெல்லாம்
தடவியல்லோ ரவியதனிற் போடுபோடு
கண்ணமாங் கடுஞ்சுண்ண மாகும்நீயும்
கலங்காதே நீத்தினத்தைக் கருதியாடே. (124)

ஆடப்பா அனல்வேண்டாம் நீத்தினத்துக்
காகுமது ரவியினுள்ளே நீறிப்போகும்
ஊடப்பா ஒவ்வொன்றிற் கோடாகோடி
உத்தமனே நீத்தினஞ்செந் தூரங்கோடு
நீடப்பா ஒவ்வொன்றி லாடவென்றால்
நிலையாது உயர்ந்தவரை நெட்டேயோடும்
பாடப்பா ஒருதுறையைப் பார்த்தாயென்றாற்
பரவியதோர் வேலைநீர்மைக்குப்பார்த்தே. (125)

உருக்கினம்.

பார்த்தந்த நீத்தினத்தை விட்டுநீதான்
பரிவான வர்னமுருக் கினத்தைக்கேளு
ஊத்தாக உப்புநீர்க் குள்ளேநீதான்
உறுதியாய் வீரமிட்டுக் காரஞ்சேர்த்து
ஆத்தாது சவ்வாது கூடக்கூட்டி
அப்பனே மத்தித்து வைத்துக்கொண்டு
மூத்தந்த வுபாசமுஞ்சரக்கிற்பூசி
முதுகனல்வைத் தூதிடவே உருகும்பாரே (126)

பாரடா உருகினதோர் சாக்கைநீதான்
பரிவான வர்ணமது தப்பாதப்பா
நேரடா ஒன்றைத்தொந் தித்துப்பூசி
நிலையாக உருக்குருக்குத் தொந்தமேறும்
ஆரடா ஒவ்வொன்றின் முடிவைப்பார்த்து
அளவிட்டாற் சிவனாலும் முடிவுகாணுப்
போரடா ஒவ்வொன்றி லாடும்வேதை
புகழாகச் சொல்லுகிறேன் கேளுகேளே. (127)

நவலோகவேதை.

கேளப்பா லோகத்திற் சாக்கைப்பூசி
கெடியான வெயிலதனிற் போடுபோடு
தாளப்பா க்ஷணமதனிற் கருத்துலோகம்
தான்றிரும்பிப் பார்க்குமுன்னே தங்கமாகும்
நாளப்பா மாத்தேது இருபத்தஞ்சு
நலமான வீரத்தி லாடுமாடும்
வேளப்பா வெரித்தோன்றே விக்குச்சொன்னார்
வேதாந்தத் தாயெனக்கு விளம்பினாளே. (128)

விளம்பினதோர் பரிசனத்தி லோடும்வேதை
வெயிலிலே பழுக்குமடா வேகமெத்தத்
தளம்பியதோர் வாதமெல்லாம் வஸ்துவாதம்
தன்மரபிற் சீஷனுக்குச் சொல்லுசொல்லு
குளம்பியதோர் மனமுடையோர்க் கியவேண்டாம்
கொடுத்தவர்க்கு நரகம்வருங் கூறினேன்யான்
அளம்பியதோ ருப்பான சுண்ணத்துள்ளே
அப்பனே சமபாகஞ் சாரங்கூட்டே. (129)

செயநீர் மெழுகு.

கூட்டியல்லோ அரைக்கையிலே ஜெயநீராகும்
குபேரனுக்கு மாதிசத்தி கொடுத்தாளப்பா
நீட்டியல்லோ ஜெயநீரிற் சரக்குத்தோய்த்து
நேராக ரவியிலிட மெழுகுமாகும்
மாட்டியல்லொ மெழுகொன்றிற் பரிசவேதை
மாத்தேது ஐம்பதடா அறிந்துபாரு
பூட்டியல்லோ உபரசத்திற் பூசிப்போடப்
பொன்னுக்குப் பொன்னாகும் புகழ்ந்துகொள்ளே. (130)

கற்பூரச்சுண்ணம்.

கொள்ளடா கற்பூரம் செயநீர்க்குள்ளே
கொட்டியல்லோ வாரியிட்டுக் குகையினுள்ளே
தள்ளடா ரவியினுள்ளே தணலாய்வெந்து
சாதகமாய் வெண்ணீராய்ப் பொருமிநிற்கும்
அள்ளடா நீரோடே வீரங்கூட்டி
அப்பனே புழுகிட்டுச் சீனம்போட்டு
உள்ளடா உபரசமுஞ் சரக்கிற்பூசி
உறப்போட வெயிலிலே சுண்ணமாமே. (131)

ஆமப்பா சுண்ணமுடன் வீரங்கூட்டி
அந்தந்த யிளைத்திலே யதன்மேற்பூச
ஓமப்பா சுண்ணம்புழுப ரசங்கள்தூமம்
உத்தமனே இப்படித்தான் தொந்தம்மெத்த
சாமப்பா சங்கவரை சுண்ணம்பாக்கித்
தனித்தனியே ஆடவென்று லுகாந்தமாடும்
வேமப்பா அண்டரண்டஞ் சுண்ணம்பட்டால்
வெவ்வெளிபோ லாடுமிந்த வேகந்தானே. (132)

தானென்ற கற்பூரச் சுண்ணத்தோடு
சவாதிட்டுக் காரமிட்டு வீரம்போட்டு
ஊனென்ற விந்துவிட்டு மத்தித்தப்பால்
உத்தமனே சரக்குகளைத் தொட்டுஆட்டக்
கோனென்ற உபரசங்க ளெல்லாமாடும்
கொடியதொரு நவலோகந் தோய்த்துப்போட
வானென்ற ரவியினுள்ளே தங்கமாகும்
மாத்தேது முப்பத்து அஞ்சுமாச்சே. (133)

ஆச்சடா பூரமென்ற நீத்தினூடே
அப்பனே சாரமது சமனாய்க்கூட்டி
ஓச்சடா ஆட்டயிலே ஜெயநீராகும்
உத்தமனே தாளகத்தைத் துவைத்துப்போடப்
போச்சடா மஞ்சளெல்லாம் ரவிதானுண்டு
புகழான சங்கம்போற் பொருமிநீறும்
வாச்சடா மால்தேவி சுண்ணம்பானால்
வாதமென்ற பாத்திரத்தின் வகைசொல்வேனே. (134)

சொல்லுவேன் தாளகத்தின் சுண்ணத்தோடு
சுகமாகக் காரமிட்டு வீரம்போட்டு
அல்லுவே னென்றுசொல்லி யரைத்துக்கொண்டு
அப்பிரக மென்றநவ நீதந்தன்னில்
மல்லுவே னெனப்பிசரிக் குகையிலிட்டு
வளமாக உருக்கிடவே சத்தாய்நிற்கும்
கொல்லுவே னென்றுசொன்ன சூதஞ்சேர்க்கக்
கொடுஞ்சுருக்கு தேவியுட னாதந்தானே. (135)

தானென்ற அப்பிரகச் சத்தைப்பாரு
சவுடுதிரை யத்துருகுந் தண்ணீர்போல
வேனென்ற ஈயம்போல் மெதுவாய்நிற்கும்
வெளுப்பென்றுற் சரிகைவெள்ளி தோற்றுப்போகும்
கானென்ற சத்துக்கு நாலுக்கொன்று
காட்டியல்லோ தங்கத்தை உருக்கிநன்றாய்ப்
பானென்ற கிண்ணியைப்போற் கெட்டிபண்ணி
பராபரையின் முன்வைத்துப் பணிந்துபோற்றே. (136)

சூதமணி.

போற்றியல்லோ கிண்ணியிலே சூதம்வார்த்துப்
புகழாக அடித்தூரிற் சேலைசெய்து
மாத்தியல்லோ ரவியில்வைத்துக் காயும்போது
வல்லகரு வூமத்தின் சாறுவாரு
ஊத்தியல்லோ சாறுசற்றே கொதிக்கும்போது
உருண்டல்லோ சூதமணி குளிகையாகும்
வாத்தியல்லோ சூதமது சகலத்துக்கும்
மதயானைக் கிண்ணியிலே மாண்டவாறே. (137)

வாறான சூதத்தைக் குளிகையாக்கு
மைந்தனே பரிச்சுண்ணஞ் சவாதுகாரம்
கூறான குளிகையின்மேற் பூசிநீயும்
குகையிலிட்டு உருக்கையிலே வாருசூதம்
தாறான பச்சைரச மொன்றுக்குத்தான்
தப்பளைபோ லேமுழுங்கி நூறாயாடும்
வீறான ஜெயநீர்தா னென்றுபேரு
விருதுக்குப் பரிசனத்தில் வேதையாமே. (138)

வேதையாங் குளிகையிற்சா ரணையைத்தீர்த்தால்
மேலான சொரூபமென்ற குளிகையாகும்
பாதையாங் குளிகையிலே தங்கங்கூட்டிப்
பரிவாகக் கெந்தியிட்டுச் செந்தூரித்தால்
போதையாங் கோடிக்கு ஒன்றேபோடப்
பொன்மாத்து அறுபத்து நாலுங்காணும்
தாதையாம் எனையீன்ற ஆயிக்கீசன்
சாத்திரர் சாத்திரத்தைப் பாடினேனே. (139)

பாடினேன் வடமொழியைப் பிரித்துப்பார்த்துப்
பரிவாக ஒவ்வொன்றாய்ப் பண்ணிப்பண்ணி
ஆடினேன் சூஸ்திரத்தி லநேகவேதை
அரகரா வென்றாலே முடிவுகாணேன்
ஓடினேன் குளிகையிட்டு அண்டமெல்லாம்
ஒருகோடி நூல்பார்த்தே னிதுக்கொவ்வாது
மூடினேன் சூஸ்திரத்தைச் சுந்தராகேள்
முக்கியமாய்ச் சீஷனுக்கு முறையைச்சொல்லே. (140)

கற்பமறிவுக்கு.

சொல்லடா சூதமென்ற செந்தூரத்தைச்
சுருக்காய்நீ மூன்றுதினங் கொண்டாயானால்
கல்லடா வுன்தேகஞ் சாவுபொய்பொய்
கவனமடா அண்டரண்டங் கடந்துஆடும்
நில்லடா குருபதத்தின் கற்பங்கொண்டு
நிமிஷத்திற் சீரணித்து நினைவிலூட்டி
மல்லடா அறிவோடே மேலேவாங்கும்
மனமுரைக்க உபாயமது மக்காள்காணே. (141)

காணப்பா கடுக்காயு மிளகுந்தொட்டுக்
கைமுறையா யுண்ணயிலே முறிந்துதானால்
பூணப்பா சயமெடுத்தாற் றங்ககற்பம்
புகழாக உண்டவுடன் தீருந்தீரும்
தோணப்பா உதரத்தில் நோய்கள்வந்தாற்
சுகமாக அப்பிரகக் கற்பங்கொள்ளு
ஆணப்பா மலசலமுங் கட்டிற்றானால்
அறுத்துவிடுங் காந்தமென்ற கற்பங்கொள்ளே. (142)

கொள்ளடா உடம்பயர்ந்து வீங்கிற்றானல்
கொடிதாக யிரும்பினுட கற்பங்கொள்ளு
தள்ளடா கண்மயங்கி மறைந்ததானல்
தயங்காமற் கற்பூரச் செயத்தைத்தின்று
உள்ளடா கடிவிஷம்போ லுடம்பில்வீழ்ந்தால்
உத்தமனே வீழியுட வேரினோடே
அள்ளடா சூதகற்பம் வைத்துக்கொண்டால்
அணுகியதோர் பதினெட்டுக் குஷ்டம்போமே. (143)

கற்பத்தில்வந்த சகலரோகங்களுக்கும் ஒருகற்பம்.

போமடா கற்பத்தில் வந்தகோஷப்
போக்கெல்லாம் போகவொரு கற்பஞ்சொல்வேன்
ஓமடா அப்பிரகச் சத்துத்தானும்
ஒருபலத்தி லரைப்பலந்தான் தங்கங்கட்டி
ஆமடா சூதமிடை தங்கம்போட்டு
அடவாக உருக்கியல்லோ யெடுத்துக்கொண்டு
தாமடா கெந்தகந்தான் ரெட்டிப்பிட்டுச்
சாதகமாய்க் குப்பியிலே சமைத்திடாயே. (144)

சமைத்ததொரு செந்தூரம் நூற்றுக்கொன்று
தாக்கிறு லொன்பதிலும் பத்துமாத்தாம்
அமைத்ததொரு செந்தூரங் குன்றியுண்ணில்
அளித்ததொரு கற்பமெல்லா மடைவாய்த்தேறும்
குமைந்ததொரு கற்பத்தால் மூறிந்ததோஷம்
கோடிவித மானாலுங் குலவிநீரும்
நமைந்ததொரு உலகத்தோர்க் காகச்சொன்னேன்
நம்முடைய நூல்பார்த்தோர் நல்லோர்தானே. (145)

நூல் விபரம்.

தானென்ற நல்லோர்க்கு என்னூல்கிட்டும்
சண்டாளப் பாவியென்றால் என்னூல்கிட்டா
கோனென்ற சாத்திரஞ்சுந் தரமேஐயா,
குறிப்பாகத் தொகைசொல்வேன் கூர்ந்துகேளு
வானென்ற ஞானமிரு நூறுசொன்னேன்
மருவியதோர் வாதத்திற் பத்துநூறு
ஊனென்ற நிகண்டுபனி ரெண்டுநூறு
உயர்த்தியாய்ச் சொச்சமுண்டு ஊணிக்காணே. (146)

காணப்பா பின்காய சித்திசொன்னேன்
கைமுறையாய் நூற்றொன்று கண்டுகொள்ளு
பூணப்பா யிருபத்து ஐந்துநூறு
புகழாகச் சொச்சமுடன் பாடினேன்யான்
தோணப்பா யீதன்றிநம் மரபிற்றானும்
சொன்னதொரு சாஸ்திரங்க ளொன்றுமில்லை
வீணப்பா அலையாதே கோபத்தாலே
விளம்பினேன் சூஸ்திரத்தை யிருநூற்றொன்றே. (147)

ஒன்றாகச் சாத்திரசூஸ் திரமுங்கேளு
உத்தமனே யிருபத்து யேழுநூறு
நன்றாகச் சீஷன்வந்து வணக்கஞ்செய்தால்
நலமாகச் சூஸ்திரத்தைக் கொடுப்பீர்நீங்கள்
பன்றாகச் சூஸ்திரத்தைச் சூழ்ந்தேவைத்துப்
பாரேழுங் குளிகையிட்டு ஓடிப்பேசு
கன்றாகச் சொல்லிவிட்டேன் சூஸ்திரத்தைக்
காட்டாதே சித்தருக்குக் கள்ளர்காணே. (148)

கள்ளரடா சித்தர்சூஸ் திரத்தைவாங்கிக்
கைமுறையாய்ப் பார்க்கையிலே ஒளிப்பாரையா
உள்ளடா தங்களுட நூலைப்பாரு
உப்போடு வழலையிரண்டு மொழிந்தாரில்லை
வெள்ளடா சட்டைமுனி யென்றுசொல்வார்
வெளியாச்சே உலகமெல்லாம் வாதமென்பார்
அள்ளடா யிப்படித்தான் சொல்லலாமோ
அறைகிறேன் கைலாசத் தென்பார்காணே. (149)

காணடா கயிலாசத் தறைந்தாலென்ன
கைமுறையாய்ப் பயமோடா வென்றுசொல்லு
ஊணடா தீட்சைவிதி யானதாலே
ஊமைப்போ லிருந்துவிட்டோங் கிழிக்கச்சொல்லி
பூணடா சிவன்வந்தா லெதிர்த்துவேந்த
போடுகிறேன் வரச்சொல்லு போடாவென்று
தோணடா யெனையீன்ற கயிலைநாதன்
சொன்னதொரு சூஸ்திரத்தின் துடியைப்பாரே. (150)

துடியான சூஸ்திரத்தின் குருவைத்தொட்டுச்
சூழ்கின்ற அண்டமெல்லாம் மணிபோலாட்டிக்
கெடியான மேருமுதல் மலைகளெல்லாம்
சேளடா சுண்ணாம்பா யூதிப்போட்டு
முடியான வீரமிட்டு வேதைபோட்டு
மூவுலகும் பொன்னுலகாய் முடிப்பேன்பாரு
அடியான வழலைகொண்டு ஆடியேறி
ஆடுகிறேன் ஆடுதற்கு வாவாவென்னை. (151)

வாவென்று யென்னையழைத்த சித்தரையா
வாய்க்கொழுப்போ சட்டைமுனி வலுமைதானோ
போவென்று சொன்னாக்கால் நாங்கள்போறோம்
பொன்மலைமேற் கல்மலையோ பொருந்துமப்பா
கோவென்று ஆண்டசூஸ் திரத்தையீய்ந்தால்
கொத்தோடே அடிமையாய்க் கூடுறோம்நாம்
தாவென்று கேட்டாக்கால் வருமோஐயா
சட்டைமுனி போலவுந்தான் குருக்காணேனே. (152)

குருவான ஞானகயி லாசமூர்த்தி
கொள்ளையிட்டார் வாதமெல்லாங் கூகூகூகூ
கருவான வழலையைவீ தியிலேபோட்டார்
கண்கெட்ட குருடனுக்குங் காணுங்காணும்
திருவான உப்பினுட கட்டைச்சொன்னார்
சிவசிவா வழலையொரு நூலிற்காணோம்
உருவான அகண்டமடா நின்றமூர்த்தி
உத்தமனே உங்களுக்கு லபித்தவாறே. (153)

வாறான சித்தர்தோத் திரமேசெய்து
வையுமென்றார் தீட்சையைத்தான் மனதுகூர்ந்து
தாறான பூரணமே அடியேன்றானும்
சமுசயமாய் வந்துவிட்டேன் கேட்கவேண்டி
பேறான போரண்டத் துள்ளேஐயா
பேசாதே மவுனியர்தான் பேசிக்கெட்டார்
ஆறான தலஞ்சொல்லி ஐயாநீயும்
அடிமைபடைத் தடிமைபடைத் தாடுபோவே. (154)

போவென்று கடாட்சித்த குருவேஐயா
　　போக்கோடாப் போரண்டப் பதத்தின்மட்டும்
வாவென்று அழைத்துடனே சீஷர்கோடி
　　வந்திடுமே யெந்தன்வகை தீட்சைசொல்ல
மாவென்ற மவுனமுதல் தசமுஞ்சொல்லு
　　மாயியுட தசதீட்சை வளமுஞ்சொல்லு
தேவென்று அடிவணங்கி நின்றானால்
　　செகசாலச் சூஸ்திரத்தை யீய்ந்திடீரே. (155)

ஈய்ந்தல்லோ அங்கங்கே மடமுண்டாக்கி
　　எடுப்பான சீஷனைத்தா னெங்குவைத்து
ஆய்ந்தல்லோ சாஸ்திரசூஸ் திரமுங்காட்டி
　　அடியான வழலையைக்கை வசமேபண்ணி
வாய்ந்தல்லோ வழலையடி தப்பிற்றானால்
　　வாதமொடு ஞானவரை வாயாதப்பா
காய்ந்துபோ காமல்வைத்த பயிரையெல்லாம்
　　கருணையுடன் வழலையைத்தான் காட்டுகொட்டே. (156)

காட்டியல்லோ வழலையுட கருவைச்செய்து
　　கைமுறையா யுப்பையெடுத் தாட்டச்சொல்லி
மூட்டியல்லோ சாரணையைத் தீர்த்துக்காட்டி
　　மோசங்கள் வாராமற் புத்திசொல்லி
பூட்டியல்லோ புதுமையைத்தான் தேறக்காட்டிப்
　　புகழான வாதியுட வரிசைசொல்லி
நீட்டியல்லோ சூஸ்திரத்தைக் கையிலீய்ந்து
　　நினைவோடே பாரென்று நிறுத்திடாயே. (157)

காந்தச்சத்து.

நிறுத்தியபின் னப்பிரகச் சத்துப்போலே
　　நேரான தாளகத்தின் சுண்ணத்தாலே
கருத்தியதோர் காந்தத்தைக் கழுவிப்போட்டுக்
　　கடுகமுன்போல் மருந்திட்டுக் குகையில்வைத்து
மருத்தியதோர் துருத்திகொண்டு ஊதலூது
　　மைந்தனே யீயம்போற் சத்தாய்நிற்கும்
ஒருத்தியதோர் காந்தசத்து சுத்திமெத்த
　　உத்தமனே தங்கமிட்டுக் கிண்ணிபண்ணே. (158)

பண்ணியதோர் கிண்ணியிலே நாகம்போட்டுப்
பரிவாகச் சூதம்விட்டுச் கிலையும்போட்டு
அண்ணியதோர் வாலுகையி லெத்திக்கொண்டு
அப்பனே செந்தூர மாகுமாகும்
தண்ணியதோர் நவலோகத் தறுநூற்கொன்று
தாக்கடா பொன்மாத்து நாற்பதாகும்
ஓண்ணியதோ ரினங்கண்டு செந்தூரித்தால்
ஒருகோடி செந்தூர முருகும்பாரே. (159)

பாரடா காந்தசத்துத் தங்கம்நேரே
பாய்ச்சியல்லோ தங்கமிடை சூதம்போட்டு
நேரடா வுருக்கியிதை வாங்கிக்கொண்டு
நிறைக்கொக்கக் கெந்தகத்தைக் கூட்டிக்கொண்டு
சாரடா வாலுகையி லேத்திமூட்டு
சமரசமாய்க் காந்தமது செந்தூரிக்கும்
ஊரடா யிருந்தாலென் காட்டில்வாழ்ந்தேன்
உத்தமனே குன்றியிடை யுள்ளேகொள்ளே. (160)

கொள்ளடா பக்கமொன்று காயசித்தி
கொப்பளித்துச் சட்டையொன்று கழன்றுபோகும்
உள்ளடா மேனியெல்லாந் தங்கமாகும்
உறுதியாய்க் கோரக்கர் கொண்டமார்க்கம்
அள்ளடா செந்தூரம் நவலோகத்தில்
அப்பனே ஐந்நூற்றுக் கொன்றுபோடு
தள்ளடா மாத்ததிலே முப்பதாகும்
சாகாத பூநாகத் தாண்மைகேளே. (161)

பூநாகச்சத்து.

கேளடா பூநாகஞ் சிவந்ததாகக்
கெட்டியா யெடுத்துவந்து பாலிற்போட்டு
நாளப்பா அதையுலர்த்தி நீதான்கேளு
நலமாகப் பலம்பத்து எடுத்துக்கொண்டு
தேளடா தாளகத்தின் சுண்ணந்தானும்
சிறப்பாகக் காசிரண்டு தூக்கிக்கொண்டு
வாளடா வீரமிரு காசுபோட்டு
மாட்டடா தாரமந்து காசுதானே. (162)

காசிடையாஞ் சவ்வாது கூடப்போட்டுக்
கைமுறையாய் மத்தித்துப் பிசிரினன்றாய்
மாசியிடை யற்றகுகைக் குள்ளேவைத்து
வளமாக ஊதிடவே யியமாகும்
வாசியிடை பூநாக மீயமானால்
வாய்த்ததடா குளிகைசா ரணைகளெல்லாம்
பேசுமடா யினியேது காயசித்தி
பேரான வாதசித்தி பிறக்குந்தானே. (163)

பிறக்கிறதோர் பூநாகச் சத்தில்தங்கம்
பேராக நாலிலொன்று கூட்டிநீதான்
நிறக்கிறதோர் கிண்ணியைப்போல் வார்த்துவைத்து
நேராகச் செந்தூரஞ் செய்யக்கேளு
உருக்கியதோர் நாகமுடன் கெந்தியாகும்
உத்தமனே காரீயஞ் சிலையுமாகும்
இருக்கிறதோர் தங்கமொடு லிங்கங்கெந்தி
இதமான இனஞ்சேர்த்து இட்டுக்கிண்டே, (164)

கிண்டயில்வெவ் வேறுசெந் தூரமாகும்
கெடியாயிப் படியிணங்க கண்டுசேர்த்துத்
தண்டயிலே செந்தூர மாகப்பண்ணி
சகஸ்திரத்துக் கொன்றிடவே வேதையாகும்
பண்டயிலே மாத்தென்ன ஐம்பத்தைந்து
பாரடா பூநாகச் சத்தின்வேகம்
அண்டையிலே ஓடாது தூரவோடும்
அறைகிறேன் ரெத்தினத்தின் குருவைத்தானே. (165)

ரத்தினக்குரு.

தானான பூநாகச் சத்துக்கேளு
சாதகமாய்க் காசினிடை யுருக்கும்போது
வானான வயிரங்கா சிடைதான்போடு
வாங்கியல்லோ கண்விட்டு ஆடுமோடும்
கானான வயிரமது ஒவ்வொன்றாய்த்தான்
கபளித்துக் கபளிந்து உள்ளேவாங்கும்
ஊனான ஒன்றுக்குப் பத்துவாங்கி
உருக்குமடா வாதத்தை யூணிப்பாரே. (166)

பாரடா வயிரமது மணிபோலானால்
பரிவாகக் குருமுறையைச் சொல்லக்கேளு
நேரடா சவுக்காரச் சுண்ணம்வீரம்
நிலையான புழுகோடு சீனங்கூட்டித்
தூரடா பெருக்கலம்பால் தன்னாலாட்டிச்
சுகமாக மணிமேலே பூசுபூசு
காரடா ரவிபடவே காய்ந்தபின்பு
கடுகவொரு புடம்போடக் குருவதாமே. (167

சூதக்கட்டு.

குருவான வயிரமொன்றில் சூதம்பத்திற்
கொட்டியல்லோ மூலைப்பாலா லரைத்துவாங்கி
அருவான புடம்போடச் சூதங்கட்டும்
அப்பனே கட்டியதோர் சூதமொன்று
உருவான நவசூதம் பத்தில்விட்டு
உறவரைத்து மூலைப்பாலா லுருக்கவாடும்
திருவான சூதமிது தொந்தமேறும்
சேர்த்தரைக்க நூறுதொந்தஞ் சிறக்குங்காணே. (168)

பரிச்செம்பு.

காணடா ஐம்பதாந் தொந்தசூதம்
கட்டியல்லோ பரிமேலே நூற்றுக்கொன்று
தோணடா உருகையிலே ரவியுமாகும்
சொல்லாது சொல்லரிது தங்கஞ்செம்பு
பூணடா பரிச்செம்பு பத்துக்கொன்று
பூட்டடா பரிமேலே செம்பாய்ப்போகும்
ஊணடா நூறுதொந்த மிப்படியேயேறும்
உத்தமனே நூறுதொந்தத் தொன்றுவாங்கே. (169

வாங்கியொன்று நாகமது பத்திலீய
மகத்தான களங்காச்சு மைந்தாபாரு
ஓங்கியொன்று நாகத்துக் களங்குதானும்
உப்போடு நூற்றொன்று செப்பின்மேலே
தாங்கியது அறுபத்து நாலுமாத்துச்
சாதகமாய் நவலோக மப்படியேயாகும்
வாங்கியிந்தச் சுருக்கேது ரவியினுள்ளே
வாலையுட னாதமடா பணிந்துபோற்றே. (17(

போத்தியல்லோ வயிரத்தாற் கட்டுஞ்சூதம்
புகழாகக் குளிகைக்கு மெத்தநன்று
ஆத்தியல்லோ வாதத்துக் காதிசித்தி
அப்பனே வயிரம்போற் றேகமாகும்
மாத்தியல்லோ இச்சூதங் குருவேசெய்தால்
மறந்தொட்டு மணல்வரைக்கும் வேதையாகும்
வாத்தியல்லோ வாதத்திற் சூதஞ்சூகம்
வயிரமல்லோ தேவியுட நாதந்தானே. (171)

நாதமடா பூநாகம் பூமிநாதம்
நலமாஞ்சா விலாதசஞ் சீவியப்பா
வாதமடா இதிலெடுத்து ஆட்டஆட்ட
வாசாம கோசரமா மனமெட்டாது
பாதமடா குளிகைக்கு முன்னேயூட்டு
பாய்ச்சாட்டாற் பூநாகங் குளிகைபொய்பொய்
வேதமடா சொல்வார்சின் மயமுஞ்சொன்னார்
வேதாந்தத் தாயுமந்தப் படிசொன்னாளே. (172)

சொன்னாளே சிறுபிள்ளை வயதோகொஞ்சம்
சொற்றிறமைம்பேசறியாள் மவுனியப்பா
எந்நாளோ யெவ்வுகமோ யாரோகாணேன்
இப்படியே சிறுபெண்ணா யிருந்தாளாத்தாள்
தன்னான வயதுபத்திற் சந்த்ரன்வீட்டில்
தாயார்க்குக் குடியிருப்புத் தாக்கிப்பாரு
மன்னான ஒலிகோடி பாடிவிப்பாள்
வாலையடா சித்தருக்குத் தெய்வந்தானே. (173)

தெய்வமப்பா குலதெய்வஞ் சித்தர்க்கெல்லாம்
சிறுபிள்ளை யரனுடைய தேவிதேவி
வைவமப்பா நாங்களெல்லாம் சிரிப்பாளாத்தாள்
மணிவீட்டைப் போலவல்லோ அண்டமெல்லாம்
கொய்வமப்பா யெனவழிப்பள் நிமிஷத்துள்ளே
குறையாமற் படைத்திடுவாள் கூர்ந்துகூறு
சைவமப்பா கொடுஞ்சைவம் வாமம்வேணும்
சதாநித்த மானந்தச் சத்திதானே. (174)

சத்தியல்லோ நூறுபங்கு சிவந்தாளென்று
சார்வாக யிருந்துகொண்டு உலகமெல்லாம்
முத்தியல்லோ கொடுத்தாண்டு ரட்சித்தார்கள்
மோசமில்லை யுன்னுள்ளே மூட்டிப்பாரு
பத்தியல்லோ கண்டுமெச்சி வார்த்தைசொல்வாள்
பாரடா சதாசித்த மனதையூணி
அத்தியல்லோ அவள்வார்த்தை கெட்டுதானால்
அறுபத்து நாலுசித்து மாடலாமே. (175)

வெள்ளிவித்தை.

ஆடலாம் பூநாகச் சத்துவொன்றில்
அப்பனே நாலிடைதான் நாகம்போட
ஊடலாம் உருக்கிடவே கட்டுங்கட்டும்
ஒருகோடி செந்தூரங் களங்குமாகும்
நாடலா மிப்படிக்கா ரீயமூட்டி
நாலுயுகக் களங்கமெத்த ஆடலாகும்
கூடலாம் வங்கத்தி லூட்டியாடக்
கொள்ளையே வெள்ளிவித்தை கொள்ளைதானே. (176)

கொள்ளையென்ற பூநாகச் சத்துப்போல
கூட்டியல்லோ மயூரத்தி னிறகுதன்னை
வள்ளையென்று பிசிரிவிட்டு உருக்கும்போது
வருகுமடா யீயம்போல் மயூரசத்து
அள்ளையென்ற சத்தோடு தங்கங்கூட்டி
அப்பனே இண்ணியைப்போல் வார்த்துக்கொண்டு
நள்ளியென்ற சூதமிதில் விட்டுநீதான்
நலமாகச் சுடுசோற்றி விதனைவையே. (177)

வைத்துடனே சூதமது ரசிதமாகும்
மறுகாலுங் கிண்ணியிலே சூதமிட்டு
கைத்துடனே பரித்தகடு கூடப்போட்டு
கலங்காதே பொற்றலைச்சாறு சற்றேவிட்டு
நைத்துடனே சுடுசோத்தில் வைப்பாயானால்
நலமாகப் பொன்னாகு முருக்கிப்பாரு
பைத்துடனே வெள்ளிக்கு வெள்ளிரேக்குப்
பரிவான ஊமத்தஞ் சாறுகுத்தே. (178)

குத்தியல்லோ கொதித்தபின்பு கொட்டவெள்ளி
கூசாதே பொன்னிட்டாற் பொன்னேயாகும்
அத்தியல்லோ சத்தோடு நாலுக்கொன்று
அப்பனே வெள்ளியிட்டுக் கிண்ணிசெய்தால்
புத்தியல்லோ ரசிதவித்தை யாகும்பாரு
புரிவாகச் சத்தோடு நாலுக்கொன்று
ஒத்தியல்லோ தங்கமிட்டுக் கிண்ணிசெய்தால்
உத்தமனே ரசதங்கம் ஊணிக்காணே. (179)

ஊணியதோர் சத்தங்கங் கெந்திகூட்டி
உறவாக வாலுகையிற் செந்தூரித்துப்
பூணியதோர் தினங்குன்றி பட்சங்கொள்ளப்
பொன்போலா மூன்றேகம் போகுஞ்சட்டை
ஆணியதோ ரிதுக்கிலையா யிரத்துக்கொன்று
அப்பாசெந் தூரமொன் பதிலுமோடும்
தோணியதோர் கற்பங்க ளுண்ணும்போது
சுழலாதே பத்தியத்தைச் சொல்லுவேனே. (180)

சொல்லுகிறேன் வாசனையா லுப்புத்தேடிற்
சுகமாகக் கட்டியதோ ருப்பைக்கூட்டு
அல்லுகிறேன் புளிமேலே ஆசையானால்
அப்பனே புளியாரை நெல்லிக்காயாம்
சொல்லுகிறேன் சீயக்காய் கொழுந்துமாகும்
திறமான கொருக்காயின் பிளியுமாகும்
வெல்லுகிறே னென்றுமனத் திடத்தையூணி
வெருளாமற் கற்பத்தை உண்ணுவுண்ணே. (181)

உண்ணயிலே மூலிகையின் கற்பமெல்லாம்
உத்தமனே பணியாரம் பயறுமாகா
அண்ணயிலே யிளநீருங் கரும்புமாகா
அப்பனே பழவகைக ளொன்றுமாகா
தண்ணயிலே மூலிகையைக் கடந்துமேலே
சாதகமாய்ச் சத்தோடு சூதங்கொள்ளில்
பண்ணயிலே பயறோடு பழவர்க்கங்கள்
பலபலவாந் தின்னவர்க்குப் பயமும்போச்சே. (182)

போச்சடா சூதமுண்டால் பயங்களெல்லாம்
போட்டா வேணுமென்ற நினைவெல்லாம்
ஆச்சடா காயமங்கே சித்தியானால்
அண்டரண்ட பதமளவுங் காணலாகும்
மூச்சடா ஆடாது வாசிதேசி
மூதண்ட ராவுத்தன் நீயுமாச்சு
பேச்சடா வல்லசத் தியமாய்ச் சொன்னேன்
பேய்மக்காள் சீஷனுக்குப் பிலக்கச்சொல்லே. (183)

மேற்சொல்லிய மயூரசத்தின்தோந்தம்.

சொல்லியதோர் மயூரத்தின் சத்துக்கிண்ணி
சுகமாக வாலுகையி லேத்திக்கொண்டு
அல்லியதோ ரினஞ்சேர்த்துப் போட்டுக்கிண்ட
அளவற்ற செந்தூர மாகுமாகும்
கல்லியதோர் களங்காகுங் கோடாகோடி
கரையேது ஆயிரத்துக் கொன்றேஓடும்
மல்லியதோர் மயூரத்தின் சத்துவாடை
வந்ததென்றால் விஷங்களெல்லாம் மாண்டுபோமே. (184)

போமடா மயூரத்தின் சத்தைப்போலே
பூட்டியல்லோ நிமிளையின்மே லுருக்கியைந்தா
ஓமடா தங்கம்போல் வர்ணமாகி
உருக்கினால் வங்கம்போல் மெதுவேயாகும்
ஆமடா யிதிலேயொரு காசுதூக்கி
அப்பனே தங்கமொன்று சூதமொன்று
தாமடா மூன்றுமொன்று யுருக்கிவாங்கி
தனிமணிமேற் பூசுதற்கு மருந்துகேளே. (185)

மருந்தேது சவுக்காரச் சுண்ணஞ்சுண்ணம்
மைந்தனே வீரமொடு புழுகுசீனம்
அருந்தேது சுக்கிலத்தா லரைத்துருசு
அப்பனே அஞ்சுசுண்ணக் குகையில்வைத்துக்
கருத்தேது கனபுடமாய்ப் போடுபோடு
காத்தல்லே யீசானப் பூசைபண்ணு
விருந்தேது மதுவோடு சுத்திபத்தி
விதமாகப் பரப்பியங்கே பூசைபண்ணே. (186)

பண்ணியல்லோ யெடுத்துப்பார் நிமிளை தன்னைப்
　　பாங்கான சுண்ணாம்பாய்க் குருவுமாகும்
ஒண்ணியல்லோ நிமிளையுட குருவுக்குள்ளே
　　உத்தமனே வீரமிட்டுக் காரம்போட்டுக்
கண்ணியல்லோ சவாதிட்டு மத்தித்தேதான்
　　காத்தில்வைத் திருப்பர்நா தாக்கள்தானும்
தண்ணியல்லோ யிதைத்தொட்டுக் கல்லைத்தொட்டு
　　தணலிலே போடுகையில் நூறுமாத்தே. (187)

மாத்தான நிமிளையைத்தான் வயிரத்துண்டாம்
　　மரத்திலே பொட்டிட்டு ரவியிற்போடு
காத்தான மரமல்லோ லோகமாகும்
　　கண்ணிமைக்குள் தங்கமுமாங் காணுங்காணும்
ஊத்தான கேணியிலே கோடாகோடி
　　ஓடுமடா வேதையிதிற் சொல்லப்போகா
ஆத்தாள்தா னிதைத்தொட்டுப் பேச்சைத்தொட்டு
　　ஆடலா மாத்துமெத்த அதிகந்தானே. (188)

தானென்ற நிமிளைசத்திற் றங்கங்கூட்டிச்
　　சாதகமாய்க் கிண்ணியைப்போல் வார்த்துக்கொண்டு
கோனென்ற கிண்ணியைவா லுகையில்வைத்துக்
　　கொட்டடா சூதமிதிற் கட்டிப்போகும்
வேனென்ற கிண்ணியிற்செந் தூரங்கோடி
　　விதமாக யினஞ்சேர்த்துப் போடலாகும்
ஊனென்ற தேவியுட நாதச்சத்து
　　ஒப்பில்லை துரைகோடி உரைக்கிலேனே. (189)

உரைக்கில்லா நிமிளையைப்போல் கல்நார்கூட்டி
　　உத்தமனே உருக்கிடவே சத்துமாகும
நிரைக்கில்லாச் சத்தோடு தங்கங்கூட்டி
　　நேராகக் கிண்ணியைப்போல் வார்த்துக்கொண்டு
தரைக்கில்லாக் கிண்ணியிலே வீரம்போட்டுச்
　　சாரமீ ரூத்தியல்லோ வெதும்பும்போது
அரக்கில்லா மெழுகாகும் வீரந்தானும்
　　அப்பனே பரிசனத்தில் வேதையாமே. (190

வேதையாங் கிண்ணியுட வித்தைக்கேளு
விளங்கினதோர் பாஷாணம் வேண்டிவைத்துப்
பாதையாஞ் சாரநீர்க் குத்தியுள்ளே
பரிவாக வாலுகையி லெரித்துஆட்டுக்
கோஷையாஞ் சரக்கெல்லா மெழுகுமாகும்
கொடுத்துப்பா ராயிரத்துக் கொன்றுநீதான்
வாதையாம் மாத்தேது ஐம்பத்தைந்து
மைந்தனே கல்நாரின் வளமைதானே. (191,

வளமையென்ற கிண்ணியிலே மெழுகுகோடி
மைந்தனே சூதம்விட்டுக் கொதிக்கக்கட்டும்
இளமையென்ற காயசித்தி செந்தூரித்து
யிருகுமுண்ண நரம்பெல்லா மெலும்புபோலாம்
அளமையென்ற மேற்றோல்பள பளப்புமீறும்
ஆதியடா உபரசத்தில் கல்நாரப்பா
தளமையென்ற தாம்பூலங் கல்நார்சுண்ணம்
தடவியுண்ணத் தந்தமெல்லா மிருக்கும்பாரே. (192)

கெவுரிச்சத்து.

பாரடா கல்நாரைப் போலேநீதான்
பரிவாகக் கெவுரியைத்தான் பிசரியூது
நேரடா சத்தாகும் நாகம்போல
நிலையான தங்கமிடு நாலுக்கொன்று
வாரடா கிண்ணியைப்போல் மாறுக்காகேள்
மகத்தான சூதமிதிற் கட்டிப்போகும்
ஆரடா பரிவுடனே நேர்மைசொல்வார்
அதுக்குள்ளே செந்தூரங் கோடியாமே. (193)

ஆமப்பா கெவுரியைத்தான் விரித்துச்சொல்ல
அடங்காது சூஸ்திரத்தி லறிந்துபாரு
ஓமப்பா சூதஞ்சந் தானவேதை
உத்தமனே பரிச்சுண்ணங் கோடியாகும்
வாமப்பா வுண்டவர்க்கு மெல்லாமாகும்
வாமம்விட்ட சைவனுக்கு மண்ணாய்ப்போகும்
சோமப்பா வுண்டவர்க்குச் சித்தியாகும்
துன்பமுற்ற காமியென்றால் சொல்பொய்யாமே. (194)

பொய்யாத தாளகத்தின் சுண்ணத்தாட்டு
போட்டுதடா எழுநுங்க மென்னசொல்வேன்
கொய்யாத தாளகத்தின் சுண்ணக்தொட்டு
கூட்டடா சீனமொடு புழுகுவீரம்
பையாத வங்கத்தின் மேலேபூசிப்
படுரவியிற் போட்டிடவே சுண்ணமாகும்
கையாத வங்கத்திற் சுண்ணங்கோடி
கரையில்லை செந்தூரக் காடுதானே. (195)

காடான வங்கத்தில் வீரஞ்சீனம்
கைமுறையாய்ப் புழுகிட்டுக் கலக்கிநன்றாய்
தாடான நிமிளையின்மேற் பூசிப்போடு
தணல்வேண்டாம் ரவியினுள்ளே தானேநீறும்
வாடான நிமிளைதொட்டு ஆடவென்றால்
மண்ணேது மலையேது மரங்களேது
நீடான செந்தூரச் சுண்ணங்கோடி
நினைவுக்கு மெட்டாது நீட்டிப்பாரே. (196)

பாரடா நிமிளையென்ற சுண்ணத்தோடும்
பரிவான வீரமிட்டுச் சீனம்போட்டு
நேரடா புழுகிட்டு மத்தித்தேதான்
நிலையான சாரத்தின் மேலேபூசிக்
காரடா ரவியில்வைத்தாற் பொங்கிநீறும்
கடுஞ்சுண்ணங் கடுஞ்சுண்ணங் காரவேகம்
ஆரடா யிதனுடைய வேதைசொல்வார்
அற்புதமோ நிற்புதமோ சாரனூட்டே. (197)

ஆட்டான செந்தூரங் கோடாகோடி
அப்பனே செயநீரு மெழுகுங்கோடி
நீட்டான சாரத்தின் கரையோயில்லை
நிலையாமற் கொங்கணர்தான் மயங்கிப்போனார்
மூட்டான மூட்டிததான் துருசுக்கப்பா
மோசமீ தல்லநன்றாய்ச் சொல்லக்கேளு
கூட்டான செம்பைமற் றொன்றுங்கொல்லா
கொல்லுமே சாரமென்ற சுண்ணந்தானே. (198)

சுண்ணமென்ற சாரத்தில் வீரஞ்சினம்
சுகமாகப் புழுகிட்டுப் பூரம்போட்டு
வண்ணமென்ற குருவெண்டு உறமுங்கூட்டி
மயங்காதே காரநீர் விட்டுஆட்டிக்
கன்னமென்ற கோலான குருசுக்குப்பி
கட்டடா ரவிக்குள்ளே கடியசுண்ணம்
பன்னமென்ற குருவினுட பெருமைசொல்லப்
பார்வதியு முன்பின்னாய்ப் பார்த்திட்டாளே. (199)

பார்த்திட்ட குருசதிலே வீரஞ்சினம்
பாங்காகப் புழுகிட்டு வைத்துக்கொண்டு
போர்த்திட்ட பத்துவகை அண்டத்துக்கும்
பொட்டொன்று போட்டல்லோ ரவியில்வைக்கக்
காத்திட்ட தொட்டோடே மெழுகேயாகும்
கடற்புழுகா மென்பார்வா சனைக்குவேதை
வத்திட்ட வேதையடா குருசுவேதை
ஈசனால் முடியாது ஆட்டந்தானே. (200)

தானான் சூஸ்திரத்தை எழுதிமக்காள்
சாகசமாய்க் கட்கசத்தை வைத்துக்கொண்டு
வானான கேசாத்தி லாடும்போது
வார்த்தைவந்தால் சாஸ்திரசூஸ் திரமும்பேசும்
கோனான சினமயத்தின் பிள்ளைநாங்கள்
குறியேது கயிலாச மூர்த்திவர்க்கம்
வேனான சூஸ்திரந்தா னிருநூற்றொன்று
வேதாந்தக் கருணையினால் விளங்குமுற்றே. (201)

சட்டைமுனிவர் வாதசூத்திரத் திரட்டு உா,

முற்றிற்று.





திருமங்கலம் அருணாசலம் பிள்ளையவர்கள் குமாரர் வயித்தியம் சுப்பிரமணிய பிள்ளை யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்தச் சாஸ்திரம் அச்சிடலானது.

கணபதி துணை.

118 - வது.

கணநாதர் திருவாய்மலர்ந்தருளிய

# கணபதி யோகம் ய.



சித்தியெல்லா மித்தாலே விளையுமப்பா
சிவசிவா கிரியைதள்ளி யோகம்பார்க்க
முத்தியுண்டு மோட்சமுண்டு வசியமுண்டு
மோகனதம் பனமுச்சா டனமுமுண்டு
பத்தியுண்டு பரமுமுண்டு சிவமுமுண்டு
பண்புமுண்டு நண்புமுண்டு பதவியுண்டு
சத்தியுண்டு குணமுமுண்டு நிலைமையுண்டு
தன்னையுந்தா னறிந்தவர்க்குத் தவமும்மெய்யே. (1)

மெய்யான முத்திவீ டதனைச்சேர
விவேகமெனும் அறிவதிகம் நுணுக்கம்வேணும்
அய்யான மனக்கோட்டை யார்கடப்பார்
அதீதமெனும் பிறப்பிறப்பா மாசைபூண்டு
பொய்யான பிரபஞ்ச வாழ்வைநத்திப்
போகுதடா சித்தமொரு நிலையில்லாமல்
எய்யாத தாலெண்ணட் நிதந்தான்வந்து
இழுக்குமடா தோணியெனு மறிவைப்போற்றே. (2)

போற்றுவது பகல்வேளை ராவைமாறு
புகழான ராவேளை பகலைமாறு
சாற்றுவது அவ்வாறு ஆண்பெண்ரெண்டும்
தனித்துநின்ற சரசம்போ லுணர்ச்சியாரு
ஏற்றுவது நாதவிந்து கலையும்போக்கி
இடகலைபிங் கலையிரண்டு மெதுக்கப்பண்ணிக்
கூற்றுவனைக் கண்டுசுழி முனையைப்பாரு
கூடுமடா மெய்யோகம் குறிகள்நாட்டே.

நாட்டவே நமன்மாண்டான் விதியும்போச்சு
நல்வினையுந் தீவினையும் நாசமாச்சு
பூட்டவே ஜீவன்முத்தி வலுத்துப்போச்சு
பூரணமும் நீயாச்சு புனலும்போச்சு
கூட்டவே காயம்வெகு காலம்வாழும்
கூறுகெட்ட புரியட்ட குணமும்போச்சு
தேட்டமே சிவயோக மவுனந்தேட்டம்
திறந்துடனே பார்த்திருப்போர் சிவனுவாரே. (4

சிவமென்ன சூரியனிற் பிள்ளையார்தன்
தெரிசனத்தைக் கண்டிருந்து சசியின்வேளை
தவமென்ன வல்லபையின் சொரூபங்கண்டு
சத்திசிவம் இவரென்று சந்தோஷித்து
பவமென்னும் வினையறுப்பார் சித்தரெல்லாம்
பகலிரவு மிப்படியே பாதபூசை
அவனுளைப் போகாமற் றவநாளாக
அனுசரித்து யிருக்கவட் டாங்கமாச்சே. (5

அஷ்டாங்க மாவதென்ன மூதுகண்பார்வை
அந்திடத்திற் சூரியனைக் கட்டிப்போடு
அஷ்டாங்க மாவதென்ன முக்கண்பார்வை
அந்திடத்திற சந்திரனை யமுக்கித்தேய்ப்பாய்
அஷ்டாங்க மாவதென்ன நடுக்கண்கும்பம்
அந்திடத்தில் வெளிவீசும் சுழிக்கண்பார்வை
அஷ்டாங்க பூரகமுங் கும்பரேசம்
அறிந்தவரே யோகியென வரதம்பாரே. (6

பாரப்பா யிப்படியே விக்கினேசன்
பார்வதியாம் வல்லபையும் பண்புமாவார்
சேரப்பா யிப்படிநா மகளும்வாலை
திருவான லக்குமியும் மகிழ்ந்துவாழ்வார்
ஊரப்பா கோடியிலே ஒருவன்யோகி
உற்பனமா மிவ்வண்ண மனுசரிப்பார்
வேரப்பா சாரப்பா யெந்நாளுந்தான்
வெட்டவெளி குருவாறு வீட்டுக்குள்ளே. (7

உள்ளுக்கு ஆர்பவோர் கூத்தைக்கண்டு
    உறத்தூங்கின்ற மவுனியென்று றுண்மைகாண்பான்
எள்ளுக்கு ளெண்ணெயது இருந்தாப்போலே
    என்னுடலி லீசன்னின்ற நிலையுங்கண்டேன்
கள்ளுக்கும் சோத்துக்கும் துணிக்கும்வல்லு
    கஞ்சாவுக் காயலையுங் கள்ளவாதி
கொள்ளுக்கு வாய்பிளக்குங் குதிரைபோலாய்க்
    கூறினதைக் கேட்டறிவான் குருட்டுமாடே. (8)

மாடென்று முழுவாற்சி வனமேசெய்வார்
    மதிகெட்ட நாய்வீணர் வாய்ப்பிலுக்கன்
போடென்றுற் றன்பேச்சும் போடமாட்டான்
    பொய்யாளன் புண்ணியரைக் கருதிப்பாரான்
வீடென்றால் முத்திவீ டேறஞானம்
    வேணுமடா சங்கையற வேதம்பாரு
கூடென்றாற் கூடுவையோ புத்திவந்தாற்
    குருடனுக்கும் யோகவழி கூறினோமே. (9)

ஓமென்று கேட்டாலும் நன்றுநன்று
    உண்மையிலே யெந்நாளும் அதிகசித்தி
ஆமென்று கேட்டாலும் அதுவேநன்மை
    அல்லவென்று விட்டாலும் ஆங்காரந்தான்
நாமென்று சொல்லுவதைச் சொல்லிவைப்போம்
    நாட்டிலுள்ளோர்க் காகவிந்த ஞானம்ஞானம்
போமென்று சரஸ்வதியும் வாக்கில்நின்று
    போதித்த கருவிடயம் புகன்றிட்டோமே. (10)

கணநாதர் கணபதி யோகம் ௰,

முற்றிற்று.



மதுரை இராமாயணச்சாவடித்தெரு செல்லப்பக்கோனர் அவர்கள் குமாரர் அழகப்பக்கோனரிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.

உ

முருகன் துணை:

119 - வது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# ஞான தீட்சை ௰௬.

—※[*]※—

ஆதியெனக் கடந்துநின்ற ஐயர்பாதம்
அருமறைகள் ஒருநான்காய்த் துலங்கவென்று
சோதியென வெளியீன்ற உமையாள்பாதம்
சுருதிரசச் சுக்கிலமுந் தன்னைப்போற்றி
நீதியென வென்குலையாய் வாழ்ந்துநின்ற
நின்மயமே தசதீக்ஷை பத்துமாகிக்
காதிலிரு சிலம்பொலியுங் கேட்டுநின்ற
கணபதியாம் என்தமயன் காப்புத்தானே. (1)

தானடா அகத்தியமா ரிஷியேகேளு
தன்னுயிரே சிவமென்று நினைக்கவேணும்
கோனடா மூலத்தி லொன்றுமில்லை
குறியான பிரமனுட வீட்டிலில்லை
வானடா மால்வீட்டி லொன்றுமில்லை
வழக்கான ருத்திரனார் மனையிலில்லை
தேனடா மயேசுரத்தின் கூறுமில்லை
தெளிவான சதாசிவத்தி லில்லைபாரே. (2)

பாரப்பா சாக்கிரசொற் பனமுமாகிப்
பரிவுடனே சுழுத்தியென்னும் விசுத்தியாச்சு
ஆரப்பா யெனைப்போலே யார்தான்சொல்வார்
அகத்தியனே உனக்குமொரு பட்டங்கேளு
நேரப்பா தும்பமல்லோ உனக்குத்தாயார்
நிருவிகற்ப சமாதியல்லோ குலதானுச்சு
வேரப்பா ஒளிதழ்த்தா மரையுமாச்சு
விளக்கொளிவாம் அங்கென்றுசமா தியாச்சே. (3)

ஆச்சப்பா அறுபத்து நாலுயோகம்
அடங்கலுமே பாடிவைத்தார் சித்தரெல்லாம்
ஏச்சப்பா உயிர்களையுங் கொல்லவென்று
இன்பமுடன் அம்பிகா யோகமென்றும்
வாச்சப்பா நாவையுந்தான் மேலேயூணி
வடிவான வாய்வுகளைக் கட்டும்போது
பேச்சப்பா கண்தெரிக்கும் வாய்வுதானும்
பிரியமுடன் சயரோக மாகுந்தானே. (4)

தானென்ற வாசியென்றுஞ் சொல்லக்கேளு
தந்தையுட விந்துவல்லோ வாசியாச்சு
கோனென்ற மனமல்லோ குலையுமாச்சு
குறிப்பறிய ஆயிரத்தெட் டிதழுமாச்சு
நானென்ற குலையல்லோ தாயாராச்சு
நடுவீடு பனிரண்டா தாரமாகித்
தேனென்ற திரையேழு வளைந்துகொண்டு
சிக்கியே காமவலைக் காச்சுபாரே. (5)

பாரென்றால் பாசமென்றால் மால்தானென்பான்
பதிவான யீசனுந்தான் நான்தானென்பான்
ஆரென்றால் சர்வம்பிர்ம மடமாமென்று
அகஸ்தியனே தெளிவாகச் சொல்லக்கேளு
நேரென்றால் இஸ்காத்து நான்தானென்பான்
நெஞ்சகத்தில்.வஞ்சகமே அறியாமற்றான்
சேரென்றால் வழலையென்று முப்புவென்பான்
தெரியாது ஒருவருட மனந்தான்பாரே.

பாரென்றீர் யீசனுட மால்தான்கூடப்
பரிவான இடிகாத்து முப்பூவெல்லாம்
ஆரென்று லாதாதாரங் கம்பியுப்பு
அண்டசரா சரமெல்லாம் படைத்தவிந்து
நேரென்ற ஐவருமே உமையாள்தானும்
நிருவிகற்ப சமாதியுந்தான் நிலைக்கவேண்டி
கூறென்ற தசதீக்ஷை பத்தும்நீங்கள்
குமரகுரு பரனேநீ கூறுவாயே. (7)

கூறுதற்கு நாவுமுண்டோ வாய்தானுண்டோ
கும்பித்து ரேசித்துத் தம்பித்தாலும்
ஆறுதலங் கடந்துஅப்பாற் சென்றிட்டாலும்
ஐவரையு மொன்றாகக் கட்டினாலும்
மேரிலொரு கால்வைத்து மிதித்திட்டாலும்
மேலான கேசரத்திற் பறந்திட்டாலும்
சார்பில்லாப் பிள்ளைகட்கு நிலைதானுண்டோ
தன்னையுந்தா னறியாட்டாற் சவுக்கல்தானே. (8)

தன்னுள்ளே அறிந்தவனே ஒருவனப்பா
சருவவுயிர் தங்களுக்குச் சாக்ஷியாகி
என்னுள்ளே யிருந்தவனு மவனுமாகி
ஏகாந்த குலதெய்வ மருளுமாகி
மண்ணுள்ளே உயிர்களெல்லா மதுவாய்நின்று
வகுத்தான தசதீட்சை பத்துமாகி
கண்ணுள்ளே நிறைந்ததொரு விந்துவாகி
கவனம்வைத்து முக்குணத்தைக் கண்டுதேறே. (9)

தேரடா நிலையறியச் சொல்லக்கேளு
சின்மயமே குலதெய்வந் தானாய்நின்று
ஆரடா ருத்திரனும் மாலுந்தானும்
அவர்களுக்கு அடுத்தசுடு காடுதன்னில்
நேரடா யிடுகாட்டுக் குள்ளேகூட
நிலைத்தனடா வஸ்தென்றே நான்தானாகி
வேரடா வெட்டவெளி யானபோது
வெறும்பாழாந் தசதீக்ஷை பத்தும்பாரே. (10)

பாரப்பா சுடுகாட்டுக் குள்ளேநீயும்
பதிவான றீங்காரம் குலையிலொட்டி
ஆரப்பா யிடுகாடாம் புருவமத்தி
அருள்காண அட்சரத்தை மாறியூது
நேரப்பா ஐந்தெழுத்துங் கூடச்சேரு
நிலையான மூன்றெழுத்தாம் வாலைவிஞ்ஞை
வேரப்பா பந்தனமங் கிலியுமென்று
வியாமுடனேலாலீ யென்றுமாட்டே. (11)

மாட்டுகிறேன் வசிவசி யென்றேயூது
மறவான் நசிமசி யென்றேயூது
பூட்டுகிறேன் அம்மென்றும் யிம்மென்றுந்தான்
புருவநடு மத்தியிலே பேணிப்பாரு
காட்டுகிறேன் சரவணபவ நாம்தானென்று
கங்குல்ரவி யற்றவிடங் கருணையாக
மூட்டுகிறேன் ஐயென்றுங் கிலியென்றுந்தான்
மூடர்களே சவ்வென்றால் முத்தியாமே. (12)

முத்தியடா பிரமமே றம்மென்றுச்சு
முக்கோண ரவிமதியக் கினியுமாச்சு
புத்தியடா மவுனமென்றால் இம்மென்றுச்சு
புத்திகெட்ட மடையருடன் போடவேண்டாம்
சத்தியடா யிருந்திருக்கும் வழலையாச்சு
தன்னறிவு தோன்றுகிற மவுனமாச்சு
புத்தியடா புசுண்டருக்கு இதுவேசித்தி
புதைத்தமுக் கோணத்தாற் றீட்சைபத்தே. (13)

கேள்வி.

பத்தென்றும் பிரமமென்றும் தீட்சையென்றும்
பரமனுக்கு எட்டாத வஸ்துவென்றும்
எத்தென்றும் எங்கனிடம் வைக்கவேண்டாம்
இந்திரியம் பிறந்தவிடம் சொல்லவேணும்
சுத்தென்றும் பூமியுட லக்கஞ்சொல்லும்
சோதியே நீயிருந்த யிடத்தைச்சொல்லும்
கத்தென்ற சிங்கென்ற இடந்தான்சொல்லும்
கந்தனே இந்தவகை காட்டுவாயே. (14)

காட்டுகிறே னகத்தியனே மகனேகேளு
கடந்தெழுந்த சுக்கிலமே நான்தானுச்சு
பூட்டுகிறே னீஸ்பரனே ருத்ரனுச்சு
புத்திகெட்ட மனத்தாலே யெல்லாம்போச்சு
நாட்டுகிறேன் தசதீட்சைக் குள்ளேமக்காள்
நடுவெழுந்த யிடக்கண்ணில் இம்மென்றேகி
கூட்டுகிறேன் சதாகாலம் மறந்திடாமல்
குறிப்பறிந்து பார்த்ததினுற் பிரமம்நானே. (15)

நானான பதினாறு கலையுமானேன்
    நான்தெய்வந் தானணுவாய் நிறைந்துகொண்டேன்
பானான பரவெளியில் சோதியானேன்
    பதிவான சுழிமுனையின் கமலமீதிற்
பூனான கங்குல்ரவி யதுவுமானேன்
    புசுண்டருடன் வழக்காடிப் போருஞ்செய்தேன்
வானானைக் காப்பதற்கு முப்பாழுண்டேன்
    வடிவான பதினாறு முகிந்துமுற்றே.

சுப்பிரமணியர் ஞான தீட்சை ௱௬

முற்றிற்று





மதுரை புதுமண்டபம் பாத்திரக்கடை வியாபாரம், க. ரா. மு. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது.



உ

கடவுள் துணை.

120 - வது:

சுப்பிரமணியர் திருவாய்மலர்ந்தருளிய

# நாடி சாஸ்திரம் ௱௨.

பொன்னுல குள்ளோ ருக்கும் பூவுல குள்ளோ ருக்கும்
மன்னிய பதினெண் பேர்க்காய் வகுத்ததோர் நாடி மார்க்கம்
கன்னமும் மதத்தோன் பாதம் காப்பதாய் வைத்துக் கொண்டு
நன்னய மவர்க்குச் செந்தி நாதனும் போதித் தாரே. (1)

பத்திய வாத நாடி பகர்ந்திடும் பித்தத் தோடே
சுத்தியே யிடது பக்கஞ் சுழித்தங்கே நிகழு மாகில்
நெத்தியு மிடிக்கும் கண்ணும் நெருப்பெனச் சூடுண் டாகி
சித்தியி லிருமலுண்டாய்ச் சிறுத்துப்பின் சிறுநீ ராமே. (2)

நல்லதோர் வாத நாடி நயந்திடும் பித்தத் தோடே
வல்லதோர் வலப்பக்கத்தில் வளைந்துமே நிகழு மாகில்
எல்லையி லொருவி லாவி லீட்டிபோற் குத்திப் பின்னும்
தொல்லையா யிரல்நின்று துடித்துடன் விலாவு நோமே. (3)

ஆனதோர் வாத நாடி யடிக்கடி பித்தத் தேறி
வானிலே முட்டு மாகில் வந்திடு முருத்திர வாய்வு
தானுது பித்தத் துள்ளே தாக்கியே முட்டு மாகில்
யீனமா வயர்க ளெங்கும் யீட்டிபோற் குத்தும் பாரே. (4)

வந்துமே வாத நாடி வளர்பித்தந் தனக்குக் கீழே
குந்தியே யிருக்கு மாகிற் குடலெங்கும் பிரட்டிக் குத்தி
முந்தியே வோங்கா ரிக்க முளித்துக்கண் மிரளும் பாரு
உந்தியு மிடிப்பும் குத்தி யோங்கரிக் கொண்ணு தென்னே. (5)

என்னவே வாத நாடி யிசைந்திடும் பித்தந் தன்னைத்
துன்னியே யிழுக்கு மாகில் துணிந்துநீர்க் கடுப்பு மாகிப்

பின்னுமே யெரிவு தோன்றிப் பேதமாய் வயிறும் சந்தும்
குன்னிய யிடுப்பு மாகிக் கொதித்திடு முதாரந் தானே. (6)

தானெனும் வாத நாடி தனித்ததோர் பித்தத் தேறி
நானெனும் பித்தத் தோடே நடித்துமே அய்யத் தேறில்
வானெனுங் கபாலந் தன்னில் மதித்திடாக் குத்துண் டாகி
யீனமாய்ச் சிரசு நொந்து யெறிந்திடுஞ் சுவாசந் தானே. (7)

தாக்கிய வாத நாடி தத்துமே கோவித் தேறி
ஆக்கியே பித்தந் தன்னை யதட்டியே முட்டு மாகிற்
சாக்கியாய் மலத்தைக் கட்டும் சடுதியாய் ஐயத் தேறில்
தூக்கியே நீரைக் கட்டித் துடிக்கிலே கொல்லும் பாரே. (8)

கொல்லுமே அய்யம் வந்தால் கூடாட்டாற் கொல்ல மாட்டா
சொல்லிய மருந்திற் றீரும் சுருக்கிலே செய்தா லப்பா
அல்லுமே பகலு மூந்த னறிவினா லிந்த நாடி
வல்லப மாகக் கண்டு மனதுடன் வணங்கிப் பாரே. (9)

வணங்கியே வாத நாடி வளர்ந்திடும் பித்தத் தோடே
இணங்கியே அய்யஞ் சென்று இசைந்துதன் னிலையில் நின்று
குணங்கியே பதரு மாகில் குருக்குடன் சந்தும் நொந்து
பிணங்கியே சுரமுங் காய்ந்து பெயர்ந்துமே பொருதிற் குத்தே.

குத்திய வாத நாடி குறிப்புடன் பித்தத் தூடே
பத்தியே அய்யஞ் சென்று பருகிவந் திருக்கு மாகில்
நெத்தியு மிடிக்குங் கண்ணு நெருப்பென நெஞ்சிற் குத்தி
புத்தியும் படப டத்துப் போதமுங் குறையுந் தானே. (11)

தானெனும் வாத நாடி தனிப்பித்தந் தனிற்சென் றாலும்
வானெனு மய்யந் தன்னில் வாழ்ந்துமே யிருந்திட் டாலும்
ஆனதோர் சொந்த வீட்டை யடிக்கடி பார்த்தே நின்றால்
தேனெனு மொழியாய் சீவன் திரும்பிடு மென்று பேசே. (12)

பேசிடும் வாத மொன்று பித்தமும் பாதி யாகி
ஆசுவா மய்யங் காலா யமந்துமே நடக்கு மாகில்
தோசமே யில்லைத் தேகம் சுகமுடன் வாழ்ந்து பின்னும்
யீசான் கயிலை சேர்ந்து இனிதுவாழ்ந் திருக்குஞ் சீவன். (13)

பித்தமே வாதந்தன்னில் பிணியுண்டு நிற்குமாகில்
நித்தமும் சுரமுங்காய்ந்து நீடியே தாகமுண்டாய்
சத்துமே உறத்துப்பேசும் தாழ்ந்துபின் மயங்கும்பாரு
எத்தியே யிடுப்புக்கைகால் யெங்குமே வலியுண்டாமே. (14)

வலித்துமே பித்தநாடி வாதத்தின் வலப்பக்கத்தில்
சலித்துமே நிற்குமாகில் சார்ந்திடு மொருபக்கத்தில்
பலித்திடும் விறையின்வாதம் பக்கத்திற் குத்துமுண்டாம்
ஒலித்திடும் வயிறுந்தீர்ந்து உள்ளங்கால் காந்தலுண்டே. (15)

உண்டிடனும் பித்தந்தானும் உயர்ந்ததோர் வாதத்துள்ளே
திண்டுமுண் டாகச்சென்று திருகியே முருகுமாகில்
கண்டிப்பாய்க் கைகால்குத்திக் கடுத்துமே திணரும்பாரு
அண்டியே கருப்போடேவல் அல்லது சூன்யமென்பார். (16)

சூனியப் பித்தந்தானும் சுருக்குடன் வாதந்தன்னில்
ஆனியே யிருபுறத்தும் அதட்டியே நிற்குமாகில்
வானிடி விழுந்தாப்போலே மனம்நொந்து அறிவழிந்து
யோனியிற் குத்துண்டாகி யுயர்கரச் சூலைப்பித்தே. (17)

பித்தமும் ஐயத்தேறி பெருத்திடில் கபாலச்சூடாய்
நித்தமுங் கண்ணில்நீராய் நினைவயர்ந் துழலும்பாரு
முத்தியசெவிநோய் கண்நோய் முயன்றபீ னிசமுண்டாகி
தொத்திரந்தொண்டைக்கம்மல் சோம்பிக்கண்ணெறிவுண்டாமே

உண்டாகுஞ் சேத்துமந்தான் உற்றதோர் பித்தத்தூடே
கொண்டாடிச் சுத்துமாகிற் கொதித்திடு முக்கிமட்டும்
பண்டான வக்கினிமந்தம் பழுத்துடல் வெளுக்குமப்பா
துண்டாநா வழுவழுத்துச் சோம்பலுண் டாக்கும்பாரே. (19)

ஆக்குமே அப்பந்தானும் ஆனதோர் பித்தந்தன்னை
தூக்கியே யிழுக்குமாகில் துயரமுங் கிருகிருப்பும்
பாக்கிய மானபண்டம் பருகிட மனம்ஒவ்வாது
சாக்கிடை போலேயப்பா தரையிடை கிடத்தும்பாரே. (20)

கிடத்திடும் அப்பந்தானும் கிட்டியே பித்தத்தூடே
நடத்துமே வாதஞ்சென்று நலித்துமே யிருக்குமாகில்

வடத்திடுஞ் சயமும்மீளை மந்தாரங் குவளைமாந்தை
திடத்திடு மிதனைக்கண்டு செப்புவ ரொப்பிலாரே. (21)

ஒப்பிய வையநாடி உதறியே பதறிச்சென்று
மப்பிய பித்தத்தோடே வாதத்தில் மூருகிநின்றால்
நப்பிய தண்டிற்குத்தி நழுவிடும் மேகத்தாலே
அப்பிய புண்ணாய்ச்சீயா யளவிலாக் கிரந்தியாமே. (22)

ஆமெனு மையநாடி அசந்திடும் பித்தத்தேபோய்த்
தாமதைக் கொண்டுவாதந் தன்னிலே தாக்குமாகில்
நாமநற் சுரமுமீளை நவிலறுங் கிராணிபாண்டு
பூமனுந் திமிருவாதம் பொய்யாது நேர்ப்பாடென்னே. (23

பாடுபட் டையந்தானும் பதறியே வாதத்தேறிக்
கூடியே பித்தந்தன்னிற் குரும்புசெய் திருக்குமாகில்
சாடிய கவுசிபாண்டு தனிமகோ தாமும்வீக்கம்
ஓடியே தவித்தாப்போலே உயிரையும் போக்குந்தானே. (24)

போக்கிய வையந்தானும் பொருமிய வாதத்துள்ளே
தாக்கிநின் றிடிக்குமானாற் சந்துகால் விளங்காதப்பா
ஆக்கிய பித்தந்தன்னி லனுசரித் திடுமேயாகில்
தூக்கிய கையும்நொந்து சுழன்றிடும் பச்சமாமே. (25)

பச்சமா மையம்பித்தம் பருகிய வாதமூன்றும்
கச்சியாய்ச் சரியாய்நின்று கனத்துமே குதித்துதானால்
இச்சையாந் தேகத்துக்கு இடரது வந்தாப்போலே
கொச்சையாந் தொந்திப்பான் குணங்களை யறிந்துசொல்லே.

சொல்லுமிம் மூன்றுநாடி தொந்தித்து மீறுமானால்
அல்லையே மூன்றேமொன்பான் அதுகளில் மருந்துசெய்ய
இல்லையே யாகிலப்பா இடரது வந்தேதீரும்
தொல்லையாந் தோஷம்வந்து தொடர்ந்திடுமென்றுசொல்லே.

சொல்லிய நாடிமூன்றிற் றுணிவற்று வாதம்பம்மி
எல்லையி லிரண்டுங்கோபித் திருந்திடிற் சன்னியென்பார்

அல்லையே அஞ்சுபத்தில் அவிழ்தங்க ளேறுதாகில்
நல்லையே தில்லையப்பா நமனுக்கே யாளாமென்னே. (28)

என்னவே யையநாடி யிரண்டையு மிழுத்துக்கொண்டு
துன்னியே நடக்குமாகிற் சொல்லலாம் நமனூரென்று
முன்னமே கடவுள்கூட்டு முறைமையுண் டாறெனுண்டு
இன்னமுங் குருவின்நாடி யெவரினி யறிவாரையா. (29)

அய்யனைப் பணிந்துபூசித் தருள்பெறுங் குருவின்வார்த்தை
மெய்யதாய்க் கொள்ளோர்க்கப்பா விள்ளுவார் குருவின்நாடி
கையினில் நெல்லியென்னும் கனியதுபோலே காட்டும்
குய்யமில் லையத்துள்ளே குருகொலு விருந்தார்பாரே. (30)

பார்ப்பது வாதநாடி படைத்திடும் பிர்மாவாகும்
கார்ப்பது பித்தநாடி கார்மேக விஷ்ணுவாகும்
ஏர்ப்பது அய்யநாடி எண்குண ஈசநாடி
சேர்ப்பது குருவின்பாதம் தெரிந்துநீ தவங்கள்செய்யே. (31)

தவமிகு தத்துவங்கள் தனையுணர் குருவைப்போற்றி
பவமதை யகற்றிநெஞ்சாற் பணிதிரு வுள்ளந்தானும்
நவம்நவ மாகக்காட்டும் நற்குரு நாடிதன்னை
சிவமய குருவின்பாதம் சித்திமுப் பத்திரண்டே. (32)

சுப்பிரமணியர் நாடிசாஸ்திரம் ௩௨.

முற்றிற்று.



மதுரையிலிருக்கும் வேதாந்தி உலகசுந்தரம்பிள்ளை யவர்களிட
மிருந்துவாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.

சிவமயம்.

120A - வது:

இராமதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# சூஸ்திரச்சுருக்கம் ய.

காணப்பா எரியிலே விளைந்தபிண்டங்
கடிதான மாங்கிஷத்தோ டெடுத்துவந்து
பூணப்பா பொரிகாரம் பொரித்துக்கொண்டு
பிண்டத்தின் வாய்பிளந்து அதனிற்போடு
ஆணப்பா பெண்ணோடே கூடினாற்போல்
அப்பனே நாதமங்கே யிறங்கும்பாரு
தானப்பா லோகத்தால் சட்டியொன்று
சாதகமா யினங்களையு மதனிற்போடே.

போட்டுநீ அடுப்பேத்தித் தீயைமூட்டு
பொடுக்கெனவே போடாதே ஒழுங்காய்ப்போடு
தேட்டென்ன யிதைவிட்டால் தேட்டுமுண்டோ
சிவம்போலே உருகிநிற்கும் பருவம்பாரு
வாட்டமில்லா நாதநீர் சுத்திக்குத்தி
வண்மைபெற வெளுக்குமட்டும் அடுப்பில்வைத்து
நாட்டிலுள்ளோர் காணாமல் மரவில்வைத்து
நன்றாகக் குளிர்ந்தபின்பு யெடுத்துவையே.

வைத்ததனைச் சாரத்திற் கவசம்போடு
மறுநாள்தான் காய்ந்தபின்பு வாட்டுவாட்டு
கொத்துவிட வொண்ணாது சாரந்தானப்பா
கொடுமையாய் கட்டுமடா சாரந்தானும்
ஆத்தியே யெடுத்துவைத்துத் தேவிபூசை
அப்பனே வடுகனுக்கும் பூசைபண்ணு
சேத்தரைக்க வழிசொல்வேன் சாரமொன்று
செப்புகிறேன் வெடியுப்பு யிந்தயிடைதானே.

தாளுக அரைத்துவைக்கச் செயநீராச்சு
தப்பாமல் வீரத்தைத் துவைத்துவாட்டு
ஊனான மெழுகதுபோல் மெழுகுமாகும்
உத்தமனே பித்தளைவெள் ளியிலேதாக்கு
மாளுன விழியுமையாள் சொன்னவித்தை
மயக்கமில்லை தப்பாது வயதுபத்து.
நாளுன மனோமணிக்கே தெரியுமல்லால்
நாட்டிலில்லை யிந்தவித்தை மெழுகுதானே (4)

மெழுகெடுத்துத் தங்கத்தில் பொதியவேண்டி
மேன்மையோ டரிதாரம் மஞ்சாடிகூட்டி
பழுதில்லை தங்கமுமே சுண்ணாம்பாய்நீரும்
பகையாம லோகமெல்லாம் பழுத்தேயாடும்
உழுதுண்ண வேணுமோ யிதுபோதாதோ
உத்தமனே துருசுதா னீற்றவென்றால்
புழுகோடு சீனமொடு வீரங்கூட்டு
புரையடங்கக் கட்டியதோர் சாரங்கூட்டே. (5)

கூட்டியதோ சீனங்களையுங் கூடக்கூட்டி
குளம்பாக அரைப்பதற்குக் கலம்பால்கூட்டி
மூட்டியதை மயனம்போல் துருசுக்கப்பு
மூன்றுநாள் அப்பியே ரவியிற்போடு
ஆட்டியதை வில்லைதட்டிப் புடத்திற்போடு
ஆகாகா துருசுவெள்ளை யுருதியாகும்
பாட்டிலே படித்ததுபோ லெண்ணவேண்டாம்
பழிகொண்ட சுண்ணாம்பு பாயுந்தானே. (6)

தானென்ற துருசுவெள்ளைக் கொப்புமுண்டோ
தாரணியிற் செப்பரியார் மூடவாதி
கானென்ற சரக்கையெல்லாஞ் சுணத்திற்கொல்லும்
கைகண்ட சுண்ணாம்பு கவடோயில்லை
வானென்ற வேதையிதிற் தொந்தங்கோடி
வைத்தெடுநீ செயநீரில் செம்பைச்சாய்க்க
மூனென்ற செம்பதுதான் கட்டிப்போச்சு
முரைகோடி கவர்கோடி மூட்டுமூட்டே. (7)

மூட்டுதற்கு செம்பைத்தான் தகடுதட்டி
முன்சொன்ன மெழுகுமரி தாரங்கூட்டி
ஆட்டுதற்கு பழச்சாற்றால் கெந்திகூட்டி
அழகான தகட்டுக்குப் பூசிப்பூசி
வாட்டுதற்கு உமியோட்டில் சுருளவாட்டு
வளமான குக்கிடத்தில் மாண்டுபோகும்
தேட்டுதற்குச் செயமான சிகப்புமெத்த
சித்தர்மெய்த்த செந்தூரந் திண்ணுதிண்ணே. (8)

திண்ணுவந்தால் வயதுசொல்ல முடியாதப்பா
செம்புவர்ணம் பஞ்சவர்ண மாகும்தேகம்
பண்ணுதமிழ் கோடான கோடிபாடும்
பரைவாசல் சிவவாச லிரண்டுங்காணும்
உண்ணரிய பொன்வெள்ளி ரெண்டுங்காணும்
ஓகோகோ கெவுனசித்தி உறத்துப்போகும்
அன்னமது வெருத்துமங்கே மலமுஞ்சாகும்
அப்பனேமூ தண்டசித் தாடலாமே. (9)

ஆடலா மிதுகொண்டு கோடாகோடி
அளவறந்த வித்தையெல்லா மிதுக்குள்ளாச்சு
ஓடலா மிதுநாலே குளிகைசெய்து
உயரமுள்ள மலைகளெல்லா மேறிப்பார்க்க
நாடெல்லாந் திரிந்தாலு மிந்தப்போக்கு
நல்லமுறை யிதுபோலே யெங்குமில்லை
பாடல்போற் சொன்னதென்று யெண்ணவேண்டாம்
பத்துமிந்தச் சூஸ்திரந்தான் பலனுமுற்றே. (10)

## யோகஞான சாஸ்திரத் திரட்டு

### "ஏழாம் பாகம்"

முற்றிற்று.



மதுரை வடக்குவாசல் யானைக்கல்தெருவிலிருக்கும் வித்துவான் மு. குழந்தைவேலுப்பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதிப்படி இந்தசாஸ்திரம் அச்சிடலானது.

# வைத்திய பெருநூற் காவியங்களின்

# விளம்பரம்.

ஐயா, இதனடியிற்கண்ட சாஸ்திரங்களெல்லாம் ஓலையேட்டுச் சுவடியிலிருந்ததை தற்சமையம்நோட்டுப்புஸ்தகங்களிலெழுதித் தயாராய்விட்டது. இனி கூடிய சீக்கிரத்தில அச்சிட்டு புஸ்தகமாக வெளியிடக்கூடும். இதில * இந்தமார்க்குகளிட்டிருக்கிற சாஸ்திரங்கள் வெகுநாளைக்குமுன்பெரியோர்களாலச்சிட்டுவிற்பனையாகிவிட்டதாகக் கேள்வி. இப்போது அவைகளையும்சேர்த்து அச்சிட்டு வெளியிடுவதாகத் தீர்மானித்திருக்கிறது.

**அகஸ்தியர்**

| | |
|---|---|
| தத்துவம் | 300 |
| தற்கசாஸ்திரம் | 300 |
| கன்மசூஸ்திரம் | 300 |
| *கன்மகாண்டம் | 300 |
| பரிபாஷைமூணுகாண்டம் | 300 |
| *செந்தூரம் | 300 |

**ரோமரிஷி சாஸ்திரம்**

| | |
|---|---|
| ஞானம் | 500 |
| *வயித்தியம் | 500 |
| பரிபாஷைமூணுகாண்டம் | 300 |

**அகஸ்தியர் சாஸ்திரம்**

| | |
|---|---|
| *ஞானகாவியம் | 1000 |
| *வாதகாவியம் | 1000 |
| *பூரணகாவியம் | 1000 |
| *லெட்சணகாவியம் | 1000 |
| *மாந்த்ரீககாவியம் | 1000 |

**மச்சமுனிவர் சாஸ்திரம்**

| | |
|---|---|
| மச்சமுனிவகாரம் | 800 |
| கலைக்கியானநிகண்டு | 800 |
| *பெருநூல்காவியம் | 800 |
| *கருக்கடைசூஸ்திரம் | 800 |

**அகஸ்தியர் சாஸ்திரம்**

| | |
|---|---|
| ஞானகாண்டம் | 1000 |
| திருமந்திரகாண்டம் | 1000 |
| வகாரகாண்டம் | 1000 |
| பூரணகாண்டம் | 1000 |
| *வயித்தியகாவியம் | 1500 |

**யூகிமுனிவர் சாஸ்திரம்**

| | |
|---|---|
| பெருநூல்காவியம் | 1000 |
| *வாதகாவியப்பெருநூல் | 1000 |
| கருக்கடைபெருநூல் | 1000 |
| ஷைகாவிய சுருக்கம் | 200 |

**அகஸ்தியர் சாஸ்திரம்.**

| | |
|---|---|
| சத்திஜாலம் | 1200 |
| ஆறுகாண்டஜாலம் | 1200 |
| *அமிர்தகலைக்கியானம் | 1200 |
| *ஆயுளவேதம் | 1200 |
| நாலுகாண்டஜாலம் | 1200 |

**கொங்கணர் சாஸ்திரம்.**

| | |
|---|---|
| முதற்காண்டம் | 500 |
| நடுக்காண்டம் | 500 |
| கடைக்காண்டம் | 500 |

**அகஸ்தியர் சாஸ்திரம்.**

| | |
|---|---|
| குருநூல்முப்பு | 600 |
| வைத்தியம் | 600 |
| பாண்டுவைப்பு | 600 |
| பூஜாவிதி | 20 |

**போகர் சாஸ்திரம்.**

| | |
|---|---|
| வைத்தியகாவியம் | 1000 |
| பலதிரட்டுவைத்தியம் | 750 |
| லைவத்தியம் | 700 |
| செனனசாகரம் | 555 |
| நிகண்டு | 1200 |
| கருக்கடைநிகண்டு | 500 |

**அகஸ்தியர் சாஸ்திரம்.**

| | |
|---|---|
| பரிபாஷை | 500 |
| ஜாலசூத்திரத்திரட்டு | 500 |
| வைத்தியம் | 500 |
| பஞ்சகாவியநிகண்டு | 800 |

**தன்வந்திரி சாஸ்திரம்.**

| | |
|---|---|
| நாலுகாண்ட வைத்தியம் | 800 |

| | |
|---|---|
| *வைத்ய சிந்தாமணி | 1200 |
| *வைத்தியகாவியம் | 1000 |
| *கலைக்கியானம் | 500 |
| *தயிலம் | 500 |
| *சிமிட்டுரத்தின சுருக்கம் | 360 |
| *கருக்கடை நிகண்டு | 300 |
| கருக்கடை | 300 |
| **சட்டைமுனிவர்.** | |
| வாதகாவியம் | 1000 |
| *நிகண்டு | 1200 |
| சடாச்சரக்கோர்வை | 108 |
| **தேரையர்.** | |
| * வைத்தியம் | 1001 |
| * வைத்தியம் | 500 |
| வைத்தியம் | 100 |
| **பிர்மமுனிவர்.** | |
| வைத்தியம் | 700 |
| * கருக்கடை | 380 |
| வாதசூஸ்திரம் | 200 |
| **திருமூலர்.** | |
| வயித்திய காவியம் | 1000 |
| * வயித்தியம் | 600 |
| தசநாடிசூஸ்திரம் | 128 |
| **நந்தீஸ்பரர்** | |
| * கருக்கடை | 300 |
| நிகண்டு | 300 |
| ஞானசூஸ்திரம் | 100 |
| **இராமதேவர்.** | |
| * வைத்தியம் | 1000 |
| ஜாலம் | 800 |
| நிகண்டு | 500 |
| கருக்கடை | 500 |
| முப்புக்குருநூல் | 300 |
| **யாக்கோபு.** | |
| வைத்தியம் | 760 |
| செந்தூரகாண்டம் | 300 |
| சுண்ணக்காண்டம் | 300 |
| **கருவூரார்** | |
| வைத்தியநொண்டி | 360 |
| *பலதிரட்டு வைத்தியம் | 300 |

| | |
|---|---|
| குருநூல சூஸ்திரம் | 105 |
| **சுந்தரானந்தர்** | |
| குருநூல | 110 |
| அதீதசூஸ்திரம் | 104 |
| வாதசூஸ்திரம் | 100 |

## அச்சிட்டுத் தயாரிலிருக்கும்
### சாஸ்திர புஸ்தகங்கள்

| | |
|---|---|
| அகஸ்தியர் திருமந்திரம் | 1500 |
| ஷை வயித்யரத்னச்சுருக்கம் | 360 |
| ஷை வயித்திய பூரணம் | 205 |
| யூகிமுனிவர் | 800 |
| நந்திகருக்கடை | 300 |
| சட்டைமுனிமுன்பின்ஞானம் | 200 |
| பிர்மமுனிகருக்கடை | 380 |
| இராமதேவர் சிவயோகம் | 200 |
| சுப்பிரமணியர்ஞானம் | 500 |
| ஷை ஞானம் | 200 |
| புலிப்பாணி வைத்தியம் | 500 |
| பரிபாஷை வைத்திய அகராதி | |
| அகஸ்தியர் பூரணசூஸ்திரம் | 216 |
| ஷை குருநாடி | 235 |
| ஷை கன்மகாண்டம் | 300 |
| ஷை ஜாலநிகண்டு | 200 |
| ஷை பரிபூரணம் | 400 |
| ஷை நாலுகாண்டவைத்தியம் | 1200 |
| ஷை வலாதி | 600 |
| ரோமரிஷி வைத்தியம் | 500 |
| போகர் சரக்குவைப்பு | 800 |
| தேரையர் வைத்தியம் | 1500 |
| நந்திகலைக்கியானம் | 1000 |
| பாலவாகடம் | 1200 |
| அ. பாலவாகடம் | 300 |
| திருமூலர் வைத்தியம் | 600 |

மற்ற சிலவரை சாஸ்திரங்களெல்லாம் யோகஞான சாஸ்திரத்திரட்டின் 18,பாகங்களிலும் சேர்த்திருக்கிறது வாங்கிப்பாருங்கள்.

இ. ராம. குருசாமிக்கோன்,
புஸ்தகஷாப்,புதுமண்டபம், மதுரை.

